# சங்க இலக்கியங்களில் குழந்தைகள்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**க. முருகன்,** எம்.ஏ., எம்.எட்.,
(Ref.No: 34030 / Ph.D.2 / Tamil / F.T / October - 2011)

நெறியாளர்
முனைவர் **த. சுவாமிநாதன்,** எம்.ஏ., எம்.ஃபில்.,பி.எட்., பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர்.




**தமிழ்த்துறை,**
**அரசினர் கலைக்கல்லூரி (தன்னாட்சி),**
**கும்பகோணம் - 612 002 .**

**செப்டம்பர் - 2016**

# நெறியாளர் சான்றிதழ்

முனைவர் **த. சுவாமிநாதன்,** எம்.ஏ., எம்.ஃபில்.,பி.எட்., பிஎச்.டி.,
**உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,**
**அரசினர் கலைக் கல்லூரி (தன்னாட்சி),**
**கும்பகோணம் – 612 002 .**

“**சங்க இலக்கியங்களில் குழந்தைகள்**” என்னும் தலைப்பில் செல்வன் **க. முருகன்** என்பார், என்னுடைய மேற்பார்வையில் முனைவர் பட்டத்திற்காக ஆய்வு மேற்கொண்டு அவரால் அளிக்கப்பெறும் இந்த ஆய்வேடு, ஆய்வாளரின் சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**கும்பகோணம்** **நெறியாளர் ஒப்பம்**
**-09-2016**

# ஆய்வாளர் உறுதிமொழி

**க. முருகன்,** எம்.ஏ., எம்.எட்.,
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அரசினர் கலைக் கல்லூரி (தன்னாட்சி),
கும்பகோணம் – 612 002 .

"**சங்க இலக்கியங்களில் குழந்தைகள்**" என்னும் தலைப்பில், கும்பகோணம் அரசினர் கலைக்கல்லூரி (தன்னாட்சி), தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர் முனைவர் **த. சுவாமிநாதன்** அவர்களின் மேற்பார்வையில், முனைவர் பட்டத்திற்காக ஆய்வு மேற்கொண்டு அளிக்கப்பெறும் இந்த ஆய்வேடு, என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**கும்பகோணம்,** **ஆய்வாளர் ஒப்பம்**
**-09-2016.**

**நெறியாளர் ஒப்பம்** **துறைத்தலைவர் சான்றொப்பம்**

# நன்றியுரை

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்வதற்கு இசைவு வழங்கிய திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கும், கும்பகோணம் அரசினர் கலைக்கல்லூரி (தன்னாட்சி)., தமிழ்த்துறையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வினை செய்வதற்கு எனக்கு அனுமதி வழங்கிய கல்லூரி **முதல்வர்** அவர்களுக்கும் என் நன்றியைத்தெரிவித்துக்கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்வதற்கு உரிய நேரத்தில் நிதி நல்கி ஊக்கப்படுத்திய செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்திற்கு என் நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

தமிழ் நலங்கெழுமிய தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **அ. குணசேகரன், எம்.ஏ., எம்.எட்., பிஎச்.டி.,** அவர்கள் அவ்வப்போது ஏற்பட்ட ஐயங்களைத் தீர்த்து, ஆய்வுப் போக்கின் நெறியை உணத்தியமைக்கு என் மனமார்ந்த நன்றி.

எனது ஆய்வு முயற்சியினை ஏற்றுக்கொண்டதோடு தக்க கருத்துரைகளை வழங்கி, ஆய்வேடு செழுமையாக அமைய ஊக்கமும், ஆக்கமும் கொடுத்து நெறிபடுத்திய மதிப்பிற்குரிய, அன்பிற்கினிய அறிவுசால் பெருந்தகை நெறியாளர் முனைவர் **த. சுவாமிநாதன், எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,** அவர்களுக்கும் என் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வினைச் செம்மை செய்வதற்கு உதவும் வகையிலமைந்த ஆய்வு வல்லுநர்க்குழு உறுப்பினர்கள் முனைவர் **ந. மாதவி** இணைப்பேராசிரியர், எஸ்.கே.எஸ்.எஸ், கலைக்கல்லூரி, திருப்பனந்தாள், முனைவர் **சொ. குமரேசமூர்த்தி** உதவிப்பேராசிரியர் திரு.வி.க. அரசு கலைக்கல்லூரி, திருவாரூர்ஆகிய இருவருக்கும் நன்றி உரித்தாகும்.

ஆய்விற்குத் தேவையான நூல்களை அளித்திட்ட கல்லூரி பொது நூலகர் **ஆர். சங்கரலிங்கம்** அவர்களுக்கும், தமிழ்த்துறை நூலகப் பொறுப்பாசிரியர் முனைவர் **வீ.பாஸ்கர்** அவர்களுக்கும், பாரதிதாசன் பல்கலைக்கழகம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி, புதுவைப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகம்,

*கும்பகோணம் அரசு பொது நூலகம், சிவகுருநாதன் செந்தமிழ் நூலகம், கோபால்ராவ் நூலகம் முதலான நூலகப் பொறுப்பாளர்களுக்கு நன்றியினைத் தெரிவிப்பதில் மகிழ்கிறேன்.*

*என்னை இப்பூவுலகிற்கு அளித்து வளர்த்து ஆளாக்கி உயர்கல்வி வரை கல்விச்செல்வம் பெற அரும்பாடுபட்ட என்னுடைய பெற்றோர்கள்* **திரு. பொ. கந்தசாமி, திருமதி க. ஆபரணம்** *அவர்களுக்கும் எனக்கு பல நிலைகளில் உதவிபுரிந்த சகோதரர்கள்* **க.பரமசிவம் – ஜெயராணி, க. செல்வக்குமார் – கண்ணகி, க.சின்னமணி – ராதிகா** *ஆகியோருக்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.*

*எனக்கு என்னென்ன தேவை என்பதை எனக்கு முன்பாக உணர்ந்து என்னுடைய தேவைகளை முழுமையாக முழுமனதோடு அன்பினூடாக உதவிகள் பலவற்றைச் செய்து இந்த ஆய்வேட்டை சிறந்த முறையில் வளர்த்தெடுப்பதற்கு பல்வேறு வகையிலும் துணைநின்ற என் ஆசிரிய நண்பர்கள்* **இரா. பாஸ்கர், செ. முருகானந்தம், சீ. குமார், இரா. இராஜேஷ், க. பூவனநாதன், ஜெ. இராஜகுமார், ப.விஜயகுமார், செ. வசந்தி, நா.பேபி, செ.கவிதா** *ஆகியோருக்கு நன்றியைக் கூறிக்கொள்வதில் மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றேன்.*

*ஆய்வேட்டினைச் சிறந்த முறையில் தட்டச்சு செய்து வடிவமைத்துக் கொடுத்த கும்பகோணம்* **“அருணை ஜாப் சென்டர்’’** *நிறுவனத்திற்கு நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.*

**(முருகன். க)**

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் பொற்காலம் என்று போற்றப்படுவது சங்க காலமாகும். சங்க இலக்கியம் பாட்டு, தொகை என இரு வகைப்படும். பாட்டு என்பது பத்து நெடும்பாடல்களின் தொகுப்பாகிய பத்துப்பாட்டையும், தொகையானது தனித்தனி பாடல்களின் தொகுப்பாகிய எட்டுத் தொகையையும் குறிக்கும். இத்தொகுப்புகளில் சங்க கால மக்களின் அக வாழ்வும் புற வாழ்வும் விவரிக்கப்பட்டுள்ளன. இலக்கியங்களின் நோக்கமும் பணியும் மக்கள் வாழ்வினை நெறிப்படுத்துவதேயாகும். அவ்வகையில் சங்க இலக்கியங்களும் தமிழர்களின் வாழ்வை நெறிப்படுத்தத் தோன்றியவை.

இலக்கியங்கள் தோன்றிய காலத்திலேயே குழந்தை இலக்கியங்கள் தோன்றின என்றாலும் அவை வாய்மொழி வழக்காகப் பாதுகாக்கப்பட்டு வந்துள்ளன. குழந்தை இலக்கியம் ஒரு தனித்த இலக்கியத்துறையாகும். குழந்தைகளுக்கான வாழ்க்கை வரலாற்று இலக்கியத் தேவை உணரப்பட்ட நிலையில் அவை உரைநடை வடிவிலும் கவிதை வடிவிலும் படைக்கப்பட்டுள்ளது. மேலும், குழந்தை இலக்கியம் என்றாலே குழந்தைகள் மட்டும் படிப்பதற்காக எழுதுவது குழந்தை இலக்கியமன்று. படிப்பதற்கு ஏதுவாக படைக்கப்படுவதே குழந்தை இலக்கியமாகும். சிறுவர் இலக்கியம் எனவும் அழைக்கலாம். மொழி நடையிலும் பொருளிலும் நூல் அமைப்பிலும் பிற இலக்கியங்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகும். படிப்போரின் வயதைப் பொறுத்து எளிமையான முறையில் அமைப்பது அவ்வளவு எளிதன்று. ஏனெனில் இதற்கு பொறுமை, பொறுப்பு, புலமை இருப்பது தேவையானது. இத்தகைய சிறப்பு வாய்ந்த குழந்தைகள் பற்றி சங்க இலக்கியங்களில் பதியப்பட்டுக் குழந்தைகளின் எதிர்கால வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைந்துள்ளது எனலாம்.

மக்களுடைய வாழ்க்கை பல பருவங்களை உடையது. அவற்றில் இன்றியமையாததது குழந்தைப் பருவமாகும். சங்ககாலம் முதலாக மக்கள் வாழ்க்கையின் நிறைவாகக் கருதப்பட்டு வருவது குழந்தைப்பேறு ஆகும். அப்பேறு குழந்தை செல்வத்தை பெற்றவர்களையே சமுதாயம் முழுமை பெற்றவர்களாகப் போற்றுகிறது.

*குழந்தைப்பேற்றினைப் பெறாதவர்கள் சமூகத்தினால் இன்றளவும் புறக்கணிக்கப்படுகின்றனர். இதன் சிறப்புக்கருதி தமிழ் இலக்கியங்கள் குழந்தைகளைச் சிறப்பித்துப் பேசுகின்றன. குழந்தைப்பேற்றின் சிறப்பினைக் காட்டும் வகையில் வள்ளுவரும் மக்கட்பேறு எனும் ஓர் அதிகாரத்தை அமைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.*

**ஆய்வுத் தலைப்பு**

*இந்த ஆய்வு சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள குழந்தைகள் குறித்த செய்திகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஆகவே,* ***"சங்க இலக்கியங்களில் குழந்தைகள்''*** *என்பதைத் தலைப்பாகத் தேர்ந்து ஆய்வு நிகழ்த்தப்பெறுகிறது.*

**ஆய்வு நோக்கம்**

*சங்க இலக்கியங்களில் குழந்தைகளின் வளர்ப்புமுறை, உணவுமுறை, விளையாட்டு, குழந்தைகளின் உளவியல் கூறுகள் இவை முதலானப் பதிவுகளை வெளிக்கொணர்வது இந்த ஆய்வின் நோக்கமாகும்.*

**கருதுகோள்**

*சங்க இலக்கியங்களாகிய பாட்டு, தொகை என்ற இரண்டிலும் குழந்தைகளைப் பற்றிய கருத்துக்கள் விரிவாகவும் செறிவாகவும் இடம் பெற்றுள்ளன. குழந்தை வளர்ப்பின் முக்கியத்துவத்தை எடுத்துரைப்பது இந்த ஆய்வின் கருதுகோளாகும்.*

**முதன்மை ஆதாரம்**

*சங்க இலக்கியத்துள் கிடைத்துள்ள 2381 பாடல்களும் இந்த ஆய்விற்கு முதன்மை ஆதாரங்களாகின்றன.*

**துணைமை ஆதாரங்கள்**

*ஆய்விற்குச் சங்க இலக்கியம் தொடர்பான நூல்கள், ஆய்வு நூல்கள், ஆய்வுக் கோவைகள், ஆய்வேடுகள், ஆய்வுக் கட்டுரைகள் முதலியவை துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.*

**ஆய்வு முன்னோடிகள்**

*சங்க இலக்கியம் தொடர்பாகப் பல்வேறு ஆய்வுகள் இதுவரையில் வெளிவந்துள்ளன. இவற்றுள் ஆய்வு முன்னோடிகளாகச் சில ஆய்வுகளைக் குறிப்பிடமுடியும்.*

**ஆய்வேடு**

1. *ராமலெட்சுமி, எஸ்.,* ***குழந்தைகளின் ஆளுமை வளர்ச்சியில் குழந்தை இலக்கியங்களின் பங்கு*** *முனைவர் பட்ட ஆய்வேடு, பாரதிதாசன் பல்கலைக்கழகம் 2010.*
2. *சிவசுப்பிரமணியன், எஸ்.,* ***சங்க இலக்கியத்தில் மழலை,*** *இளமுனைவர் பட்ட ஆய்வு, சென்னைப் பல்கலைக்கழகம்.1994.*

**நூல்கள்**

1. *சிவகாமசுந்தரி, சு.,* ***சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம்,*** *நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்., சென்னை - 1995.*
2. *சிவகாமி. ச.,* ***சங்கத் தமிழியல்,*** *மாதவி பதிப்பகம், சென்னை- 1999.*
3. *சௌந்தரபாண்டியன், எஸ்.,* ***தமிழில் பிள்ளைத் தமிழ் இலக்கியம்,*** *ஸ்டார் பிரசுரம், சென்னை – 1989.*
4. *வளவன். சா.,* ***பிள்ளைத் தமிழின் தோற்றமும் வளர்ச்சியும்,*** *அண்ணாநகர், சென்னை – 1997.*
5. *வெள்ளைவாரணன், க.,* ***சங்க காலத் தமிழ் மக்கள்****, (நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி), சென்னை – 1950.*

**கட்டுரைகள்**

*தாயம்மாள் அறவாணன், (க.ஆ).,* ***சங்க இலக்கியத்தில் குழந்தை,*** *ச.அகத்தியலிங்கம், ஏ. ஞானமூர்த்தி, வே. சுப்பிரமணியன், மெ. சுந்தரம் (ப.கு)., ஆய்வுக்கோவை, இந்திய தமிழாசிரியர் பல்கலைக்கழக மன்றம், மதுரை – 1989.*


**ஆய்வு அணுகுமுறை**

*ஆய்வுத் தரவுகளின் அடிப்படையில் கருத்துக்கள் தொகுக்கப்பெற்று வகுக்கப்பட்டுள்ளன. அவற்றை ஆய்விற்கு உட்படுத்துவதற்குத் தொகுப்பாய்வு முறை, பகுப்பாய்வுமுறை, விளக்கமுறை ஆய்வு, உளவியல் ஆய்வு ஆகிய ஆய்வு அணுகுமுறைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.*

**ஆய்வேட்டின் அமைப்பு**

***“சங்க இலக்கியங்களில் குழந்தைகள்’’*** *என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு முன்னுரை – முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,*

1. ***தமிழ் இலக்கியங்களில் குழந்தைகள் - ஒரு பார்வை***
2. ***குழந்தை வளர்ப்பு முறைகள்***
3. ***குழந்தை விளையாட்டுக்கள்***
4. ***குழந்தையின் உளவியல் கூறுகள்***

என்பனவாகும்.

**இயல் : 1**

குழந்தை சொல் விளக்கம் - சிறுவன் சிறுமி சொல் விளக்கம் - தொல்காப்பியத்தில் குழந்தை சொல்லாட்சி - தொல்காப்பியத்தில் குழந்தையை குறிக்கும் பெயர்கள் - தொல்காப்பியத்தில் மாந்தரின் இளமை பெயர்கள் - குழந்தை வயது வரையறை - குழந்தையும் இலக்கியமும் - குழந்தை இலக்கியமும் தொல்காப்பியமும் - தொல்காப்பியத்தில் குழந்தையைப் பற்றிய செய்திகள் - அகப் பாடல்களில் குழந்தையைப் பற்றிய செய்திகள் - புறப்பாடல்களில் குழந்தையைப் பற்றிய செய்திகள் - அற இலக்கியங்களில் குழந்தைகள் பற்றியச் செய்திகள் - இடைக்கால இலக்கியத்தில் குழந்தையைப் பற்றிய கருத்துக்கள் ஆகியவை இந்த இயலில் ஆராயப்படுகின்றன.

**இயல் : 2**

'குழந்தை வளர்ப்பு முறைகள்' என்ற இயலில் குழந்தை வளர்ப்பு - மகிழ்ச்சி - பேறும் பொறுப்பும் - மனிதப் பண்புகள் மலர்வது-பெற்றோர்களை இணைக்கும் குழந்தைகள் - பெற்றோரின் பிரச்சனையைத் தீர்க்கும். குழந்தைகள் - குழந்தை வளர்ப்பு ஓர் அன்புப் பணி, அன்பின் வெளிப்பாடு - தாய்ப்பால் குழந்தைக்கு அமுது - அன்பு அரவணைத்து ஆதரிக்கிறது - அன்பு உடனிருந்து உரையாடுகிறது - பாராட்டி ஊக்குவிப்பது - பெற்றோர்களே முதல் ஆசிரியர்கள் தாய்மைக்குப் பெருமை தரும் குழந்தைபேறு - குழந்தைப் பேறு வேண்டுதல் - குழந்தை வளர்ப்பு அறிமுகம் - இன அடிப்படைகளில் வளர்ப்பு முறைகள் - குறவர்களின் குழந்தை வளர்ப்பு - ஆயர், பரதர், உமணர், தச்சர், பாணர் ஆகியோருடைய குழந்தை வளர்ப்பு - பயிற்று வித்தல் - கல்விப் பயிற்றுவித்தல் - சொல் பழகுதல் - தாளம் பயிற்றுவித்தல் - அணிகலன்கள் அணிவித்தல் குழந்தை வளர்ப்பு முறையில் அச்சுறுத்தும் போக்கு - குழந்தைகளின் இயல்புகள் - தந்தையின் பண்பை ஒத்திருத்தல் - தாயின் மேல் அதிக அன்பு - குழந்தையின் தோற்றம் - மழலைப்பேச்சு - மென்மைத் தன்மை - முறுவல் - பகுத்தறிவு - உணவு முறைகள் - உணவு வகைகள் - உண்ணும் அழகு - குழந்தை வளர்ப்பில் தலைவனின் பங்களிப்பு - குழந்தை

வளர்ப்பில் செவிலித்தாயின் பங்களிப்பு - மகப்பேறு காலத்தில் தாயும் சேயும் பேணப்பட்ட முறை - குழந்தைகளுக்குப் பெயரிடுதல் - குழந்தையை நாட்டுப்பற்றுடன் வளர்த்தல் -போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

**இயல்: 3**

'குழந்தை விளையாட்டுக்கள்' என்ற இயலில் விளையாட்டின் தோற்றம் - இலக்கணம், அகராதிகள் தரும் விளக்கம். குழந்தை விளையாட்டுக்கள் என்னும் மூன்றாவது இயலில் விளையாட்டின் தோற்றம் - இலக்கணம், அகராதிகளின் விளக்கங்கள், திணை நிலையில் அமைந்துள்ள விளையாட்டுக்கள் - குறிஞ்சித்திணையில் கவண் எறிதல், பறை முழக்குதல், பந்து விளையாட்டு, ஊசல் விளையாட்டு, சிற்றில் இழைத்தல் போன்ற விளையாட்டுக்கள் குழந்தைகளுக்குத் தரும் மகிழ்ச்சி, வளர்ச்சி மற்றும் முல்லை, மருதம், நெய்தல், பாலை நிலத்தில் வாழும் குழந்தைகளின் விளையாட்டுக்களும் அவர்களுடைய விளையாட்டுக்கள் அமையும் விதம் ஆண் குழந்தைகளின் விளையாட்டுக்கள் பெண் குழந்தைகளின் விளையாட்டுக்கள் அந்தந்த நிலங்களுக்கேற்ப குழந்தைகளின் வாழ்க்கைச் சூழலுக்கேற்ப விளையாட்டுக்கள் அமைந்த விதத்திணையும் திணைவாயிலாக ஆராயப்பட்டுள்ளன.

**இயல் : 4**

'குழந்தையின் உளவியல் கூறுகள்' என்ற இயலில் உளவியல் - உளவியல் விளக்கம் - உளவியல் குறித்த அறிஞர்களின் விளக்கம் - உளவியலின் வகைகள் – உளவியல் அணுகுமுறைகள் அணுகுமுறை பயன்கள் - தற்கால உளவியல் அறிஞர்கள் - உளவியலின் வளர்ச்சி - குழந்தை உளவியல் - குழந்தை உளவியல் விளக்கம் - தாய் குழந்தை உறவு - குழந்தையும் சமூக உறவும் - குழந்தை பிறரைச் சார்ந்து இருத்தல் - தாலாட்டு - ஐம்புல உணர்வுகள் - குழந்தைப் பருவத்தின் படிநிலை வளர்ச்சி - தாயின் உளவியல் தன்மை - குழந்தைகளின் பருவச் செயல்பாடுகள் - விரல் சூப்புதல் - நகம் கடித்தல் - இடது கைப்பழக்கம் - குழந்தைகளின் மனவளர்ச்சி அமைதல் - குழந்தை உளவியல் விளக்கம் - ஆளுமை வளர்ச்சி - ஆளுமையின் படிநிலைகள் - ஆளுமை வளர்ச்சியில் பெற்றோரின் பங்களிப்பு - பிறழ்நிலை - பல்வேறு பட்ட நடத்தைகள் - முதலியவை எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

## முடிவுரை

ஒவ்வொரு இயல்களிலும் கண்டறியப்பட்ட மெய்ம்மைகள் தொகுக்கப் பெற்று ஒவ்வொரு இயலின் பின் தொகுப்புரையாகத் தரப்பட்டுள்ளன. முடிவுரையில் இயல் தொகுப்புரைகள் ஆராயப்பெற்று முடிவுகள் பதிவு செய்யப்பெற்றுள்ளன.

இந்த ஆய்விற்குப் பயன்பட்ட நூல்களின் விவரங்கள் துணைநூற்பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளன. ஆய்வுத் தொடர்பாக இதழ்களில் வெளியான ஆய்வாளரின் கட்டுரைகள் பின்னிணைப்பில் இடம் பெற்றுள்ளன.

# இயல் - 1

## தமிழ் இலக்கியங்களில் குழந்தைகள் - ஒரு பார்வை

*இலக்கியங்கள் மக்களால் மக்களுக்காக, மக்களுடைய வாழ்க்கை நெறி முறைகளைச் சுற்றியே தொன்றுதொட்டு இன்று வரை படைக்கப்பட்டு வருகின்றன. மனித வாழ்வின் சிறப்பியல்புகளுள் மொழியும் ஒன்று. மொழி தோன்றிய காலத்திலிருந்து இன்றளவும் பல்வேறு வகையான இலக்கியங்கள் படைக்கப்பட்டுள்ளன. மனிதன் படைத்த பல கலைகளுள் இலக்கியக் கலை சிறப்பு வாய்ந்தது. இலக்கியக்கலை கற்றோர்க்கு மட்டுமேயன்றிக் கல்லாதோர்க்கும் ஓர் இன்றியமையாத் தேவையாக விளங்குகிறது. தமிழ் இலக்கியங்களின் சிறப்பினைப் பல நூற்றாண்டுகளுக்கு முன் படைக்கப்பட்டு, இன்றளவும் மக்களால் பெரிதும் மதித்துப் பாராட்டப்படும் சங்க நூல்கள், இடைக்காலக் காவியங்கள், தற்கால இலக்கியங்கள் ஆகியவை இதனைப் பிரதிபலிக்கின்றன.*

*வாழ்க்கையில் ஏற்படும் துயரங்களை மறப்பதற்கு மனிதப் பிறவிக்கு கிடைத்த அரும்பெருஞ்செல்வம் குழந்தைச் செல்வமாகும். பொன்னாலும் பொருளாலும், புகழாலும் உலகம் போற்றுகின்ற உயர்வை ஒருவர் பெற்றாலும் கொஞ்சி மகிழ்வதற்கு குழந்தை இல்லையென்றால் அவர்களின் வாழ்க்கையில் வெறுமையே மிஞ்சும். இதனை,*

**''பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த**
**மக்கட்பே றல்ல பிற''**[1]

*என்று குழந்தைச் செல்வத்தின் இன்றியமையாமையைப் பற்றி பல ஆயிரம் வருடங்களுக்கு முன்பே வள்ளுவர் கூறிச் சென்றுள்ளார். உலகில் ஈடு இணையற்ற செல்வம் குழந்தைச் செல்வமாகும். கள்ளம் கபடமற்ற பருவம் குழந்தைப் பருவமாகும். குழந்தைகளைப்பற்றி தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள சிறப்புகளை ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.*

## குழந்தை சொல் விளக்கம்

*குழந்தை என்ற சொல்லிற்கு இலக்கண இலக்கியங்களும் அகராதிகளும் பல்வேறு சொற்களைக் கையாளுகின்றன.*

**''ஊலீடைன – குழந்தை – லிப்கோ ஆங்கிலத் தமிழ் அகராதி குழந்தை – கைப்பிள்ளை – தமிழ் லெக்சிகன் அகராதி குழ இளமை, முருகு, இளது மதுரைப் பேரகராதி''[2]**

*குழந்தையை குழவி, சிறுவன், பிள்ளை, புதல்வர், மக்கள், மகவு, மகன் என்று தொல்காப்பியமும், மகன், குழவி, மக்கள் என திருக்குறளும் குழந்தையை குறிப்பதை அறியமுடிகின்றது.*

*பிள்ளை என்ற சொல் பொதுவாக மனிதப் பிறப்புக்கும் பருவம் அடைவதற்கும் இடைப்பட்ட இளம் வயதினரைக் குறிக்கும், இது ஆண் பெண் ஆகிய இரு பாலருக்கும் பொதுவான பெயராக இருக்கிறது.*

*சங்க கால மக்கள் குழந்தையைக் குறிக்கும் வகையில் குழவி, புதல்வர், புதல்வன், சிறுவர், மக்கள் மகன் போன்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளனர். சான்றாக,*

**'தாயில் தூவாக் குழவி போல'**
**'பொன்போற் புதல்வர்'**
**'புகழ்சால் புதல்வன்'**
**'சிறுவர் பயந்த செம்மலோர்'**
**'மயக்குறு மக்கள்'**
**'ஈன்றபொழுதின் பெரிது உவக்கும் தன் மகனை'**

*'சங்க இலக்கியத்தில் குழந்தை என்ற சொல் எங்கும் இல்லை' என்கிறார் தா. அறவாணன்.*

*"குழந்தை என்ற சொல்லை முதன்முதலில் இலக்கியத்தில் புகுத்தியவர் கம்பர்தான்''[3] என்று குறிப்பிடுகிறார். குழந்தை என்ற சொல் 12-ஆம் நூற்றாண்டில் கம்பர் இயற்றிய கம்பராமயணத்தில் இடம்பெற்றுள்ளதனை,*

**''குழந்தை வெண்மதிக் குடுமிய நெடுவரைக் குறுக்கிய குலத்தோனை''[4]**

*என்றும்,*

**‘‘குழந்தையை யுயிர்த்த மலடிக்கு உவமை கொண்டான்’’[5]**

போன்ற பாடலடிகளில் காணக்கிடக்கின்றன.

**சிறுவன் – சிறுமி சொல் விளக்கம்**

தமிழ் லெக்சிகன் என்ற அகராதி ‘சிறுவன்’ என்ற சொல்லிற்கு,

**இளையன், சிறியன், மகன், சிறுபுள்ளடி வகை**

என்ற நான்கு பொருளையும் ‘சிறுமி’ என்பதற்கு,

**இளம்பெண்,**
**மகள்**

என்ற இரு பொருளையும் குறிப்பிட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் இளம் பருவத்தினரைச் சுட்டுவதற்கு இளையர் என்ற சொல்லைக் கையாண்டுள்ளனர்.

**‘‘மின்னிழை மகளிர் இளையரும் மடவரும் உளரே’’[6]**

என குழந்தைப் பருவ வயதினரை இளையர் என்று சுட்டுவதை அறியலாம். மேலும்,

**‘‘தச்சன் செய்த சிறுமா வையம்**
**ஊர்ந்தின் புறராயினும் கையின்**
**ஈர்ந்தின் புறாவும் இளையோர்’’[7]**

என்ற பாடல் அடிகளாலும் இளையர் என்ற சொல் வழக்கில் இருந்தமையை அறியமுடிகிறது.

மாந்தரின் இளமைப் பெயரைக் குறிக்க தொல்காப்பியம் கூறியுள்ள ‘குழவி’ என்ற சொல் சங்க இலக்கியத்தில் குழந்தையைக் குறித்துள்ளது. இதனை,

**‘‘தாயில் தூவாக் குழவி போல’’[8]**

என்ற புறநானூற்றுப் பாடல் வரியின் மூலம் அறியமுடிகிறது. மழலை என்ற சொல்லும் குழந்தையைக் குறிப்பதாகும். இதனை,

**‘‘குழலினிது யாழினி தென்பதம் மக்கள்**
**மழலைச்சொற் கேளா தவர்’’[9]**

ஈண்டு வள்ளுவர் குழந்தையைக் குறிக்க மழலை என்ற சொல்லைக் கையாண்டதோடு அக் குழந்தைகளின் பேச்சின் மென்மையையும் இனிமையையும் கூறியுள்ளார். இக்குறட்பாவினைக் கொண்டு ‘மழலை’ என்ற சொல் குழந்தையைக் குறிப்பதை அறியலாம்.

## தொல்காப்பியத்தில் குழந்தை சொல்லாட்சி

**‘‘மழவும் குழவும் இளமைப்பொருள்’’[10]**

என்று குறிப்பிடுகிறது.

‘குழ’ என்பது இளமை என்னும் பொருளில் உரிச்சொல்லின் பகுதியாக இடம்பெறுகிறது. ‘தை’ எனில் பெயர் விகுதி. எனவே, ‘குழந்தை’ என்ற சொல் இளமையுடையது என்று பொருள்படுகின்றது. இக்காலப் பேச்சு வழக்கில் பாப்பா, பாலன், பாலகன், பையன், சிறுவன், இளையான், பிள்ளை, புத்திரன், குழந்தை போன்ற சொற்களைப் பயன்படுத்துகின்றனர். பாப்பா, பிள்ளை போன்ற சொற்கள் பெண் குழந்தைகளையும் பாலன், பாலகன், பையன், சிறுவன், இளையன், புத்திரன் போன்ற சொற்கள் ஆண் குழந்தைகளையும் குறிக்கப் பயன்படுத்துகின்றனர். ‘சிறுவர்’ என்ற சொல் இரு பாலரையும் குறிக்கும் பொதுச் சொல்லாகக் காணப்பட்டாலும், பெரும்பான்மை ஆண் குழந்தைகளை குறிப்பிடுவதாக அமையும். ‘குழந்தை’ என்னும் சொல் இரு பாலரையும் குறிக்கும் பொதுச்சொல்லாக அமைத்துக்கொள்ளலாம்.

## தொல்காப்பியத்தில் குழந்தையைக் குறிக்கும் பெயர்கள்

குழந்தை என்ற சொல்லைக் குறிக்க இலக்கியங்களில் பல பெயர்கள் பயின்று வந்துள்ளன. தொன்மையைத் தன்னகத்தே கொண்ட தொல்காப்பியத்திலும் அத்தகைய பெயர்கள் இடம் பெற்றுள்ளன.

**“புதல்வற் பயந்த புனிறுநீர் பொழுதின்’’[11]**

என்ற நூற்பாவின் மூலம் குழந்தையைக் குறிக்கும் ‘புதல்வன்’ என்ற சொல் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**''மகன்தாய் உயர்பும் தன் உயர்பாகும்''**[12]

என்னும் நூற்பாவின் மூலம் 'மகன்' என்ற பெயரையும்,

**''இருவகைப் பட்ட பிள்ளை நிலையும்''**[13]

எனும் நூற்பா அடியில் 'பிள்ளை' என்ற பெயரையும் தொல்காப்பியர் கையாண்டுள்ளார். இவற்றிலிருந்து குழந்தையைக் குறிக்கும் புதல்வன், மகன், பிள்ளை ஆகிய பெயர்கள் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளதை அறியலாம்.

தொல்காப்பியம் தொடங்கி இன்று வரையிலான இலக்கியங்களில் குழந்தைகளைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. குழந்தைகளுக்குக் கதைகள் என்றால் மிகவும் பிடிக்கும். கதைகள் குழந்தைகளுக்காகக் கூறப்பட்ட வாய்மொழிக் கதைகள் இருத்தல் வேண்டும். தொல்காப்பியம் இன்றைய குழந்தைப் பாடல்களுக்கு வழிவகுக்கும் வகையில் பிசி என்னும் விடுகதைப் பாடல்களைப் பற்றிய குறிப்புகளையும், பொருள் மரபில்லாப் பொய்ம்மொழியாகிய கற்பனைக் கதைகள் பற்றிய குறிப்புகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது.

ஒரு குழந்தை பிறந்தவுடன் அக்குழந்தைக்குச் சமுதாயத்தில் செய்யும் சடங்கு வழிமுறைகளைப் பற்றியும், குழந்தைகளின் சிறப்புகளைப் பற்றியும், மக்கட்பேறு பெற்ற தாய்க்குச் செய்யும் பணிவிடை பற்றியும் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

**''புதல்வர் பயந்த புனிறுசேர் பொழுதில்**
**நெய்யணி மயக்கம் புரிந்தோர் நோக்கி**
**ஐயர் பாங்கினும் அமரர் சுட்டியும்**
**செய் பொருள் சிறப்பொடு சேர்தல்''**[14]

என்னும் நூற்பாவில் பிறந்த புதல்வனின் முகம் காணல், ஐம்படை பூட்டுதல், பெயரிடுதல், தாய் எண்ணெய் நீராடல், பாட்டன் பாட்டியர் குழந்தைக்குப் பெயரிடல், இரவலர்க்கு பரிசில் வழங்கல், குழந்தையைக் காக்க தெய்வ வழிபாடு செய்தல் போன்ற நிகழ்வுகளைக் கூறியுள்ளார். மேலும்,

**''தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை''**[15]

என்றும்,

**''சிறத்த புதல்வனை நேராது புலப்பினும்''**[16]

என்றும்,

**‘‘இன்னகைப் புதல்வனை தழீஇ இழைணயிந்து’’[17]**

*என்று குழந்தைகளைப்பற்றிய பதிவுகளை தொல்காப்பியர் சுட்டிச் சென்றுள்ளார்.*

**தொல்காப்பியத்தில் மாந்தரின் இளமைப் பெயர்கள்**

*ஒல்காப் புகழ்கொண்ட தொல்காப்பியம் உயிரினங்களின் இளமைப் பெயர்களைச் சுட்டுமிடத்து மாந்தரின் இளமைப்பெயரையும் சுட்டியுள்ளது.*

**‘‘குழவியும் மகவும் ஆயிரண்டல்லவை**
**கிழவ அல்ல மக்கட் கண்ணே’’[18]**

*எனக் குழவி, மகவு என்ற இரண்டினை மட்டுமே மாந்தரின் இளமைப் பெயராகச் சுட்டியுள்ளது. சங்க இலக்கியங்களில் பல இடங்களில் குழவி என்ற சொல் பயின்று வந்துள்ளது. இந்த குழவி என்ற சொல்லே பின்னாளில் குழந்தை என்று பொருள் கொள்ளப்பட்டது எனலாம். மேலும் குழவி, சேய், மழலை ஆகிய மூன்று சொற்களையும் பால் வேறுபாடின்றி ஆண், பெண் இருபால் குழந்தைகளையும் பொதுவாகக் குறிப்பதற்குப் பயன்படுத்தியுள்ளனர்.*

**குழந்தை – அறிஞர்கள் கூறும் வயது வரையறை**

*குழந்தையின் வயது அதன் பேச்சு நடத்தை, மொழிவளர்ச்சி, மன வளர்ச்சி ஆகியவற்றினை அடிப்படையாகக்கொண்டு தீர்மானம் செய்யப்படுகிறது.*

*“ஐக்கிய நாடுகள் சபையின் குழந்தை உரிமைப்பிரகடனம் பதினெட்டு வயது வரை உள்ள அனைவரும் குழந்தைகளே’’[19] என்றும் “குழந்தை எழுத்தாளரான பூவண்ணன் பதினாறு வயது வரையுள்ளவர்களைக் குழந்தைகள்’’[20] எனலாம். “மூன்று வயது முதல் சுமார் பதினாறு வயது வரையுள்ள குழந்தைகளுக்காகப் படைக்கப்படுவது குழந்தை இலக்கியம்’’[21] என்று கூறுவர்.*

*“இந்தியத் தொழிற்சாலைகள் சட்டம் 1948 பதினான்கு வயது உட்பட்டவர்களைக் குழந்தைகள் என்று குறிப்பிடுகிறது. இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 24 ஆம் பிரிவும் பதினான்கு வயதுக்கு உட்பட்டவர்களைக் குழந்தைகள் என்று கூறுகிறது. பதினான்கு வயதுக்கு உட்பட்டவர்கள் குழந்தைகளாகக் கருதப்படுவதால் அவர்களுக்கு நடைபெறும் திருமணம் குழந்தைத் திருமணம் எனப்படுகிறது.’’[22]*

"பதினான்கு அல்லது பதினைந்து வயது வரை உள்ளவர்களைச் சிறுவர்கள்''[23] என அழைக்கின்றது. ஆங்கிலக் கலைக்களஞ்சியம். "பிறப்பிற்கும் பருவ வயதிற்கும் இடைப்பட்ட வயதினை உடையவர்களைக் குழந்தைகள்''[24] என்கிறது. குழந்தைகளின் ஐம்புலன்களின் வளர்ச்சியையும், மனவளர்ச்சியையும் மனதில் கொண்டு குழந்தைகளின் வயதினைப் பன்னிரெண்டு''[25] எனக் குறிப்பிடுவர். "குழந்தையின் அறிவு வளர்ச்சியை மட்டும் அடிப்படையாகக் கொண்டு குழந்தைகளின் வயதினைப் பதினான்கு எனக் குறிப்பிடுகின்றார்''[26] "வளர்ச்சிப் பருவங்களின் அடிப்படையில் பன்னிரெண்டு வயதுக்கு உட்பட்டவர்களைக் குழந்தைகள்''[27] "பன்னிரெண்டாம் ஆண்டு வரையுள்ள பருவத்தைக் குழவிப்பருவம் எனலாம்''[28] "பிறந்தது முதல் குமரப்பருவம் அடையும் வரை அதாவது ஏறக்குறையப் பதினோராண்டுகள் வரையிலான காலம் குழந்தைப்பருவம்''[29] என்கிறது குழந்தை உளவியல். மேற்கண்ட அறிஞர்களின் கூற்று வழி குழந்தையின் அறிவு, வளர்ச்சி ஆகியவற்றின் அடிப்படையில் பிறப்பு முதல் பதினைந்து வயது வரையிலான வயதினை குழந்தைக்குரிய வயதாகக் கொள்ளலாம்.

## குழந்தை பருவத்திற்கான வயது வரம்பு

குழந்தைப் பிறந்ததிலிருந்து ஒரு குறிப்பிட்ட வயது வரை குழந்தைப் பருவம் என்ற நிலையில் இருக்கின்றது. பிறப்பிலிருந்து 5 வயதுவரை இருப்பவரை குழந்தை என்றும் ஐந்து வயதிற்கு மேற்பட்டவர்களை சிறுவர், சிறுமியர் என்று அழைப்பது நமது தொன்றுதொட்ட மரபாகி இருந்து வருகிறது. இருப்பினும் குமரப் பருவம் எய்தும் வரை அதாவது முன் குமரப் பருவம் வரையிலான நபர்களை நாம் குழந்தைகள் என்றும் அப்பருவத்தை குழந்தைப் பருவம் என்றும் கூறுகிறோம்.

"ஒரு பாடப் புத்தகத்தை மகிழ்ச்சியுடன் புரட்டிப் பார்க்கக் கூடிய, அல்லது உரக்கப் பிடிக்கப்பட்ட ஒரு கதையைக் கேட்கக் கூடிய பருவம் முதல், பதினான்கு அல்லது பதினைந்து அகவை வரையிலுள்ள இளம் வயதினரைக் குழந்தைகள் என அழைக்கலாம்''[30] எனப் புதிய பிரித்தானிக்காகக் என்ற கலைகக்களஞ்சியம் குறிப்பிடுகின்றது. குழந்தையின் உள்ள வளர்ச்சி அடிப்படையில் குழந்தைப் பருவத்தை குழந்தை இலக்கிய ஆய்வாளர் ஐவகையாகப் பாகுபாடு செய்துள்ளார். அவர் பன்னிரெண்டு முதல் பதினான்கு அகவையினரை ஐந்தாம் நிலையினரெனக் குறிப்பிட்டுள்ளார்.

சங்க இலக்கியங்கள் அறிவியல் நோக்கோடு ஒவ்வொரு வயதினரையும் குறிக்க குழவி, சேய், சிறுமி, சிறுவர், இளையோர், குறுமகள் என்று தனித்தனியே பெயரிட்டு குறிக்கின்றது. இவர்களின் வயது வரம்பு சங்க இலக்கியங்களில் குறிப்பிடவில்லையெனினும் இவர்களின் செயல்கள், விளையாடும் விளையாட்டுகள், தாய்மார்கள் இவர்களுக்கு கொடுக்கும் உணவு இவர்களுக்கும் சமூகத்திற்கும் இடையேயுள்ள உறவு ஆகியவற்றைக்கொண்டு இவர்களின் வயது வரம்பினை நம்மால் ஊகித்தறிய முடிகின்றது.

குழந்தை பருவத்திற்கான வயது வரம்பினை "அறிவியலில் ஏழு வயது முதல் பதினெட்டு வயது வரை உடையோரை இளம் வயதினராக, சிறுவராகக் குறிக்கின்றனர். இவருள்ளும் பதினான்கு வயது வரம்பு வரை அடங்குவோர் குழந்தைகளாகவும் அதற்கு மேற்பட்டோர் இளம் வயதினராகவும் குறிக்கப்படுகின்றனர்.''[31] என்று குறிப்பிட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் குழவி, சேய், மழலை இம்மூன்று சொற்களும் பிறப்பு முதல் ஒரு வயது வரையுள்ள குழந்தைகளை பால் பாகுபாடு பற்றி பொதுவாக பயன்படுத்தியுள்ளனர் என்பதற்குச் சங்க இலக்கிய பாடல்கள் சான்றாக அமைகின்றன.

பாட்டியல் நூல்கள் ஆண், பெண் குழந்தைகளின் வளர்ச்சி நிலையினைப் பல பருவங்களாகப் பிரித்து, ஒவ்வொரு பருவத்திற்கான வயது வரையறையினைக் கூறுகிறது. ஒன்றிலிருந்து ஏழு வயது வரையுள்ள ஆண் குழந்தையினைப் 'பாலன்' எனவும், 'பாலன் யாண்டே யேழென மொழிப' பத்து வயதிற்குட்பட்டவர்களை மீளி என்றும் 'மீளி யாண்டே பத்தியை காறும்' பதினான்கு வயதிற்குட்பட்டவர்களை 'மறவோன்' என்றும் 'மறவோன் யாண்டே பதினான் காகும்', பதினைந்து வயதிற்குட்பட்டவர்களை 'திறலோன்' எனவும் 'திறலோன் யாண்டே பதினைந்தாகும்' பதினாறு வயதிற்குட்பட்டவர்களை திறலோன் எனவும் கூறுகிறது.

பெண் குழந்தைகளின் பருவத்திற்கான வரையறையில், ஒன்று முதல் எட்டு வயது வரை உள்ளவர்களை 'பேதை' என்றும் 'பேதைக் கியாண்டே யைந்துமுத லெட்டே' ஒன்பதிலிருந்து பத்து வயது வரை பெதும்பை எனவும் 'பெதும்பைக் கியாண்டே யொன்பதும் பத்தும்' பதினொன்று முதல் பதினாறு வயது உள்ளவர்களை மங்கை எனவும், 'மங்கைக் கியாண்டே பதினொன்று முதலாத், திரண்ட பதினா லளவுச் சாற்றவும்' என்றும் பதினைந்து வயதிற்கு மேற்பட்டவர்களை மடந்தை எனவும் கூறுகிறது.

## குழந்தை இலக்கியமும் தொல்காப்பியமும்

குழந்தைகளுக்கான பாடல்களும் கதைகளும் ஏட்டுவடிவம் பெறாமல் வாய்மொழி இலக்கியமாகவே வழிவழியாகப் போற்றப்பட்டு வந்துள்ளன. இவை பற்றிய செய்திகள் தமிழின் தொன்மை வாய்ந்த இலக்கண நூலாகிய தொல்காப்பியம்,

**''பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே**
**அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்**
**வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்**
**நாற்பே ரெல்லை அகத்தவர் வழங்கும்**
**யாப்பின் வழிய தென்மனார் புலவர்''**[32]

என்று பாட்டு முதலாக முதுசொல் ஈறாகச் சொல்லப்பட்ட ஏழு நிலத்தினும் வளவிய புகழையுடைய சேர, சோழ, பாண்டியன், என்னும் மூவரும் தமிழ் நாட்டவர் வழங்கும் தொடர் மொழிக்கண் வரும் மொழி யாப்பு பற்றிக் கூறுகின்றது. இதற்கு விளக்கங் கூறும் உரைகாரர், எனவே யாப்பாவது பாட்டுயாப்பு, உரையாப்பு, மொழியாப்பு, நூல்யாப்பு, பிசியாப்பு, அங்கதயாப்பு, பழமொழியாப்பு என ஏழுவகைப்படும் என்கிறார். இதன்படி குறித்த பொருளை முடிய நாட்டும் தன்மை படைத்த யாப்பின் வகைகளுள் மொழியாப்பு என்பது ஒன்று என்பது தெளிவாகின்றது. பாட்டும் உரையும் நூலும் பிசியும் அங்கதமும் பழமொழியும் இன்றும் வழக்கிலிருக்க நாம் காண்கிறோம். தொல்காப்பிய நூற்பாவில் வாய்மொழி எனக் குறிப்பிடப் பட்டிருக்க, உரைகாரர் அதனை மொழியாப்பு என வகைப்படுத்தியுள்ளமை ஆராயத்தக்கது.

வாய்மொழி இலக்கியங்கள் ஏட்டு வடிவம் பெறாமையாற் பிற நூல்களில் மேற்கோள்களாக எடுத்தாளப் பெறும் நிலை அவற்றிற்குக் கிட்டவில்லை. ஆனால், குழந்தையைப் பற்றிய பல செய்திகளை ஆங்காங்கே பதிவு செய்துள்ள சங்கப்பாடல்களில் இவை பற்றிய செய்திகள் எடுத்தாளப் பெற வாய்ப்பு இருந்தும், அவை இடம் பெறவில்லை. எடுத்துக்காட்டாக, ஒரு நற்றிணைப் பாடற்காட்சியை இங்கு எடுத்துக் காட்டுவது பொருந்தும். சோறுண்ண மறுக்கும் தலைவியின் குழந்தைப் பருவ நிகழ்ச்சி ஒன்று பாடலில் எடுத்துக்காட்டப்படுகிறது. 'பூவையொத்த மெல்லிய கோல் ஒன்றைச் செவிலி குழந்தையின் மீது அடிப்பது போல் பாவனை செய்து 'உண்ணுவாய் உண்ணுவாய்' எனக் கூறும் நிகழ்ச்சியைக் காண்கிறோம். இச்சூழலில்,

**''காக்கைக்கு ஒருவாய் குருவிக்கு ஒருவாய்**
**கொக்குக்கு ஒருவாய் என் கண்ணுக்கு ஒருவாய்''**[33]

*என்ற வாய்மொழிப் பாடல் இன்றைய தாய்மாரால் பயன்படுத்தப்படுகிறது. இதுபோன்ற வாய்மொழிப்பாடலை ஒத்த கருத்து பற்றிய குறிப்பு நற்றிணைப் பின்வரும் பாடலில் காணப்படுகிறது.*

**''பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்**
**விரிகதிர்ப் பொன்கலத்து ஒருகை ஏந்திப்**
**புடைப்பில் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்**
**உண்ணென்று ஓங்குபு புடைப்பு''**[34]

*இன்று நம் தாய்மார் குழந்தைகளுக்குச் சோறூட்டும் பொழுது, இது அம்மா வாய், இது அப்பா வாய், இது அக்கா வாய் என்று சொல்லிச் சோற்றை உருண்டைகளாக்கி வைத்துப் பின் ஒவ்வொரு உருண்டையாக எடுத்துக் குழந்தைக்கு ஊட்டுவதுண்டு. குழந்தையும் மிக்க மகிழ்ச்சியுடன் ஒவ்வொரு கவளத்தையும் ஒவ்வொருவர் பெயரைச் சொல்லியதும் வாங்கி உண்டு விடுகிறது. இந்த நிலைய ஒத்த காட்சியாக அகநானூற்றுப் பாடல்,*

**''பால்பெய் வள்ளஞ் சால்கை பற்றி**
**என்பா குண்டனை யாயி னொருகால்**
**நுந்தை பாடும் உண்ணென் வூட்டி''**[35]

*இந்தக் காட்சியை அகப்பாடல் விளக்குகின்றது. செவிலித்தாய் பால் பெய்யப்பெற்று நிரம்பியுள்ள பொற்கிண்ணத்தைப் பற்றிக்கொண்டு குழந்தைக்குப் பாலூட்டுகிறாள். இப்போது நீ பருகியபால் என் கூறாகும், அதனை உண்டுவிட்டனை. ஆதலால், மற்றொருமுறை இதோ இப்பால் உன் தந்தையின் கூறாகும். இதனையும் உண்' என்று கூறிச் செவிலி பாலூட்டும் காட்சி மேற்கூறிய பாடலில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.*

*குழந்தைகளுக்குரிய கதைகளைப் பற்றிய குறிப்பு ஒன்றைத் தொல்காப்பியம் நமக்கு உணர்த்துகிறது.*

**''பாட்டிடை வைத்த குறிப்பி னானும்**
**பாவின் றெழுந்த கிளவி யானும்**
**பொருள்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்**
**பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்று**
**உரைவகை நடையே நான்கென மொழிப''**[36]

என்னும் தொல்காப்பிய நூற்பாவுக்கு உரை எழுதியுள்ள நச்சினார்க்கினியர் உரைநடையின் வகைகளாகப் பாட்டிடை வைத்த குறிப்பு, பாவின்று எழுந்த கிளவி, பொருள் மரமில்லாப் பொய்ம்மொழி, பொருளோடு புணர்ந்த நகைமொழி என்னும் நான்கையும் குறிப்பிடுகின்றார். இவற்றுள் பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி என்பதற்கு விளக்கங்கூற வந்த நச்சினார்க்கினியர், 'பொருள் முறைமையின்றிப் பொய்யாகத் தொடர்ந்து கூறுவன என்றவாறு' எனக் கூறிச் சான்றாக, 'ஓர் யானையுங் குதிரையுந் தம்முள் நட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறு செய்தனவென்று அவற்றுக்கிடையாம் பொருள் பட்டதோர் தொடர்நிலையாய் ஒருவனையொருவன் கற்று வரலாற்று முறைமையான் வருகின்றன' என்று எடுத்துக்காட்டுகிறார். ஒருவனையொருவன் கற்று வரலாற்று முறைமையான் வருபவையே வாய்மொழி இலக்கியம் என்பது ஈண்டு எடுத்துக் கூறத்தக்கது.

இந்நூற்பாவின் உரையில் விலங்குகளைப் பாத்திரமாகவுடைய கதையொன்றாதலால் இவைபோன்ற கதைகள் குழந்தைகளுக்காகக் கூறப்பட்ட வாய்மொழிக் கதைகளாகவே இருத்தல் வேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது. அடுத்து, பொருளொடு புணர்ந்த நகைமொழி என்பதற்கு, 'பொய்யெனப்படாது, மெய்யனப்பட்டு நகுதற்கேதுவாகுந் தொடர்நிலை யானும் என்றவாறு' என நச்சினார்க்கினியர் விளக்கந் தருகின்றார். இவ்வகை உரை நடைக்குச் சான்றாக,

**''சிறுகுரீஇயுரையும், தந்திர வாக்கியமும் போல்வன'**
**எனக்கூறி, இவை 'பொய்யெனப்படாது**
**உலகியலாகிய நகை தோன்றுதலின்' என்னும்**
**விளக்கந் தருகின்றார். மேலும் இவ்விருவகை**
**உரைநடையும் செவிலிக்கே உரியது என்னுங் குறிப்பு**
**ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே**
**யொன்றே யார்க்கும் வரைநிலை யன்றே''**[37]

என்னும் நூற்பாவில் அமைந்துள்ளது. இதற்கு விளக்கங்கூறும் நச்சினார்க்கினியர், 'இது மேனின்ற அதிகாரத்தான், இறுதி நின்ற இரண்டன் பகுதியுமாகிய ஒன்று செவிலிக்கேயுரித்து' என்று கூறி, செவிலி இவ்வகை உரைநடையைப் பயன்படுத்தியதை அறிய முடிகின்றது.

கற்பியலில், மகப்பேறு பெற்றுச் சிறப்பெய்தி, ஈன்றணிமை சேர்ந்த காலத்தில், எண்ணெய் ஆடும் தலைவியை முகமன் கூறுவதற்கு முனிவர் மாட்டும், தேவர்கள் புதல்வனைப் பாதுகாத்தற் பொருட்டும் சிறப்புகள் செய்யப்படும் என்னும் செய்தியை ஒரு நூற்பா விளக்குகிறது. 'பிறந்த புதல்வனின் முகம் காண்டால், ஐம்படை பூட்டுதல், பெயரிடுதல், தாய் எண்ணெய் நீராடல், பாட்டன் பாட்டியர் குழந்தைக்குப் பெயரிடல், இரவலர்க்குப் பரிசில் வழங்கல், குழந்தையைக் காக்க இல்லுறை தெய்வ வழிபாடு செய்தல் ஆகிய சிறப்புகள் இக்காலத்திலுள்ளன போலவே தொல்காப்பியர் காலச் சமுதாயத்திலும் இருந்து வந்துள்ளது என்பது புலனாகிறது.

தொல்காப்பியம் இன்றைய குழந்தைப் பாடல்களுக்கு வழிவகுக்கும் பிசி என்னும் விடுகதைப் பாடல்களைப் பற்றிய குறிப்புகளையும், பொருளொடு புணர்ந்த நகைமொழியாகிய நகைச்சுவைக் கதைகள், வேடிக்கைக் கதைகளைப் பற்றிய குறிப்புகளையும், பொருள் மரபில்லாப் பொய்மொழியாகிய கற்பனைக் கதைகள் பற்றிய குறிப்புகளையும் தன்னகத்தே கொண்டுள்ளமையை இங்கு எண்ணிப் பார்க்கத்தக்கது.

**குழந்தையின் நடை**

குழந்தையின் தளர்நடையும், இனிமையான மழலைச் சொற்களும் பெற்றோருக்கு இன்பம் தருகின்றன. குழந்தையைத் தழுவும் போது அது தம் கைகளால் பெற்றோரின் நெற்றி, கன்னம் முதலியவற்றைத் தழுவி அவர்க்கு இன்பம் செய்கிறது. இதனை,

> **''கிளர்மணி ஆர்ப்பச் சா அய்ச் சா அய்ச் செல்லும்**
> **தளர்நடை காண்டல் இனிது**
> **ஐய தாமரு நோக்கினை அத்தத்தா என்னும் நான்**
> **அம்புலி காட்டல் இனிது**
> **ஐய திங்கட் குழவி வருகு என யான் நின்னை**
> **அம்புலி காட்டல் இனிது''**[38]

குழந்தைகள் நிலாவையும் நிலாவின் பால் போன்ற ஒளியையும் விரும்பி அதன் முன்பு விளையாடுதல் உண்டு. அத்தன்மையில் தன் மகனுடன் விளையாட வருவாய் என்று நிலவை அழைக்கின்றாள். அவ்வாறு வருவாயானால் உனக்கும் பால் தருவேன் என்று பொய்யை மெய்யாகக் கூறித் தன் குழந்தைக்கு உணவளிக்கிறாள். கையால் செய்த யானையைக் கயிற்றினால் கட்டி இழுத்துக்

*கொண்டு வருக என அழைக்கின்றாள். அத்தா! அத்தா! என்று அழைக்கும் நினது இனிய மொழிகளைக் கேட்பது இனிது என்கிறாள். தலைமகனின் குழந்தையைப் பரத்தை ஒருத்தி கொஞ்சுதலை,*

**''கண்ணம் நுதலும் கவுளும் கலவியார்க்கு**
**பெண்மை எதிரிய அம்கையும் தண் எனச்**
**செய்வன சிறப்பின் சிறப்புச் செய்து''[39]**

*புதல்வனைக் கண்ட பரத்தை நின் கண்ணாலும், நுதலாலும் கதுப்பாலும் நின்னைத் தழுவிய தாயார்க்கும், நின் தந்தைக்கும் தண்ணென நீ செய்யும் சிறப்புகள் போல எமக்குச் செய்வாயாக என வினவுகிறார். பரத்தையும் மழலைச் சொற்கள் காண ஏங்கும் நிலையினை இங்கு காணலாம்.*

*கணவனும் மனைவியும் கருத்தொருமித்த அன்பு கொண்டு உலகம் போற்ற வாழ்வதே இல்லறத்தின் அடிப்படையாகும். அங்ஙனம் தன் மகளும், மருமகனும் வாழ்வது கண்டு உவக்கின்றாள். அதுமட்டுமின்றி அவர்கள் மக்கட்பேற்றினைப் பெற்று வாழ்வது கண்டு செவிலி பேரின்பம் அடைவதனை, .*

**''புணர்ந்த காதலியின் புதல்வன் தலையும்**
**அமர்ந்த உள்ளம் பெரிது ஆகின்றே''[40]**

*தலைவன் தன் மனைவி, மகனுடன் சேர்ந்து மகிழ்ந்திருந்த காட்சியும் ஐங்குறுநூற்றில் காணப்படுகிறது. பாணர் முல்லைப் பண்ணைப் பாட மனைவி முல்லை மலர் மாலையைச் சூடத் தலைவன் தன் மகனுடன் மகிழ்ந்திருந்தான் என்பதனை,*

**''பாணர் முல்லை பாட, சுடர் இழை**
**வாள் நுதல் அறிவை முல்லை மலைய**
**இனிது இருந்தனனே, நெடுந்தகை**
**நுனிநீர் கொள்கைத் தன் புதல்வனோடு பொலிந்தே''[41]**

*என ஐங்குறு நூற்றுப்பாடல் புலப்படுத்துகிறது.*

### அகப்பாடல்களில் குழந்தையைப் பற்றிய செய்திகள்

*சங்க இலக்கியத்தில் அகப்பாடல்கள் கருத்தைக் கவர்வன. நுட்பமான பொருட்சிறப்புடையன விழுமிய கற்பனையோடு விளங்குவன. அப்பாடல்களில் மிகைத் தன்மை இல்லை. மனஉணர்ச்சி இயல்பாக வடிக்கப்பெற்றுள்ளது. படிப்போர் பாட்டோடு ஒன்றுமாறு உணர்ச்சி படிந்து சிறக்கின்றது. இந்த உயர்ந்த*

பாடல்கள் இத்துணை ஆற்றலுடன் விளங்கிட இவை பாடப்பட்ட நாடகமுறை ஒரு காரணம் எனலாம். திணை கைகோள், பொருள்வகை, கேட்போர், களன், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், முன்னம், பொருள், துறை, மாட்டு என்னும் உறுப்புக்களை அமைத்து அகப்பாடலைப் பாடுதல் வேண்டும் எனத் தொல்காப்பியர் இலக்கணம் வகுக்கின்றார்.

ஒரு குறிப்பிட்ட சூழலில் ஒரு குறிப்பிட்ட மாந்தர் கூற்று நிகழ்த்துதல் வேண்டும். இந்த வரையறையையே ஒரு நாடகச் சூழலைத் தெளிவுற உணர்த்துகின்றது. இக்கூற்றினுள் மெய்ப்பாடு விளங்கித் தோன்றும் கூற்றின் பயனும், கூற விரும்பும் செய்தியும் பாடலில் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் கூறப்பெறும். இத்தகைய நாடக உறுப்புகள் ஒவ்வோர் அகப்பாடலிலும் பொருந்தி வருவதால் சங்க அகப்பாடல்கள் ஒருவகை நாடகப்பாடல்கள் ஆகின்றன. அவ்வகையில் சங்க இலக்கியங்களில் காணலாகும். நாடக உரையாடலைத் தனிஉரையாடல், உரையாடல், தனிமொழி, குழுஉரையாடல் என நான்கு நிலைகளில் வகைப்படுத்த இயலும்.

இந்நிலையில் ஒத்த உணர்வுடையவராகக் கேட்போர் அமையாதபோது பேசுவோர் தம் எண்ணங்களை வெளிப்படுத்த விரும்புவதில்லை. அதனால் தனிமைச்சூழல் இத்தகு மாந்தரிடம் எண்ணஓட்டம் மிகுதியாவதற்கு வாய்ப்பாகின்றது. அவ்வகையில் தலைவி தன்னுடைய தனிமொழியை பேசும்போது பல்வேறு இடங்களில் தன் மகன் குறித்த செய்தியையும் ஆங்காங்கே கூறுகின்றாள். இந்நிலையில் சங்க இலக்கியத்தில் குறிப்பாக தலைவியின் நெஞ்சோடு கிளத்தல் பாடல்களில் காணலாகும், புதல்வன் குறித்த செய்தி தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

**புதல்வனும் நெஞ்சும்**

தலைவன் பரத்தையிடம் சென்று மகிழ்ந்து வந்தான். பின்பு தலைவியின் ஊடலைப் போக்கப் பல வாயில்களை அனுப்பிப் பார்த்தான். ஒன்றும் பயனளிக்கவில்லை. தன் மகனை வாயிலாக்க முயன்றான். அந்த நிலையில் தலைவி, தன் மகனை வாயிலாக்கக் கொண்டு தலைவன் வந்தால் தான் வாயில் மறுக்க இயலாதே என அஞ்சித் தன் நெஞ்சிடம் பேசும் இடங்களும் உண்டு அச்சம் என்பது தீமையை எதிர்பார்த்தல், அல்லது தீய அணுகுமுறை காரணமாக மனத்தை நடுங்கச் செய்யும் துன்ப உணர்ச்சி, அருவருப்பு இவற்றின் கலவையாகும்

என்னும் கூற்றும் இங்கு குறிப்பிடத்தக்கது. இருப்பினும், தலைவனின் பரத்தை மீது கொண்ட அருவருப்பும், அவன் பிரிவை தாங்க இயலாத உணர்ச்சியும் இணைந்து புதல்வன் வாயிலாக வரும்போது அச்சத்தை உண்டாக்குகின்றன.

தெருவில் விளையாடி வருவதற்காக தோழியரோடு தன் புதல்வனை அனுப்பிய தலைவி அவன் மிகுந்த நேரம் கழித்து வரவே, தோழியரிடம் அது குறித்து வினவினாள் அப்பொழுது பரத்தை வீட்டிலிருந்து தன் வீட்டிற்குத் திரும்பிய தலைவன் சற்று விலகி நின்று அவள் கூறுவதைக் கேட்டுவிட்டு தன் மகனிடம் பேசுவதைப்போல் நெஞ்சிடம் அழகாகப் பேசும் பெண்கள் அணிவித்து அனுப்பிய அணிகலன்களைக் காட்டிக் கொண்டு எனக்கு முன்னால் வந்த மகன் மிகுந்த துன்பத்தை மகளிர் செய்த வடுக்களைக் காட்டிக்கொண்டு வந்துநிற்பது வெந்த புண்ணில் வேல் எறிவது போல இருக்கிறது. எனக் கூறி மேன்மேலும் வருந்தி நின்றாள். இதனை,

**''அம்தீம் சொல் நல்லார் அணிந்த கலங்காட்டி**
**முந்தை இருந்து மகன் செய்த நோய்த்தலை**
**வெந்தபுண் வேலெறிந் தற்றால்! வடுவொடு**
**தந்தையும வந்து நிலை''**[42]

எனும் கலித்தொகைப் பாடலடிகள் சுட்டும்.

தந்தை அணிந்திருந்த வளையலை மகன் அணிந்திருப்பதைக் கண்ட தலைவி மிகுந்த சினம் கொண்டாள். அதனால் தன் புதல்வனைத் திட்டுவதுப் போலத் தன் நெஞ்சிடம் 'இவன் நமக்கு தொடர்பில்லாதவனின் நட்பு மகளிர் கொடுத்தவற்றை ஏற்றுக்கொண்டிருக்கிறானே, இவன் பெரிதும் வெறுக்கத் தக்கவன் சிறுவனே! யாரோ அயலாரிடம் அவர்கள் என்னை மதிக்காமல் தர, நீ வாங்கி அணிந்து கொண்ட மோதிரம் எங்கே? காட்டு, நறாம்பூவைப் போன்ற சிறந்த விரலுக்குப் பொருத்தமாக, ஆண் சுறாமீனின் உருவம் பொறித்த மோதிரத்தை அணிந்தவர்களுடைய கருத்தைத் தெரிந்து கொண்டேன். அது மன்மதனின் கொடியாகிய மீனைப் பதித்தது போல இவனுடைய தந்தையின் மார்பு அலங்காரத்தில் பதித்து அவனை யான் அடிமை கொள்வேன் என்பதை இவ்வாறு அறிவித்திருக்கிறாள்.

புதல்வரை குடிக்கு விளக்கு போன்றவன் என்று போற்றினர். சங்க கால மக்கள் இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் பெறுவோர் புதல்வர்களைப் பெற்ற பெற்றோர் ஆவார் என்றனர்.

**''கடவுட் கற்பொடு குடிக்கு விளக்கு ஆகிய**
**புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்**
**நன்னராட்டிக்கு அன்றியும் எனக்கும்**
**இனிது ஆகின்றால் சிறக்க நின் ஆயுள்''**[43]

*சங்க இலக்கியங்களிலுள்ள அகப்பாடல்களில் மழலை மொழி பெற்றோர்க்கு இன்பம் பயப்பதும், பாலூட்டும் தாயார் நிலவைக் காட்டிக் குழந்தைக்குப் பாலூட்டுவதும், நிலா முற்றத்தில் குழந்தைகள் பந்தும் கழங்கும் ஆடுவதுமாகிய செய்திகள் குறிப்பிடப்படுகின்றன.*

*குழந்தையின் 'அத்தத்தா' என்னும் மழலைமொழி கேட்டு மகிழும் நிலையை ஒழித்துப் பரத்தை மாட்டுச் சென்று மீண்ட தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி மகனுக்கு உரைத்ததாக அமைந்துள்ள கலிப்பாடல் அடிகள் குழந்தையின் மழலை மொழியினைத் 'தேமொழி' எனப் பகர்கின்றது. மாற்றூர்க்கிழார் மகனார் கொற்றங் கொற்றனார், முல்லைத்திணையில் வினை முடித்து மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லிய துறையில் பாடியுள்ள பாடலில், குழந்தைக்காகத் தாய் அம்புலியை அழைக்கும் செய்தி காணப்படுகின்றது.*

*'முகிழ்கின்ற நிலவொளியாலே விளங்குகின்ற திங்கள் குழவியே! பொன்னாலியன்ற தாலியையணிந்துள்ள என் மகனோடு விளையாட நினைந்து நீயும் இங்கு வருவாயானால் நினக்கும் யான் பால் பருகத் தருவேன் காண்!' என்று கூறி, அவ்விளந்திங்களை ஒருக்கணித்து நோக்குகின்ற அமர்த்த கண்களையுடையளாய் அத்திங்களை வருக வருக எனத் தன் விரல்களையசைத்து அடுத்தடுத்து அழைத்துத் தன இடையிலிருக்கிற மகன் பொருட்டும் பொய்யை மெய்போலக் கூறி நிற்கும். தலைவியின் நிலை இப்பாடலில் அமைந்துள்ளது. திங்களாகிய குழவியைத் தன் மகனுடன் விளையாட வர வேண்டுமென்று அழைத்துத் தன் மகனுக்கு அம்புலியைக் காட்டி மகிழும் தலைவியின் மகிழ்ச்சியைக் கலிப்பாடல் காட்டுகின்றது. நிலா முற்றத்தில் பந்துங் கழங்கும் ஆடும் செய்தியைச் செவிலியின் கூற்றாக வரும் அகப்பாடல் புலப்படுத்துகின்றது.*

**குழந்தைச் செல்வத்தின் சிறப்பு**

ஒருவரது வாழ்வில் எத்தனையோ செல்வங்கள் இருந்தாலும் மக்கட் செல்வம் இல்லையென்றால் அவர்கள் வாழ்வு பாலைவனமாகி விடும். மகப்பேற்றின் இன்றியமையாமைக் குறித்து புறநானூற்றில் பின் வரும் பாடல் வரிகள் தெளிவுப்படுத்துகின்றன.

**''பொறையிலா அறிவு, போகப்**
**புணர்வு இலா இளமை மேவத்**
**நலம் இல்லாப் புலமை நல்நீர்ச்**
**சிறையிலா நகரம் போலும்**
**சேயிலாச் செல்வம் அன்றே''[44]**

என்ற பாடல் வரிகளில் மகப்பேற்றில்லாத ஒருவனது செல்வமானது பல நிலைகளில் பயனற்றதாகும் எனக் குறிப்பிடுகிறது. இக்கருத்தைப் புறநானூற்றில் பாண்டியன் அறிவுடை நம்பி வாயிலாகவும் அறியமுடிகிறது.

குழந்தைகள் தளர்நடை பயிலும் பருவத்தில் தச்சனால் செய்யப்பட்ட சிறு குதிரை பூட்டிய சிறிய தேரின் மீது ஏறிச் செலுத்தி இன்பமடைய முடியாமல் போனாலும் அச்சிறுதேரினைக் கையால் உருட்டி இன்பம் காண்பர். சிறுதேர் உருட்டி விளையாடுவது சிறுவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தரும் என்பதை,

**''சிறார் சிறுதேர் உருட்டி விளையாடல்**
**ஊரா நற்றோர் உருட்டிய புதல்வர்''[45]**

**''பொற்காற் புதல்வர் புரலியின்றுரட்டும்**
**முக்காற் சிறுதேர்''[46]**

மேற்கண்ட வரிகள் சிறுதேர் உருட்டி விளையாடியதற்குச் சான்றாக உள்ளதை அறியமுடிகிறது. தலைவன், தலைவியை மறந்து பரத்தையர் வீட்டிற்குச் சென்றுவிட்டான். இதனால் மகன் வாயிலாகத் தன் ஊடலைத் தீர்த்துக் கொண்டாள் என்பதை,

**''அரிபொலி கிண்கிணி ஆர்ப்பு ஓவா அடிதட்ட**
**பாலோடு அலர்ந்த முலை மறந்து முற்றத்துக்**
**கால் வல் தேர் கையின் இயக்கி நடைவயின்றா**
**ஆல் அமர் செல்வன் அணிசால் பெருவிரல்**
**போல, வரும் என் உயிர்''[47]**

எனும் பாடலில் குழந்தை பால் உண்பதையும் மறந்து முற்றத்தில் உருட்டி விளையாடுகின்ற தேரை கையில் தள்ளியவாறே நடைபயின்று கொண்டு நின்றான். இதைக் கண்ட தலைவி முருகனைப் போல் அழகுடையவன் தன் மகன் என்று மகிழ்ந்தாள் என்பதைக் காணமுடிகிறது.

### சிறுவர்களின் வீரம்

ஆண்மகனை ஈன்ற எந்தத் தாயும் அவனை வீரனாகவே எண்ணுவாள் என்பதை, தன் மகன் சிறுவன் என்பதையும் மறந்து துணிவுடன் போருக்கு அனுப்பிய செய்திகளின் வழியாக சிறுவர்கள் விளைாட்டுப் பிள்ளையாக இருந்தாலும் வீரமுடனும் திகழ்ந்துள்ளனர். இதனை,

**''கெடு சிந்தை கடிது இவள் துணிவே**
**மூதில் மகளீரதல் தருமே**
**.........................................................**
**ஒரு மகன் அல்ல இல்லோன்**
**செருமுகம் நோக்கிச் செல்க என்விடுமே''![48]**

என்ற சங்க இலக்கியப் பாடல் ஒன்று சுட்டிக்காட்டுகிறது. மேலும் போர்க்களத்தில் வீரமரணம் அடையும் தருவாயில் உள்ளவர்கள் தம் பிள்ளைகளின் பூப்போன்ற கண்ணை முத்தமிட்டு தம் வருத்தத்தைச் சிறிது போக்கினர் என்பதை,

**''புலவர் பூங்கண் முத்தி மனையோட்கு**
**எவ்வம் கரக்கும் பைதல் மாக்களோடு''[49]**

என்ற புறநானூற்றுப் பாடல் வரிகளின் மூலம் சிறுபிள்ளைகளின் மீது தாய் வைத்திருந்த பாசம் வெளிப்படுகிறது.

### தாயின் அன்பு

தலைவன் பரத்தையர் வீட்டிலிருக்கும் கால கட்டத்தில் கூட அந்த வருத்தம் சிறிதும் இன்றி வருத்தத்தைப் போக்குவதற்காகத் தலைவி வீட்டின் வேலிக்கு அப்பால் நின்று தன் மகனோடு நிலவைக் காட்டி விளையாடிக் கொண்டிருப்பதை,

**''ஐய! திங்கட் குழவி, வருக! என, யான் நின்னை**
**அம்புலி காட்டல் இனிது, மற்று இன்னாதே''[50]**

என்ற இப்பாடலில் ஒரு தாய் தன் மகனிடம் நிலாவைப் பார் என்று கூறி விளையாட்டுக் காட்டி கொண்டிருப்பதாக ஒரு செய்தி காணப்படுகிறது. இன்றைய நவீன உலகத்தில் பல புதுமையான விளையாட்டுக்கள் வந்த போதிலும் சங்க காலம் தொட்டு இக்காலம் வரை நிலவை ஒரு விளையாட்டுப் பொருளாகக் காட்டிக் குழந்தையை மகிழ்விக்கும் பழக்கம் இருப்பதைக் காணலாம். மேலும்,

**''ஐய, காமரு நோக்கினை, 'அத்தத்தா' என்னும் நின்**
**தேமொழி கேட்டல் இனிது; மற்று இன்னாதே**
**உய்வு இன்றி நுந்தை நலன் உணச் சாய்அய்ச் சாஅய்மார்**
**எவ்வநோய் யாம் காணுக்கால்''[51]**

குழந்தைப் பேசும் மழலை மொழியைக்கேட்டு தலைவி இன்பமுறுகிறாள். தலைவி குழந்தை ஈன்ற காலத்தில் தலைவன் புறப்பெண்களை நாடிச் செல்லும் போது தலைவனின் செயல் வருத்தம் தருவதாக அமைகிறது. இந்த சமயத்தில் குழந்தையின் மழலை மொழியானது. தலைவிக்கு இன்பமும் ஆறுதலும் தருவதாக இப்பாடல் அமைந்துள்ளது. எனவே துன்பமான காலத்திலும் பெற்றோர்க்கு குழந்தையின் மழலை இன்பம் தருவதாக உள்ளது.

இதே போன்று மற்றொரு கலித்தொகைப் பாடலில் நிலவைப் பார்த்து குழந்தை பேசுகின்ற அத்தா, அத்தா என்னும் மழலை மொழியைக் கேட்பதைத் தவிர வேறு எதுவும் தனக்கு மகிழ்ச்சியைத் தராது என்று தலைவி கூறுவதை வள்ளுவரும் தன் குறளில்,

**''குழலினிது யாழினி தென்பதம் மக்கள்**
**மழலைச்சொற் கேளா தவர்''[52]**

எனக் கூறியிருப்பதைக் காணும் போது ஒரு பெண் தாயான பின் அவளின் தலைவன் பிரிந்து சென்ற காலத்தில் அவளது வருத்தத்தைப் போக்கும் மாபெரும் சக்தியாகக் குழந்தைச் செல்வம் திகழ்வதை உணர்ந்து கொள்ளமுடிகிறது.

**வறுமையில் குழந்தைகள்**

வறுமை என்பது இப்பூவுலகில் மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் ஏற்படக் கூடிய ஒரு வாழ்வியல் நிலை. பண்டைய காலத்தில் குழந்தைகளும் வறுமையில் சிக்கியதைப் புறநானூற்றில் வரும் பாடல் ஒன்று,

**‘‘ஆடு நனி மறந்த கோடுயர் அடுப்பின்**
**ஆம்பி பூப்பத் தேம்பு பசி உழவாப்**
**பா அல் இன்மையின் தோலோடு திரங்கி**
**இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை**
**சுவைத் தொறும் அழூ உம் தன் மருத்துமுகம் நோக்கி’’[53]**

*என்று பட்டினியினால் பாலில்லாத தாயின், மார்பினைச் சுவைக்கும் குழந்தைகள், பாலுக்குக் கூட வழியின்றிப் பசியினால் வாடித் துன்புற்றுள்ளனர். இவ்வாறு கொடுமையான நிகழ்வுகள் நமது பண்டைய சமூகத்தில் நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகிறது.*

**புறப்பாடல்களில் குழந்தைகளைப் பற்றிய செய்திகள்**

*தமிழர்களின் வீரம், கொடை, பண்பு, போர்நெறி என்று மக்களையும், அரசர்களையும் புகழ்ந்த புறநானூற்றில் குழந்தைகள் பேசும் மழலை மொழியும், செய்யும் செயலும் கண்ணுக்கும் செவிக்கும் உடலுக்கும் இன்பம் தந்து மகிழ்விப்பதை மன்னனே கூறும் பாடலாக புறநானூறு குறிப்பிடுகின்றது.*

**‘‘குறு குறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டுந் தொட்டுங் கல்வியுந் துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்**
**மயக்குறு மக்களை யல்லோர்க்குப்**
**பயக்குறை இல்லை தாம் வாழும் நாளே’’[54]**

*குழந்தைகளின் இயல்பான செயல்களான குறுகுறு என நடந்து, தன்னுடைய சிறு கைகளை நீட்டி, உணவை இட்டும், தொட்டும், என்றெல்லாம் குழந்தைகளின் செயல்களைப் பதிவு செய்துள்ளனர்.*

**‘‘யாழொடுங் கொள்ளா; பொழுதொடும் புணரா;**
**பொருளறி வாராவாயினும் தந்தையர்க்கு**
**அருள் வந்தனவார் புதல்வர் தம் மழலை’’[55]**

*குழந்தையின் மழலை மொழி யாழ் ஓசையை போன்று இனிமையானதும் அல்ல, பொருள் புரிவதும் இல்லை ஆனாலும் குழந்தை பேசுகின்ற மழலை மொழியை அனைவரும் விரும்பிக் கேட்பார்கள் என்ற குழந்தையின் மழலை மொழியின் சிறப்பை ஔவையார் கூறியுள்ளார்.*

*குழந்தைப் பருவத்திலேயே வீரம் செறிந்து விளங்கும் வீரர்களைப் பற்றிய செய்திகளைக் கொண்ட புறப்பாடல்கள் பலவற்றை நாம் புறநானூற்றில் காணலாம். அக்காலக் கல்வி பற்றிய ஆய்வில் நமக்கு வெளிப்படும் அடிப்படைக் கருத்து, போர்க்கல்வியே முதன்மையாகக் கருதப்பட்டது என்பதாகும். இதனைப் புறநானூற்றிலுள்ள பொன்முடியார் பாடல் புலப்படுத்துகின்றது.*

**''ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே ;**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;**
**தண்ணடை நல்கல் வேந்தற்குக் கடனே;**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கி,**
**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே''**[56]

*குழந்தையைப் பெற்று வளர்த்தல் தாயின் கடமை என்றும், தன் குலத்திற்குரிய படைக்கலப் பயிற்சியாகிய கல்வி, அதற்குரிய அறிவு முதலியவற்றால் நிறைந்தவனாகச் செய்தல் தந்தையின் கடமையென்றும், படைக்கலம் செய்து கொடுப்பது கொல்லனுடைய கடனென்றும், வேலைக் கையில் கொடுத்து அவனைப் படைவீரனாக்க வேண்டியது வேந்தனின் கடனென்றும், போர்க்களத்தில் மதயானைகளை வெட்டி வீழ்த்தி வெற்றியுடன் திரும்ப வேண்டியதே அவ்வீரனின் கடனென்றும் அப்பாடல் கூறுகின்றது. இவ்வாறு போர்ப் பயிற்சி முதன்மையாகக் கொடுக்கப்பட வேண்டிய காலச் சூழலையும் புறநானூற்றுப் பாடல்கள் நமக்குத் தெளிவுப்படுத்துகின்றன.*

*அளவு கடந்த மண்ணாசையாலும், தன் நாட்டில் வாழும் குடிகள் வளத்துடன் வாழ்வதற்குப் போதிய இடமில்லாததனால் இடம் சிறிதென்னும் ஊக்க மேலீட்டாலும், 'உலகம் பொது' வெனப் பொறாத் தன்மையாலும், தாமே அரசர்க்கு அரசராகத் திகழ வேண்டுமென்ற உட்கோளின் உந்துதலாலும், அரசுரிமைக்குத் தடையேற்படும் பொழுதும், சொல்லில் அல்லது செயலில் மானக்குறைவு ஏற்படும் பொழுதும், பிறன் ஒருவனுடைய மகளைத் தனக்கு மணம் செய்து கொடுக்குமாறு அரசனொருவன் வற்புறுத்திய விடத்து அம்மகளையுடையான் மறுத்த காரணத்தாலும் சங்க காலத்தில் போர்கள் ஏற்பட்டுள்ளன என்பதை அறியமுடிகின்றது.*

*எனவே சங்ககால அரசர்கள் தம்மக்களின் மறப்பண்பையே துணையாகக் கொண்டு, மறவரின் வீரத்திருவாலேயே தங்கள் அரசாட்சியை நடத்தி வந்தமையால் போர்க் கல்வி அல்லது போர்ப் பயிற்சி அக்காலச் சமுதாயத்தில் முதன்மை பெற்று விளங்கியதன் இன்றியமையாமையை அறிய முடிகிறது. நம்மைப் போல் பழம் பெரு நாகரிகம் படைத்த ஏதென்ஸ், ஸ்பார்டா என்னும் கிரேக்க நகரங்களில் வாழ்ந்த மக்கட் சமுதாயமும் இத்தகைய போர்க் கல்வியையே மக்களுக்குச் சிறப்பாக அளித்து வந்தமை பற்றியும் வரலாறு நமக்கு உணர்த்துகின்றது.*

*புறநானூற்றில் போருக்குச் சென்று வீரம் விளைவித்த சிறுவரின் மனவுறுதி சிறப்பித்துக் காட்டப்பட்டுள்ளது. முதல் நாள் நடந்த போரில் தமையனையும் மறுநாட் போரில் கணவனையும் இழந்து உள்ளம் சோராத தாய், தன் குடியைக் காப்பதற்கு ஒரு மகனையே பெற்றிருந்தாள் எனினும் அம்மகனைப் போருக்கு அனுப்ப தயங்காமல் தன் மகனுக்குப் போர்க் கோலஞ் செய்வித்துப் போருக்கனுப்பும் காட்சியை ஒரு புறப்பாடல் காட்டுகின்றது.*

**‘‘நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென் தோள்,**
**முளரி மருங்கின், முதியோள் சிறுவ ன்**
**படை அழிந்து, மாறினன்’ என்று பலர் கூற,**
**மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்ட என்**
**முலை அறுத்திடுவென் யான்’ எனச் சினைஇ,**
**கொண்ட வாளொடு படுபிணம் பெயரா,**
**செங்களம் துழவுவோள், சிதைந்து வேறு ஆகிய**
**படு மகன் கிடக்கை காணூஉ**
**ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே!’’**[57]

*புறங்காட்டி ஓடாத மேற்கோளையுடைய வீரனின் தாய், தன் மகனின் மாண்பைக் கண்ட பொழுது அவளுடைய வாடிய முலைகள் பாலூறிச் சுரந்தன. போரின்கண் என் மகன் புறமுதுகிட்டு ஓடியிருப்பின் அவனுக்குப் பாலூட்டிய இம்முலையை அறுத்திடுவேன்’ என வஞ்சினம் கூறிப் போர்க்களம் புகுந்து, தன் மகன் மார்பிலே புண்பட்டுச் சிதைந்து வேறாகிக் கிடப்பது கண்டு ஈன்ற பொழுதினும் பெருமகிழ்ச்சி கொண்டாள். ‘நின் மகன் யாண்டுளன்?’ என வினவியவர்க்குப் பதிலுரைக்கும் ஒரு தாய்,*

**‘‘சிற்றில் நல் தூண் பற்றி, ‘நின் மகன்**
**யாண்டு உளனோ?’ என வினவுதி, என் மகன்**
**யாண்டு உளன் ஆயினும் அறியேன், ஒரும்**
**புலி சேர்ந்து போகிய கல் அளை போல,**
**ஈன்ற வயிறோ இதுவோ,**
**தோன்றுவன்மாதோ, போர்க்களத்தானே’’**[58]

*எனும் பாடலில், புலி கிடந்து போகிய கல்முழை போல அவனைப் பெற்ற வயிறே இது; அவன் போர் முனையிடத்துத் தோன்றுவான்’ என்கிறாள். இந்தச் செய்திகள் மறப் பண்புமிக்கு விளங்கும் சங்க காலத் தாய்மாரின் சொல்லையும் செயலையும் விளக்குகின்றன. இவை, சங்க காலச் சிறுவர்கள், தம் தாய்மார்கள் தத்தம் மறப்பண்பினால் ஈன்ற பொழுதினும் பெரிதுவக்கச் செய்தனர் என்பது தெளிவாகிறது.*

*மக்களின் வீரமும், அவ்வீரத்திற்குத் துணையாய் நிற்கும் ஈரமும் அக்காலச் சமுதாயத்தின் அடிப்படைப் பண்புகளாக விளங்கின. அக்காலத்தில் எழுந்த தன்னுணர்ச்சிப் பாடல்களின் தொகுப்பாகப் புறநானூறு விளங்குகின்றது. எத்துணைப் பெருஞ்செல்வராயினும் குழந்தைச் செல்வமில்லாதோர் வாழ்க்கை குறையுடையது என்பதைப் புலப்படுத்தும் பாடல் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. இவ்வாறு மக்கட்பேற்றின் இன்றியமையாமையும், அக்காலத் தாய்மாரின் மறப்பிண்பினையும் புறப்பாடல்கள் நமக்குத் தெளிவாகக் காட்டுவதுடன் அவற்றின் அடிப்படையில் அக்காலத்தில் குழந்தைகள் வளர்க்கப்பெற்ற நிலையையும், குழந்தைகளும் தம் பெற்றோர் கருத்துக்கிணங்க ஒத்துழைத்துச் செயற்பட்ட நிலையையும் காணமுடிகின்றது.*

*இவ்வாறு, பாட்டிலும் தொகையிலும் குழந்தையைப் பற்றிய செய்திகளே கூறப்பட்டிருக்க, குழந்தையைப் பற்றியும் குழந்தைகளின் விளையாட்டுகளைப் பற்றியும் குழந்தைகளுக்கு அன்னை பாடும் பாடல் பற்றிய குறிப்புகளும் பண்டை இலக்கியங்களில் உள்ளன.*

## குழந்தை இலக்கிய வளர்ச்சி

இடைக்கால இலக்கியங்களில் பிள்ளைத்தமிழ் குழந்தைப் பருவத்தை பத்து நிலைகளாகப் பிரித்துக் கொண்டு செங்கீரையாடுதல், தாலாட்டுக் கேட்டல், சப்பாணி கொட்டுதல், அம்புலியை அழைத்தல், முத்தமிடல், தளர் நடை பயிறல் ஆகிய செயல்களைச் செய்யும்படிப் பாட்டுடைத் தலைவனையோ தலைவியையோ வேண்டுகின்ற வகையில் அமைந்துள்ளது.

பிள்ளைப் பருவ விளையாடல்களைக் கடைசி மூன்று நிலைகளாகப் பகுத்துக்கொண்டு ஆண்பாற்பிள்ளைத் தமிழுக்குச் சிற்றில் சிதைத்தல், சிறுபறை கொட்டுதல், சிறு தேருருட்டல் என்னும் விளையாட்டுகளையும், பெண்பாற் பிள்ளைத் தமிழுக்கு அம்மானையாடல், நீராடல், ஊசலாடல் என்னும் விளையாட்டுகளையும் அமைத்துப் பாடும் மரபைக் கொண்டுள்ளது. ஆனால் இவ்வகை இலக்கியங்கள் பாட்டுடைத் தலைவர்களைக் குழந்தையாக பாவித்து அவர்தம் சிறப்புகளை விரித்துப் பாடுவதாக அமைந்துள்ளன ஒவ்வொரு பருவத்திலும் அமைந்துள்ள பத்துப்பாடல்களின் இறுதியடிகள் மட்டுமே அப்பருவ நிலையை நமக்கு உணர்த்துகின்றன.

பாடலில் கூறப்படும் கருத்துக்கள், செய்திகள் அனைத்தும், இலக்கிய திறனுடையோருக்கு மட்டுமே புரியக் கூடிய வகையில் பாடப்பட்டுள்ளது. பாடப் பெற்றோரின் சிறப்புகளைப் புனைந்துரைக்கின்றன. பாட்டுடைத் தலைவனின் பிள்ளைப் பருவச் செயல்கள் ஒரு சில பாடல்களில் இடம் பெறுகின்றன எனினும் பெரும்பான்மைச் செய்திகள் அவர்களின் பண்புநலன் விளக்கங்களாகவே அமைகின்ற நிலையைக் காணமுடிகின்றது.

‘பிள்ளைத் தமிழில் குழந்தை வாழ்வியல் காணப்படுகிறது. ஆயினும் குழந்தைப் பருவத்தினைக் கடந்தவர்களின் செயல்களே புனைந்து கூறப்படுகின்றன. முதிர்ந்த அறிவும் மிகுந்த அனுபவமும் சான்றாண்மையும் நிரம்பப் பெற்ற பெரிய கவிஞர்கள் தங்களின் குழந்தை உள்ளத்தை இழந்துவிடவில்லை என்பதற்குக் காட்டிய சான்றே பிள்ளைத்தமிழ் என விளக்கங் கொடுத்துள்ளார்கள்.

உலா இலக்கியங்கள், பாட்டுடைத் தலைவன் உலா வரும் பொழுது பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் எனப்புலவர்கள் வகுத்துக் கொண்ட எழுவகைப் பருவ மகளிரின் இயல்புகளை விளக்கும் வகையில் அமைந்துள்ளன. எழுவகைப் பருவ மகளிருள் பதிமூன்று

அகவைக்குட்பட்ட பேதை, பெதும்பை, மங்கை ஆகிய பருவத்தினரைக் குழந்தைகளெனக் கொள்ளலாம். இவர்களது குழந்தைப் பருவச் செயல்களும் அழகும் இயல்பும் உலா இலக்கியங்களுள் பாடப்பட்டுள்ளன.

காப்பியங்களில் குழந்தையைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. மணிமேகலை பிறந்ததும் கோவலன் மகிழ்ந்து செய்த அறச் செயல்கள் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப் பட்டுள்ளன. சிந்தாமணியில் சீவகன் பிறப்பும் அவன் பெற்ற கல்விச் சிறப்பும் புனைந்துரைக்கப்பட்டுள்ளன.

இடைக்காலக் காவியங்களிலும் குழந்தை பற்றியச் செய்திகள் பரவலாகக் காணக் கிடக்கின்றன. பெரியபுராணத்தில் சிவனருட் செல்வரான அறுபத்து மூன்று நாயன்மார்களின் குழந்தைப் பருவம் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. கம்பராமாயணத்தில் இராம இலக்குமணரின் குழந்தைப் பருவ நிகழ்ச்சியைக் காணமுடிகின்றது. வில்லிபாரத வாரணாவதாரச் சருக்கம், பாண்டவ கௌரவர்களுடைய பிள்ளைப் பருவச் செய்திகளை எடுத்துக் கூறுகின்றது. நளவெண்பாவில், நளனுடைய மக்களின் அறிவுத்திறம் குழந்தைப் பருவத்திலேயே வெளிப்படும் செய்தி எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. குழவியை இழந்த சந்திரமதியின் புலம்பல் வாயிலாக, லோகிதாசனின் குழந்தைப் பருவச் செயல்கள் அரிச்சந்திர புராணத்துள் குறிப்பிடப் பட்டுள்ளன. தேம்பாவணியில் வளன் சனித்த படலமும், சீறாப்புராணத்தில் நபியவதாரப் படலமும் இன்பம் ஊட்டுவனவாய் அமைந்துள்ளன.

## அற இலக்கியங்களும் குழந்தைகளும்

சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் மக்களின் சிறப்பையும், மக்கட்பேற்றின் உயர்வையும் எடுத்துக் கூறுகின்றன. திருக்குறள், அன்பு நெறியில் இல்லறம் நடத்தப்பெற வேண்டியதன் இன்றியமையாமையை வற்புறுத்துகின்றது. அவ்வன்பு மக்கள் வழியே பயந்து உலகுக்கெல்லாம் அன்பு செய்யும் நிலையை எய்துவிக்கின்றது என்பதை உணர்த்துகின்றது. அன்பே இல்லறத்தின் அடிப்படைப் பண்பு ஆகும்.

அன்பே மக்களை அருளுடையோராய்த் திகழக் கூடிய நெறியில் நடத்திச் செல்லவல்லது. சமயச் சார்பற்ற நூலாக திகழும் திருக்குறள் மனித வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டு தனிமனித வாழ்விற்கு முக்கியத்துவம் கொடுக்கின்றது. குடும்ப வாழ்வின் மேன்மை, மனைவியின் பெருமை, கற்பின் சிறப்பு, புதல்வரை வளர்த்தல், குழந்தைச் செல்வத்தின் இன்றியமையாமை,

பெற்றோரைப் போற்றுதல் போன்ற கருத்துக்கள் பரவலாக திருக்குறளில் பேசப்படுகின்றன. இன்று தமிழில் பல நூல்கள் தோன்றியுள்ளன. அந்நூல்களுக்கு எல்லாம் முன்னோடியாகவும், மணிமுடியாகவும் விளங்குவது திருக்குறளாகும். இத்தகைய திருக்குறளில் குழந்தைக்குரிய செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**மக்கட்பேறு**

அறிவறிந்த மக்கட்பேறு பண்புடைய மக்கட்பேறு எனக் குழந்தையின் இன்றியமையாமை குறித்து விளக்கிச் செல்கிறார். அறிவு மக்களுக்குரிய சிறப்பியல்பு, பண்பு அதனினும் மேம்பட்டதாகும். இத்தகைய அறிவையும், சிறந்த பண்புகளையும் பெற்றவர்கள் தான் தம் குழந்தைகளைச் சிறப்பாக வளர்க்க முடியும்.

உலகெலாம் வாழ ஒரு நூல் செய்த திருவள்ளுவர் இந்தச் சமுதாய அடிப்படை நெருக்க உறவின் மீதுதான் தம்முடைய அறிவுக் கருவூலத்தைச் செம்மையுடன் தெளிவாக நிறுவியுள்ளார். வள்ளுவரின் ஒவ்வொரு சிந்தனையும் பளிங்கு போலத் தமிழ்ப் பண்பாடு, மரபு குறிக்கோள்களை எடுத்துக்காட்டும் தனிச்சிறப்புடன் விளங்கி வருகிறது. தமிழ்ச் சமுதாயத்திற்கு நல்ல மருந்தாகவும் பயன்பட்டு தமிழர்களின் வாழ்வைச் செழிப்பாகவும் இது உதவுகிறது என்றால் மிகையாகாது.

மனிதகுல வளர்ச்சிக்கும், சமூக பெருக்கத்திற்கும் குழந்தையே அடிப்படையானது. மனித வாழ்க்கையில் அனைத்து செல்வங்களை பெற்றிருந்தாலும் குழந்தைப் பேறு இல்லையென்றால் வாழ்ந்து பயனில்லை. ஆகவே வாழ்க்கையில் பெறும் சிறப்புகளில் மக்கட்பேறே சிறப்புடையது என்பதை உணரமுடிகிறது.

“நில, விதைகளுக்கேற்ப பயிரின் இயல்பிருத்தல் போல தாய், தந்தையர் உடல் நலனும் இயல்பும் பிள்ளையின் வளர்ப்புக்கு நீரும் ஒளியும் போன்று’’[59] என்று குழந்தை வளர்ப்பின் முக்கியத்துவத்தை திரு.வி.க. கூறுகிறார். எனவே தன் குழந்தையை அறிவு பண்புடையவனாக பெறுவது ஒருவன் பெறக் கூடிய பதினாறு பேறுகளுள் சிறந்தவொன்றாகும்.

அறிவென்பது ஆற்றல் மிகுந்த ஆயுதம், பண்பாடு அதைப் பாதுகாக்கும் உறை, பண்பாடு சேராத அறிவானது வாழ்வையும், சமுதாயத்தையும் அழிக்கும். எனவே குழந்தைகள் பண்பாடு நிறைந்தவர்களாக வளர்க்கப்படவேண்டும்.

பெற்றோர் பண்பாட்டுடன் வாழ்ந்தால்தான், குழந்தைகள் அவர்களின் அறிவுரைகளை மதிப்பர். எனவே பழி செய்வதில் இன்பம் காணாத நல்ல பண்புகளை உடைய பிள்ளைகளைப் பெறுபவனுக்கு ஒரு பிறவியிலும் தீமை வராது.

செல்வங்களில் சிறந்த செல்வம் மக்கட் செல்வம். அந்த மக்களும் அறிவுடையவராயிருத்தல் வேண்டும். தாய், தந்தையரைக் காட்டிலும் குழந்தை அறிவுடையவராயிருத்தல் பெற்றவர்களுக்கும், மற்றவர்களுக்கும் பெருமை சேர்க்கக்கூடிய செயலாகும். பிறன் பொருளை விரும்பாத அறிவு ஒருவனிடத்தில் இருக்குமானால் செல்வம் தானே வந்து சேரும் பல்துறை சார்ந்த நூல்களை, ஆழமாகவும், நுண்மையாகவும் கற்றாலும் அக்குழந்தையிடத்தில் இயல்பான அறிவே மேலோங்கி நிற்கும்.

அறிவுடையவர்கள் தாம் எல்லாம் உடையவர்கள். அறிவில்லாதவர்கள் எவ்வளவு செல்வம் பெற்றிருப்பினும், எத்தகைய உயர் பதவியில் இருப்பினும் மன மகிழ்வு இல்லாதவர்களே. அறிவுதான் ஒருவரை அழிவிலிருந்து காக்கும். பகைவர்களாலும் அழிக்க இயலாத சிறந்த அரணாக விளங்குவதும், அறிவேயாம். என்பதனை,

**''எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்**
**பண்புடை மக்கட் பெறின்''**[60]

என்று பிறர் பழி கூறாத பண்புடைய பிள்கைளைப் பெறும் பெற்றோர்க்கு எப்பிறவியிலும் தீமை வந்து சேராது என்ற குறளின் கருத்து பெற்றோர்க்கு அறிவுரையாய் அமைந்துள்ளதை காணமுடிகிறது.

பெற்றோர்க்கு மறு பதிப்பு அவர் தம் குழந்தைகள். குழந்தையின் அறிவும் பண்பும் செயல் புரியும் தன்மையும் பெற்றோர்களிடமிருந்து பெறுவதாகும். குடும்பப் பண்புகள் பெற்றோர் மூலமாகக் குழந்தைகளுக்குச் சேருவதால் குழந்தைகளே அவர்களின் நிலையான செல்வம். சமுதாயத்திற்கு கொடையாகும். அதுபோல் தீய பண்போ, நல்ல பண்போ குடும்பத்தில் தலைமுறைதோறும் விடாமல் தொடரும் என்ற முன் எச்சரிக்கையோடு குழந்தைகளைக் கண்டிப்புடன் நற்பண்பும் நற்செயலும் உடையவர்ளாக வளர்ப்பது அவசியம்.

குழந்தைகளுக்குப் பணத்தைச் சேகரித்து வைப்பதைவிட நற்பண்புடைய பயிற்சியளிப்பது மிகவும் முக்கியமானதாகும். என்பதை,

**''தம்பொரு ளென்பதம் மக்கள் அவர்பொருள்**
**தந்தம் வினையான் வரும்''**[61]

பெற்றோர்கள் ஒவ்வொருவருக்கும் அவரவர்களுடைய குழந்தைகளே செல்வங்கள் ஆகும். அந்தக் குழந்தைகள் அறிவார்ந்தவர்களாக இருப்பதும் கல்லாதிருப்பதும் பெற்றோர்களின் செயல்பாடுகளைப் பொறுத்து அமையும். எனவே குழந்தைகளை அறிவு மிக்க செல்வங்களாக்குவது பெற்றோரின் கடமை என்பதை உணரவேண்டும்.

குழலும், யாழும் இனிமையைச் சுரக்கும் கருவிகளாகும். அந்த இசையின் இன்பத்திற்கு ஆட்படாதவர்கள் எவரும் இருக்க முடியாது. குறிப்பாக தாங்கள் பெற்றெடுத்த குழந்தையின் மழலை மொழியைக் கேட்கின்ற பேறு பெற்றவர்களுக்குக் குழலின் இனிமையும் யாழின் இனிமையும் ஒரு பொருட்டாகத் தோன்றாது.

பெற்றோர்களின் கவலைகளைப் போக்கி அவர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தும் திறன் குழந்தைகளின் மழலைக்கு உண்டு. உலகில் பொருளென்று கூறப்படும் யாவையும் தம் பொருள் என்றும் உரைத்திட முடியாது. ஆனால் தனது உயிர், தனது உணர்வு, தனது உரு ஆகிய அனைத்து இயல்பும் குழந்தையிடமே காணப்படுவதால் குழந்தைகளைத் தம் பொருள் என்று அழைக்கலாம்.

தவமிருந்து பெற்ற குழந்தை என்பார்கள். உண்மையில் அதற்கும் ஒரு தவம் செய்திருக்க வேண்டும். குழந்தையைப் பெற்று வளர்ப்பதென்பது ஒரு கலை. குழந்தை வாழ்வின் முற்பகுதியில் மழலை, ஆடல், பாடல் முதலியவற்றால் மகிழ்வித்தும், மடியில் தவழ்ந்தும், தோளில் கிடந்தும் தரையில் நீந்தியும் நமது நெஞ்சையள்ளும் காட்சிகளை நினைவுப் படுத்துகிறார். பின்னர் வாழ்வின் பிற்பகுதியில் அறிவுடைய மகனாய் வளர்ந்து பெருமையளிக்கும் சிறப்பையும் உணர்த்துகிறார்.

தன்னை ஈன்று பாராட்டி, சீராட்டி வளர்த்த அன்னைக்கு, அறிவையும், அன்பையும் பொழிந்த தந்தைக்கும் மகன் செய்ய வேண்டிய தலையாய கடமை. நற்பண்புகள் நிறைந்து அறிவில் சிறந்தவனாக விளங்குவதாகும். இதனை,

**''ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்''**[62]

தன் மகன் அறிவு, நற்பண்புகளில் சிறந்தவன் 'சான்றோன்' என பலர் பாராட்டுதலைக் கேட்ட தாய் அக்குழந்தையைப் பெற்ற பேறு ஏற்பட்ட மகிழ்ச்சியைக் காட்டிலும் மேலான மகிழ்ச்சியை அடைகிறாள் என கருதமுடிகின்றது.

குழந்தைகள் உணவைக் கையால் தொட்டும் தம்மேல் பூசிக் கொண்டும், கீழே இரைத்தும், மற்றவர்கள் மேல்பூசியும், விளையாடும் செயல்களில் பிறரை மகிழ்ச்சியில் ஆழ்த்தியும் தம்மையும் மகிழ்விப்பர். இதனை,

**''அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ்''**[63]

குழந்தைகள் தன்கையைக் கொண்டு உண்ட மிச்சமான கூழ் பெற்றோர்களுக்கு அமிழ்தம் போல் சுவையும் மகிழ்ச்சியையும் கொடுப்பதாக வள்ளுவர் கூறுகிறார்.

தம் மக்கள் அறிவுடையோராய் விளங்குதல் தந்தைக்கு மட்டும் இனிமை என்றில்லை. மாநிலத்தில் மண்ணுயிர்க்கெல்லாம் இன்பமூட்டும் செய்தியாகும். அறிஞன் ஒருவனை உலகிற்களித்த பெருமை தந்தைக்கு உண்டு. உணர்வின்பம் என்பது பெற்ற தாய்க்கும் உண்டு. ஈன்ற பொழுதில் தோன்றிய மகிழ்ச்சி இயற்கையானது என்றாலும் மகனைச் சான்றோன் என்று பிறர் வாயால் கேட்டபோது தான் முழுவதுமாக உணர்கிறாள். பெற்ற இன்பம் அன்றுதான் ஏற்பட்டதாக மகிழ்ச்சி அடைகின்றாள்.'

**''ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்கு கடனனே''**[64]

என்று கூறுகின்றார் பொன்முடியார்.

தன் மகனைப் பெற்று நன்முறையில் வளர்த்தல் ஈன்றதாயின் கடமையாகும். ஆனால் அந்த அளவிலேயே விட்டுவிடாமல் கல்வி, அறிவு, ஒழுக்கங்களின் சிறந்து தன் குழந்தையை சான்றோன் ஆக்குதல் தந்தையின் கடமையாகும். அப்போதுதான் இல்லறம் நல்லறமாகவும், இவ்வுலகம் இனிது நடைபெறும். இக்கருத்தையே வள்ளுவரும் வலியுறுத்துகிறார். என்பதை,

**''மகன்றந்தைக் காற்றும் உதவி இவன்றந்தை**
**என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்''**[65]

என்றும் தன்னை ஆளாக்கி விட்ட பெற்றோர்க்கு மகன் செய்யும் கைம்மாறு வேறென்ன இருக்க முடியும்? இவன் தந்தை இவனைப் பெற என்ன தவம் செய்தாரோ? என்று உலகம் புகழ்ந்து உரைக்கும் இனிய மொழிகளைக் கேட்டு மகிழ்வர் என்பதை,

**''தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்''[66]**

என்றும் குழந்தைகளின் சிறப்பை அறியமுடிகிறது.

பெற்ற குழந்தைகளிடம் பெற்றோர்க்குச் சில கடமைகள் உண்டு. அவற்றுள் முக்கியமானது அவர்களுக்கு நல்ல கல்வி அளிப்பதாகும். குழந்தைகளுக்கு அமுதூட்டிப் பராமரித்து வளர்ப்பது தாயின் கடமை என்றால் அவர்களைக் கல்வியில் சிறந்தோனாக்கி கற்றோர் அவையில் சிறப்புடன் வீற்றிருக்கச் செய்தல் தந்தையின் கடமையாகும். பிள்ளைகளைப் பெறுகின்ற தந்தை அவர்களுக்குத் தேவையான கல்வியை கொடுக்க வேண்டும். அப்படி நன்கு கற்ற குழந்தை சமுதாயத்தில் நல்ல நிலையை தன் அறிவாற்றல் பெற்று பெற்றோர்களை மகிழ்விக்க வேண்டும்.

குழந்தைகளின் மழலைச்சொல் செவிக்கின்பம், அவர்களின் உடலைத் தொடுவது நம் மனத்திற்கு இன்பம், அவர்கள் கைகொண்டு உண்ட மீதமான சோற்றை உண்பது நாவிற்கு இன்பம். இதனால்தான் திருவள்ளுவர் வாழ்க்கைத் துணை நலத்தின் இறுதியில்,

**''மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்**
**நன்கலம் நன்மக்கட் பேறு''[67]**

இல்லத்திற்கு அணிகலன் போன்றது நல்ல மக்களைப் பெறுதலாகும் என்று குறிப்பிடுகிறார்.

மனித குலத்தின் வளர்ச்சிக்கு வித்திடுவதும், ஒரு மனிதன் இவ்வுலகில் வாழ்ந்தான் என்பதற்கு சான்றாகவும் விளங்குவது குழந்தைச் செல்வம் ஆகும். தலைவன் தலைவியின் வாழ்வு முழுமை பெறுவது என்பது குழந்தைப் பேற்றின் முக்கியத்துவமும், அதன் சிறப்புகளும் சங்க இலக்கியம் முதல், பதிவு செய்யப்பட்டு வருகிறது. சான்றாக,

**''மனைக்கு விளக்கம் மடவாள், மடவாள்**
**தனக்குத் தகைசால் புதல்வர் மனக்கினிய**
**காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்விக்கும்**
**ஓதிற் புகல்சொல் உணர்வு''[68]**

என்னும் நான்மணிக்கடிகை பாடல் வரிகள் வீட்டிற்கு ஒளிதரும் விளக்கு மனைவி, அம்மனைவிக்கு ஒளிவீசும் விளக்கிற்குத் தகுதி வாய்ந்த மக்கள் என்றமையால் குழந்தைப் பேற்றின் முக்கியத்துவம் புலப்படுகிறது. மேலும்,

**''குழவி தளர் நடை காண்ட லினிதே**
**யவர்மழலை கேட்ட லமிழ்தி னினிதே**
**வினையுடையான் வந்தடைந்து வெய்துறும் போழ்து**
**மனைஞ்சா னாக லினிது''[69]**

என்ற இனியவை நாற்பதில் பெற்றோர்க்கு குழந்தைகளின் தளர் நடையைக் காண்பதும் சொல்லைக்கேட்பதும் அமிழ்தத்தைவிட இனிதாகும் என்ற குழந்தைப் பேற்றின் சிறப்பினையும், முக்கியத்துவத்தையும் எடுத்துரைப்பதை அறியமுடிகின்றது.

**தாய்மைச் சிறப்பு**

ஒரு பெண் தாய்மையடையும் பொழுதுதான் முழுமை பெறுகிறாள். அதனிலும் பெற்றோர்களைவிட அறிவு மேலோங்கும் குழந்தையை பெற்றெடுப்பதன் நிலையை வள்ளுவர்,

**''தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது''[70]**

என்கிறார். அறிவுடைமை, மக்களைப் பெறுதல் தமக்குமட்டும் சிறப்பன்று. அம்மக்களால் உலகத்து உயிர்களுக்கு எல்லாம் நன்மையைத் தரும் என்றமையால் தாய்மையின் சிறப்பினை அறியமுடிகின்றது. மேலும்,

**''நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்**
**இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய் – தொல்குடியின்**
**மக்கள் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்**
**கற்புடையாள் பூண்ட கடன்''[71]**

என்ற திரிகடுகப் பாடல் வரிகள், விருந்தோம்பல், இல்லறத்தைப் பாதுகாத்தல், மக்களைப் பெறுதல் இம்மூன்றும் கற்புடைப் பெண்டிரின் கடமை என்பதை உணர்த்தியுள்ளது. தன் குடும்பத்திற்குரிய மக்களைப் பெறுவதால் தாய் ஆகின்றாள். ஒரு பெண்ணிற்கு தாய்மை என்பது வாழ்வாதாரமாக விளங்குவதை அறியமுடிகின்றது. மேலும்,

**''ஈன்றாரீன் கற்றளர்வார் சூழார் குழவிகள்**
**மன்றார் வனியான் மயங்கினார்க் - கானாரென்**
**றூணீய்த் தறுநோய் களைந்தார் பெருஞ்செல்வம்**
**காணீற்று வாழ்வார் கலந்து''**[72]

என்ற ஏலாதி பாடல் வரிகளில் குழந்தைகளைப் பெற்றவர்கள், குழந்தைகளைப் பெறுகின்ற காலத்தில் வேதனைப் பெறுகின்றவர்கள், கருவுற்றிருக்கின்றவர்கள், குழந்தைகளுக்கும், உணவு கொடுத்து உதவுபவர்கள், உறவினர்களோடு மகிழ்ச்சியாக வாழ்வார் என்று கூறியதன் மூலம் குழந்தைச் செல்வத்தினையும், தாய்மையையும் போற்றிய விதம் புலப்படுகின்றது. சான்றாக,

**''.................. இனிய சொல் நீர் வாய் மழலைச்**
**சிறுவன் எமக்கு உடைமையால்''**[73]

என்ற பாடலில் மழலையாகிய இனிய சொற்களைப் பேசுகின்ற என் புதல்வன் எனக்குத் துணையாக இருப்பதால் வேறு வாழ்க்கைத் துணை எனக்கு வேண்டியதில்லை என்ற தலைவிக்கூற்று தாய்க்கும் மகனுக்குமான உறவுநிலையைச் சுட்டிக்காட்டுகிறது. மேலும்,

மகவுப் பெற்றதால் தளர்ந்திருந்த பாவைப் போன்ற தலைவியை மார்பகங்களில் தன் கைகளால் விரும்பி நெருடி மகிழ்ச்சி அடைந்திருந்தாள் என்று கூறுவதன் மூலம் தாய்மை உணர்வினை அறியமுடிகின்றது, இதனை,

**''தளர் முலை பாராட்டி, என்னுடைய பாவை**
**வளர் முலைக்கண் ஞெமுக்குவார்''**[74]

என்ற பாடல் மூலம் அறியமுடிகின்றது. மேலும்,

**''வயாவும், வருத்தமும் ஈன்றக்கால் நோவும்**
**காவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு**
**அசாஅத்தான் உற்ற வருத்தம் உசா அத்தன்**
**கேளிரைக் காணக் கெடும்''**[75]

என்ற நாலடியார் பாடல்வரிகள், தாய் கருக்கொண்ட காலத்தில் உண்டாகும் மசக்கையாகிய நோயும் அதனால் ஏற்படும் துன்பங்களும், குழந்தைப் பெறும் காலத்து உண்டாகும் நோயும் இத்தகைய துன்பங்கள் எல்லாம் மடியில் இருக்கும் குழந்தையைத் தாய் பார்த்தவுடன் மறந்துவிடுவாள் என்று குறிப்பிடுகிறது. இப்பாடலில் வாயிலாக தாய்மை மூலம் ஏற்படும் இன்னல்களும், அதனால் ஏற்படும் இன்பங்களையும் அறியமுடிகிறது. மேலும்,

**''மாண்ட குணத்தொடு மக்கட்பேறு இல் எனினும்**
**பூண்டான் கழித்தற்கு அருமையால்.................. ''[76]**

என்ற பாடலில் பிள்ளைப் பெற்றுக்கொள்ளும் தகுதி மனைவியிடம் இல்லையென்றாலும் மணம் செய்துகொண்ட கணவன் அவளை விட்டுவிட முடியாது என்று குறிப்பிடுவதன் வாயிலாக அறஇலக்கியங்கள் குடும்ப கட்டமைப்பைத் தன்னகத்தே கொண்டுள்ளதையும் அறியமுடிகின்றது.

தாய்மார்கள் குழந்தையை எவ்வாறு பேணி வளத்தனர் என்பதனையும் அறஇலக்கியப் பதிவுகள் காட்டுகின்றன.

**''மலைத்து அழுது உண்ணாக் குழவியைத் தாயர்**
**அலைத்துப் பால் பெய்துவிடல்''[77]**

என்றப்பாடலில் மிகவும் அழுதபடி பால் உண்ணாத குழவிகளைத் தாய்மார்கள் வருந்தி பால் உண்ணச் செய்தனர் என்ற குறிப்புக் காணப்படுகின்றது. மற்றொருப் பாடலில்,

**''பிள்ளைகளை மருட்டும் தாயர் போல் அம்புலிமேல்''[78]**

பிள்ளைகளை மருளச் செய்து நிலவைக் காட்டி தாய்மார்கள் உணவூட்டி வளர்த்தனர் என்பதனை அறியமுடிகின்றது.

**''கோல்நோக்கி வாழுங் குடியெல்லா தாய்முலைப்**
**பால்நோக்கி வாழுங் குழவிகள் – வானத்**
**துளிநோக்கி வாழும் உலகம் உலகின்**
**வளிநோக்கி இன்புறூஉம் கூற்று''[79]**

என்பதில் குடிமக்கள் எல்லாரும் அரசனது ஆட்சியை நோக்கி உயிர் வாழ்வர், குழந்தைகளெல்லாம் தாயின் முலைப்பாலை நோக்கி உயிர் பிழைக்கும்,

*உலகத்துப் பயிர்கள் வானத்தினின்றும் விழும் மழைத்துளியை நோக்கி வாழும் என்பதும் தாய்ப்பாலின் அவசியத்தையையும் அறியமுடிகின்றது.*

**''மறு இல் பொலந் தொடி வீசும், அலற்றும்
சிறுவம் உடையேன் துணை''[80]**

*என்ற பாடலின் மூலம் தலைவன் பிரிந்து சென்றாலும் பொன் வளையல்கள் அணிந்து கைவீசி விளையாடும் என் மகனை நான் பாதுகாவலாகக் கொண்டுள்ளேன் என்று தலைவிக் கூற்றின் வாயிலாகக் குழந்தைகளுக்குப் பொன் வளையல்கள் அணிவித்தனர் என்பதை அறியமுடிகின்றது.*

*அறஇலக்கியங்கள் குழந்தைகள் விளையாடி மகிழ்ந்த பொருட்களையும் நமக்குக் கூறுகின்றது. பொம்மைகள், பந்துகள், பவளம் போன்ற வாயினையுடைய என் மகள் என்று தலைவிக் கூறுவதாக,*

**''பாவையும் பந்தும், பவளவாய்ப் பைங்கிளியின்
ஆயமும்.........................................................''[81]**

*என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.*

*பேதைப் பருவ சிறுமிகள் கடற்கரையோரச்சோலையில் மணல்வீடு கட்டி விளையாடி மகிழ்ந்தனர் என்பதை,*

**''பேதை மடவார்தம் வண்டல் விளக்கு அயரும்
கானல் அம் சேர்ப்ப! .......................................''[82]**

*என்ற பாடலடிகள் சுட்டிக்காட்டுகின்றன.*

**''...................................! மணி யானைப் பாகனார்
தூக்கோல் துடியோடு ..........................................''[83]**

*என்ற பாடலில், தலைவி மண்ணால் செய்த யானையைக் கொண்டு விளையாடும் என் மகன் துடிகொட்டி விளையாடி மகிழ்ந்தான் என்கிறாள்.*

**''ஊராத் தேரான் தந்தை ஊர்''[84]**

*என்ற மற்றொரு பாடலில் ஊர்வதற்கு இயலாத சிறிய தேரினை உடையவனாகிய என் மகன் என்று தலைவி கூறுவதன் மூலம் தேர்வைத்து விளையாடினர் என்பதனை அறியமுடிகின்றது.*

அறஇலக்கியங்களில் மக்கள் வாழ்வியலுக்குத் தேவையான அறக்கருத்துக்களைக் கூறுவதோடு மட்டுமல்லாமல் சிறுவர், சிறுமியர் என்று குழந்தைகள் பற்றிய பதிவுகளையும் தெளிவுப்படுத்தியுள்ளது. மேலும் அற இலக்கியங்களில் குழந்தையின் மூலமாக தலைவன் மற்றும் தலைவி இருவரிடையே உள்ள இல்லறச் சிக்கலைத் தீர்க்கும் முகமாக நீதிக் கருத்துக்களைக் கூறியுள்ளனர். சமூகச் சூழலில் குழந்தையின் அன்பும், குழந்தை மூலமாக விளங்கும் பண்பாட்டு நெறிகளும் கூறப்பட்டுள்ளன.

பிற்கால நீதிநூல்களில் ஔவையார் இயற்றிய நூல்களான ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், மூதுரை போன்ற நூல்களில் குழந்தைகளைப் பற்றிய பதிவுகளும் குழந்தைகளுக்கான பாடல்களும் அமைந்துள்ளன.

பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்திலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை தோன்றிய இலக்கியங்களில் அற இலக்கியங்கள் சிறந்து விளங்கின. பெரியவர்களுக்கு அறமுரைத்த பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை அடியொற்றிச் சிறுவர்களுக்கும் அறமுரைக்கும் வகையில் பாடப்பெற்ற பல நூல்கள் இக்காலக் கட்டத்தில் தோன்றியவையாகும். அவ்வாறு தோன்றிய பல அறநூல்களுள் சிறப்பிடம் பெறுவன ஆத்திச்சூடியும் கொன்றை வேந்தனுமாகும். இவை குழந்தைகளுக்கான நூல்கள் எனப் பலர் கருதுகின்றனர். ஏனெனில் அவற்றில் எடுத்துரைக்கப் பெற்றுள்ள கருத்துக்களை குழந்தைப் பருவத்திலேயே அவர்கள் மனதில் பதிந்து விடின் வளர்ந்தப்பின் நன்னெறியினைப் பின்பற்றி வாழ்வர் என்ற நோக்கத்தில்தான் என்பது தெளிவாகும்.

ஔவையார் ஆத்திசூடியுடன் பாரதியாரின் ஆத்திசூடியையும் சேர்த்துத் தமது கருத்தைத் தெரிவிக்கும் “குழந்தைகளின் அறிவுக்கு எட்டாத ஆழ்ந்த கருத்துகள் உள்ளன என்றும், சிறு சிறு சொற்களால், சில தொடர்களால் அமைந்தமை பற்றி இவற்றைச் சிறுவர் இலக்கியம் என்று சொல்லி விட முடியாதென்றும் அவற்றின் வடிவம் மட்டுமே குழந்தை மனத்துக்கு எட்டாததாய் அமைகின்றது’’[85] என்பர். இதனை எடுத்துக்காட்டும் வள்ளியப்பா, இவ்வற நூல்களில் குழந்தைகளுக்குச் சொல்லப்படக் கூடாத சில செய்திகள் இருப்பதை எடுத்துக்காட்டி, இவற்றிலிருந்தே இப்பாடல்கள் குழந்தைகளுக்காகவே பாடப் பெற்றவை அல்ல என்பது புலனாகும் என்று குறிப்பிடத்தக்கது. .

"திண்ணைப் பள்ளிகளில் பிள்ளைகள் நூல்களை மனப்பாடம் செய்வார்கள். வெறும் மனப்பாடமாகத்தான். பொருள் கூறப்பட மாட்டா நூல்கள் மனப்பாடம் செய்வதுதான் அக்காலத் திண்ணைப் பள்ளிக்கூடங்களின் முதல் நோக்கமாக இருந்தது. எழுத்துக்களைக் கற்றுக் கொள்வதும் செய்யுள்களையும் சூத்திரங்களையும் மனப்பாடம் பண்ணுவதுந்தான் திண்ணைப் பள்ளிப் படிப்பின் நோக்கம்''[86] என்கிறார்.

எனவே மனப்பாடம் செய்வதற்கு எளிதான வகையில் அகர வரிசையில் ஓரிரு சொற்களில் அமைந்தமையால், ஆத்திசூடியும் கொன்றைவேந்தனும் சிறுவர்க்குக் கற்பிக்கப்பட்டன என்ற கருத்தும் நிலவிவருகிறது.

பின்னர், இம்முறையைத் தழுவிச் சிறுவர்க்கான பாடப் புத்தகங்களிலும் இந்நூல்களே இடம் பெறலாயின. இப்பாடல்கள் அனைத்தும் அறமுரைக்கும் பாடல்களாகவே அமைந்துள்ளன. குழந்தைப் பருவத்தில் இவற்றைக் கற்பித்துவிட்டால், அவர்கள் பெரியவர்களாகும் பொழுது இச்செய்யுட்களின் உட்பொருளையுணர்ந்து கற்றவழி நிற்றற்குரிய மனப்பக்குவம் அடைதல் கூடும் என நாம் எண்ணுவது தவறாகாது.

"உண்மையில், நவீனக் கல்வி வளர்ச்சியின் ஒரு பகுதியாகவே குழந்தை இலக்கியமும் உருப்பெற்று வந்துள்ளது. இது எதிர்பார்க்கக் கூடியதே, ஏனெனில், பழங்காலத்திலும் ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், நல்வழி முதலிய நீதிநூல்கள் குழந்தைகளின் பாடநூல்களாகவே இடம் பெற்று முழுமையடைந்தன. கிரேக்கம், இலத்தீன் முதலிய மேற்கு நாட்டு மொழிகளிலும் இதே வளர்ச்சிப் போக்கைக் காணலாம்''[87]

ஆனால், இத்தகைய செய்யுட்கள் குழந்தைகளின் உள்ளத்தை எந்தளவு கவரும், குழந்தைகளுக்கு எத்தகைய மகிழ்ச்சியை அளிக்கும் என்பதுதான் கேள்வியாகும். பொருள் புரியாதிருப்பதால் குழந்தைகளால் அவற்றை அனுபவிக்க முடிவதில்லை. எளிய நடையில் இனிய சந்தத்தில் உள்ளத்தை நேரடியாகத் தொடு உணர்ச்சியைத் தூண்டும் பாடல்களே சின்னஞ் சிறுவருக்குத் தேவை என்பதை இன்றைய கல்வி நிபுணர்கள் ஒப்புக்கொண்டு அதற்கேற்றவாறு மாறுதல்கள் செய்து வருவது வரவேற்கத் தக்கதாகும்.

## பக்தி இலக்கியங்களும், குழந்தைகளும்

*'குழவி மருங்கினும் கிழவாதகும்' என்னும் தொல்காப்பிய நூற்பா பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்குச் சான்றாக விளங்குகிறது. தொல்காப்பியர் காலத்திலேயே பிள்ளைத் தமிழ் நூல்கள் இருத்தல் வேண்டும். தொல்காப்பியர் காலத்திலேயே சிற்றிலக்கிய விதை விதைக்கப்பட்டுவிட்ட போதிலும் அதனைச் சிறப்பாகத் தழைத்து வளரச் செய்த பெருமை பக்தி இலக்கியத்திற்கே உரியதாகும். பிற்காலத்தில் பெருவழக்குப் பெற்றுச் சிறந்த பிள்ளைத் தமிழ் இலக்கியத்தைத் தோற்றுவித்தப் பெருமை பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவரான பெரியாழ்வாரையே சாரும். எனவே இவரைப் பிள்ளைத் தமிழின் முன்னோடி என்பர்.*

*தமிழில் பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் முன்னோடி என்று கருதப்பெறும் பெரியாழ்வாரின் பாடல்களில் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கான தோற்றுவாய் கிடைக்கப் பெறுவதை அறியலாம். இவையே பின்னாளில் பிள்ளைத் தமிழ் என்று ஒரு தனி இலக்கியம் தோன்றுவதற்கு காரணமாக அமைந்தன.*

**''மாணிக்கங் கட்டி வயிர மிடைக் கட்டி**
**ஆனிப் பொன்னாற் செய்த வண்ணச் சிறுதொட்டில்**
**பேணி யுனக்குப் பிரமன் விடுதந்தான்**
**மாணிக்க குறளனே தாலேலோ வையமளந்தானே தாலேலோ''[88]**

*கி. பி. 12ஆம் நூற்றாண்டில் வெளிவந்த பன்னிருபாட்டியல் என்னும் பாட்டியல் நூல் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் குழந்தைகளின் பருவங்களை வயது அடிப்படையில் பிரிக்கும் போக்கினைக் காணமுடிகிறது. இதனை,*

**''பிள்ளைப் பாட்டே தெள் ளிதின் கிளப்பின்**
**மூன்று முதலா மீவேழ் அளவும்**
**ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே''[89]**

*எனும் பாடல் வரிகளின் வாயிலாக அறியமுடிகிறது.*

*கண்ணனின் திரு அவதாரம், திருமேனி அழகு, தாலாட்டு, செங்கீரை, சப்பாணி, தளர் நடை, அச்சோ பருவம், புறம் புல்கல், அப்பூச்சிக் காட்டுதல், அம்மன் உண்ண அழைத்தல், காது குத்தல், நீராட்டல், குழல் வாரல், பூச்சூடல், காப்பிடல், நிலவை அழைத்தல், காக்கையை கோல் கொண்டு வருமாறு அழைத்தல் ஆகியவை பெரியாழ்வார் பாடிய பிள்ளைத் தமிழ் பருவங்களாகும். இவற்றுள் முதலில் குறித்த பிள்ளைப் பருவக் கூறுகளுள் தாலாட்டு, செங்கீரை,*

*சப்பாணி, அம்புலி அகியவை பிற்கால பிள்ளைத் தமிழ் நூல்களில் பருவப் பெயர்களாக அமைந்துள்ளதைக் காணலாம்.*

- *'முன் வந்து நின்று முத்தம் தரும் என் முகில் வண்ணன்' (1.6.4) என்னும் வரி முத்தப் பருவத்திற்குத் தோற்றுவாயாக அமைந்தது எனலாம்.*
- *'சிற்றில் சிதைத்து எங்கும் தீமை செய்து' (3.2.2) என்னும் வரி சிற்றில் பருவத்திற்கு வித்தாக அமைந்துள்ளது.*
- *அச்சோ பருவம் (1.8)*
- *புறம் புல்கல் (1.9)*
- *ஆகிய இரண்டும் வருகைப் பருவத்திற்கு அடித்தளமாக உள்ளது.*
- *காக்கையை அழைத்தல் (2.5)*
- *நிலவை அழைத்தல் (1.4) என்னும் இரு பருவங்களும் அம்புலி பருவத்திற்கு அடிக்கல் எனலாம்.*
- *நீராடல் (2.3)*
- *பூச்சூடல் (2.6) ஆகியவை நீராடல் பருவமாக வளர்ந்துள்ளது.*
- *ஐ காப்பிடல் (2.7) காப்புப் பருவமாக மலர்ந்துள்ளது.*
- *இரண்டாம் பத்தில் முதல் திருமொழியும் (அப்பூச்சி காட்டுதல்), இரண்டாம் திருமொழியும் (முலையுண்ண அழைத்தல்) சிற்றில் சிறுபறை ஆகியவற்றைப் போல கொள்வதற்கு உரியனவாகும்'' என்பர்.*

## குழந்தை பருவத்திற்குத் தகாத செயல்களைச் செய்தல்

*தொட்டிலில் கை, கால் அசைந்து விளையாடுவது, இடுப்பில் உட்கார வைத்தால் நழுவி கீழே இறங்குவது, மார்போடு தழுவும்போது வயிற்றில் உதைத்து ஏறுவது முதலியன குழந்தைகள் செய்யும் அற்புதமான செயல்கள். இத்தகைய செயல்களைச் செய்யும் பிள்ளைகளை ஆயர்பாடியில் உள்ள பெண்கள் பெற்றிருக்கிறார்களாம். ஆனால் யசோததையோ பருவத்திற்கு மாறாகச் செயல்களைச் செய்யும் பிள்ளையைப் பெற்றிருக்கிறாளாம்.*

**''கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்**
**எடுத்துக் கொள்ளில் மருங்கை இறுத்திடும்**
**ஒடுக்கிப் புல்கில் உதரத்தே பாய்ந்திடும்**
**மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்!''**[90]

*என்று யசோதை தன் பிள்ளை செய்யும் குறும்புகளை ஆய்ச்சியர்களிடம் சொல்லி வருந்துகிறாள்.*

குழந்தையைத் தொட்டிலில் படுக்க வைத்தால் அத்தொட்டிலே கிழிந்து விடும்படி அவனுடைய அழகிய திருவடியால் உதைக்கின்றனாம் அவனைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டால் இடுப்பிலிருந்து நழுவி அவளுடைய கையை முறித்து விடுகின்றானாம். அவனை அன்போடு மார்பிலே தழுவிக் கொள்ளும் போது அவளுடைய வயிற்றில் உதைத்து வருத்துகின்றானாம். இப்படி பருவத்திற்குத்தகாத செயல்களைச் செய்யும் குழந்தையின் மகிமையைப் பாடிக்களிப்பதோடு அவனுடைய செயல்களை நம் கண் முன் நிறுத்திக் காட்டுகிறார் ஆழ்வார்.

## குழந்தை சிற்றில் சிதைத்தல்

தெருவில் பெண் குழந்தைகள் மணல் வீடுகட்டி விளையாடுவதையும் அதை ஆண் குழந்தைகள் சிதைப்பதையும் இன்றும் கிராமப்புறங்களில் காணலாம். இக்காட்சியைக் குழந்தையின் இளமைப் பருவக் குறும்பு செயலாக ஆழ்வார் கற்பனை செய்வதை,

> **‘‘முற்றிலும் தூதையும் முன் கைம்மேல் பூவையும்**
> **சிற்றில் இழைத்துத் திரிதருவோர்களை**
> **பற்றிப் பறித்துக்கொண்டு ஓடும் பரமன்’’[91]**

என்னும் பாசுரத்தில் காணலாம்.

ஆயர்பாடியில் உள்ள சிறுமிகள் மணல் குவித்து சிறுவீடு கட்டி விளையாடுகின்றனர். அவ்வீட்டில் மணல் சோறு சமைப்பதற்காக சிறிய பானையையும் மற்றும் பல பொருள்களையும், கொஞ்சி விளையாடுவதற்காக நாகணவாப் பறவையையும் வைத்துள்ளனர். குழந்தை அவர்கள் விளையாடும் சிற்றிலைச் சிதைப்பதாகவும் விளையாட்டுப் பொருள்களையெல்லாம் வலுக்கட்டாயமாகப் பறித்துக்கொண்டு ஓடுவதாகவும் பாடி மகிழ்கிறார்.

## குழந்தை வெண்ணையையும் பாலையும் களவாடுதல்

ஒருநாள் கண்ணன் ஆயர்களின் வீட்டில் நுழைந்து அடியில் ஓட்டையான உரலைக் கொண்டு வந்து அதைக் கவிழ்த்துப் போட்டு அதன் மேலேறி உறியில் உள்ள வெண்ணெயையும், பாலையும் எடுத்து வயிறு நிரம்ப உண்கின்றான். நல்ல உரலினால் கண்ணனின் வேலை முடிவடையாது. ஏனென்றால் ஆயர்பாடி பெண்கள் நெல் குத்துவதற்காக அந்த உரலைத் தேடி வந்து தன்னையும் பிடித்துக் கொள்வார்கள் என்று நினைத்து ஓட்டை உரலை உருட்டிக்கொண்டு வந்து கள்ளத்தனம் செய்யும் கண்ணனை,

**''பொத்தவுரலைக் கவிழ்த்து அதன் மேலேறி**
**தித்தித்தபாலும் தடாவினில் வெண்ணெயும்**
**மெத்தத் திருவயிறார விழுங்கிய**
**அத்தன்.........................................''**[92]

என்று உள்ளம் நிறைய பாடி மகிழ்கிறார் ஆழ்வார்.

### உறங்கும் குழந்தைகளைக் கிள்ளி எழுப்புதல்

குழந்தை ஆயர்களின் வீட்டில் வெண்ணெயைத் திருடுவது மட்டுமில்லாமல் அங்குள்ள எண்ணெய் குடத்தையும் உருட்டுகின்றானாம். சிந்திய எண்ணெயை அவர்கள் துடைத்துக் கொண்டிருக்கும்போது தொட்டிலில் உறங்கிக் கொண்டிருக்கும் சிறுபிள்ளைகளைக் கிள்ளி எழுப்புகின்றானாம். இப்படி குழந்தைப் பல தீம்புகளைச் செய்து ஆய்ச்சியர்களை வருத்துவதை,

**''எண்ணெய்க் குடத்தை உருட்டி இளம்பிள்ளை கிள்ளி எழுப்பி**
**கண்ணைப் புரட்டி விழித்துக் கழகண்டு செய்யும் பிரானே!''**[93]

என்னும் வரிகளில் காணலம்.

### குழந்தையின் தீம்புகளைச் சொல்லி முறையிடுதல்

நாள்தோறும் குழந்தை செய்யும் தீம்புகளை ஆயர் குலப் பெண்களால் தாங்க முடியவில்லை. குழந்தை அவர்களுடைய வீட்டில் நுழைந்து வெண்ணெய் முழுவதையும் உண்பதோடு அந்தப் பாத்திரத்தைக் கல்லிலே போட்டு அது உடையும் போது ஏற்படும் ஓசையைக் கேட்டு மகிழ்கின்றான். அவன் செய்கின்ற திருட்டுச் செயலை ஆய்ச்சியரால் தடுக்க முடியாததால் அவனுடைய தாயான யசோதையிடம்,

**''வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அதனோசைக் கேட்கும்**
**கண்ணபிரான் கற்ற கல்வி தன்னைக் காக்ககில்லோம் உன்மகனைக் காவாய்**
**புண்ணில் புளிபெய்தால் ஒக்கும் தீமை புரைபுரையால் இவை செய்யவல்ல**
**அண்ணற் கண்ணானோர் மகனைப் பெற்ற அசோதை நங்காய்! உன் மகனைக் கூவாய்!''**[94]

என்று கூறி அவன் செய்கின்ற தீம்புகளைத் தடுக்குமாறு வேண்டுகின்றனர். குழந்தை செய்கின்ற தீம்புகள் ஆய்ச்சியர்களுக்கு வெந்தப் புண்ணில் புளிச்சாற்றை வார்ப்பதைப் போல இருக்கிறதாம்.

## நாவல் பழத்திற்காக ஆயச் சிறுமிகளின் வளையல்களை எடுத்து செல்லுதல்

*குழந்தையின் குறும்பு செயல்கள் நாள்தோறும் பெருகிக் கொண்டே வருகிறது. தீங்கு செய்வதில் தந்திரம் உள்ளவன் குழந்தை அவன் ஆயர்களின் வீட்டில் நுழைந்து ஆயச் சிறுமிகளின் கையில், உள்ள வளையல்களைக் கழற்றிக் கொண்டு சென்று கொல்லையிலிருந்து பறித்து கொண்டு வந்த நாவல் பழம் விற்றுக்கொண்டிருந்த ஒரு பெண்ணிடம் அவ்வளையலைக் கொடுத்து பழங்களை வாங்கி உண்கிறான். கேட்டால் நான் வளையலைக் கழற்றவில்லை என்று சொல்லி சிரிக்கின்றானாம். இதனை,*

> **‘‘சொல்லிலரசிப் படுதி நங்காய்! குழலுடையன் உன் பிள்ளைதானே**
> **இல்லம் புகுந்து என் மகளைக் கூவிக்கையில் வளையைக் கழற்றிக் கொண்டு**
> **கொல்லையில் நின்றும் கொணர்ந்துவிற்ற அங்கொருந்திக்கு அவ்வளை கொடுத்து**
> **நல்லன நாவல்பழங்கள் கொண்டு நானல்லேனென்று சிரிக்கின்றானே.’’**[95]

*இடைக்குலப் பிறப்பை ஏறிட்டுப் பார்த்த அழ்வார் ஆய்ச்சியர்களின் துன்பத்தை அப்படியே படம் பிடித்துக்காட்டுகிறார்.*

*மாசற்ற மனதில் உள்ளவனான இறைவன் தன் அடியவர்களிடத்தில் காட்டும் அன்பிற்குத் தாயின் அன்பை உவமையாகக் கூறுவர். ஆனால் இதற்கு மாறாக ஆழ்வார் தன்னை அன்புடைய தாயாகவும் இறைவனைச் சேயாகவும் வைத்துப் பாடுவது புதுமையானதாகும். ஆழ்வார் யசோததையாக மாறி அவனைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டினார். அம்புலி காட்டினார், தலை வாரினார், நீராட்டினார், பூச்சூட்டினார் அவனது குறும்பு செயல்களைக் கண்டு மகிழ்ந்தார். அனைத்து உயிர்களுக்கும் குழந்தையாக விளங்கும் குழந்தை மனக்கண்ணால் கண்டு களித்து ஆழ்வார் அவனுடைய மகிமையை சொல்லோவியமாக வடித்துக்காட்டி நம்மையும் களிப்புறச் செய்கிறார்.*

## கவிமணியும், குழந்தையும்

*கவிமணி அவர்கள் கோட்டாறு என்னுமிடத்தில் தொடக்கப்பள்ளி ஆசிரியராகப் பணிபுரியும் போது குழந்தையுலகில் தனித்த ஈடுபாடு கொண்டு மழலை இலக்கியம் படைக்கத் தொடங்கினார். நாஞ்சில் நாட்டுப் பள்ளிகளில் மலையாளப் பாடல்கள் கற்பிக்கப்பட்டு வந்ததால், நல்ல தமிழ்ப் பாடல்களைக் கற்று இன்புறுவதற்கேற்ற சூழ்நிலையைக் குழந்தைகளுக்கு அமைத்துத் தர வேண்டுமென்னும் கவிமணியின் விருப்பம் அவரைக் குழந்தை இலக்கியத்தைப் படைக்க வைத்தது.*

பண்டிதநேரு போலக் குழந்தைகளிடம் அளவிறந்த அன்பு காட்டி வந்த கவிமணி, குழந்தைகளைக் காண்பதிலும் அவர்கள் மழலை மொழிகளையும் செயல்களையும் நுட்பமாக நோக்குவதிலும் கொண்ட பெரு அவாவினாலும் குழந்தையிடம் இயல்பாகவே அமைந்துள்ள கலையழகையும் கவியழகையும் உள்ளபடி கண்டுணர்ந்து இன்புறும் கலைத்திறத்தை அவர் உணர்ந்தாலும், குழந்தைப் பாடல்களைப் படைத்துத் தரும் பணியில் ஈடுபட்டுத் தம்மை மறந்து குழந்தையில்லாக் கவலையை மறக்க முயன்றதாலும், ஆத்திசூடி முதலிய இலக்கியங்களைக் குழந்தைகள் கற்றுப் புரிந்து கொள்வது கடினம் என்ற கருத்துடையவராக இருந்ததாலும், கவிமணியால் இனிய எளிய மழலைப் பாடல்களைப் பாட முடிந்துள்ளது என்பர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய கவிமணியும் (1876) பாரதியாரும் (1882) இந்நூற்றாண்டுக் குழந்தைகளுக்குக் கிடைத்துள்ள பெறற்கரும் பேறு. இதனை, இந்நூற்றாண்டின் துவக்க ஆண்டான 1901-ஆம் ஆண்டு தமிழ்க் குழந்தைகளுக்கு அதிர்ஷ்டமான ஓர் ஆண்டாகும். அந்த ஆண்டில் தான் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் குழந்தைகளுக்கான பாடல்களைப் பாடத் தொடங்கினார் என்னும் வள்ளியப்பாவின் கூற்று ஒப்புநோக்கத்தக்கது.

கவிமணியின் ‘மலரும் மாலையும்’ என்னும் நூலில் குழந்தை கிளியை அழைத்துப் பாடுவதாக ஒரு பாடல் இடம் பெற்றுள்ளது. பச்சைக் கிளியை வா வா என்று அழைப்பதோடு பாலும் சோறும் தருகிறேன். உண்ணவா எம் கவலைகள் யாவும் நீங்க நின் பவளம் போன்ற சிவந்த வாயைத் திறந்து பாட வா பையப் பையைப் பறந்து வா, பாடிக் பாடிக் களித்து வா நீ என் கையில் வந்து இருக்கவேண்டும். தரும் கனியை அருந்த வேண்டும் என்று வேண்டப்படுகிறது. பறவைகளைத் தன்னோடு அழைப்பதிலே அளவில்லா மகிழ்ச்சியடைவதைக் கவிஞர் வர்ணிப்பதை அறியமுடிகின்றது.

குழந்தை இலக்கியம் வளர வழி காட்டியவர் கவிமணி பிற கவிஞர்கள் கவிதைகள் குழந்தைகளுக்கும் ஓரளவு பயன்படக்கூடியனவாக இருந்த காலத்தில், குழந்தைகளே பாடி மகிழக்கூடிய வகையில் எளிமையான பாடல்களைப் படைத்துள்ளார்.

**''கோழீ! கோழி! வா வா,**
**கொக்கோ கோ என்று வா,**
**கோழீ! ஓடி வா வா,**
**கொண்டைப் பூவைக் காட்டு வா**
**குத்திச் சண்டை செய்யவோ?**
**குப்பை கிண்டி மேயவோ?**
**கத்திபோலும் கால்விரல்**
**கடவுள் தந்து விட்டனர்''[96]**

*என்று குழந்தையின் சிந்தனையில் உருவாக்க கூடிய எளிய சொற்களைக் கொண்டு பாடல்கள் அமைந்துள்ளன. பசுவின் கன்று 'அம்மா' என்று அழகுத் தமிழில் பேசுவதைப் போல நீயும் பேச வேண்டும். ஆடும் ஆட்டுக்குட்டியும் மனிதர்களிடத்தில் தோழமை உணர்வோடு பழகுவதையும், அதன் இயல்பையும் கவிஞர் எடுத்துரைக்கின்றார்.*

*கவிமணி தேசிய விநாயகம் பிள்ளையின் 'நெற்பானையும் எலியும்' என்ற கவிதையில் அழகான கருத்தை எடுத்துரைக்கின்றார்.*

**''பாட்டி வீட்டு பழம்பானை அந்தப்**
**பானை ஒரு புறம் ஓட்டையா**
**ஓட்டை வழியொரு சுண்டெலியும் அதன்**
**உள்ளே புகுந்து நெல் தின்றதடா**
**உள்ளே புகுந்து நெல் தின்று தின்று வயிறு**
**ஊதிப் புடைத்துப் பருத்ததடா**
**மெல்ல வெளியில் வருவதற்கும் ஓட்டை**
**மெத்த சிறிதாகிப் போச்சுதடா**
**பானையைக் காலை திறந்தவுடன் அந்தப்**
**பாட்டியின் பக்கமாய் வந்த ஒரு**
**பூனை எலியினைக் கண்டதடா ஓடிப்**
**போய் அதைக்கௌவிச் சென்ற தடா**
**கள்ள வழியினிற் செல்பவரை எமன்**
**காலடி பற்றித் தொடர்வானடா**
**உள்ளபடியே நடப்பவர்க்குத் தெய்வம்**
**உற்ற துணையாகி நிற்குமடா''[97]**

திருடினால் தண்டனையிலிருந்து தப்ப முடியாது என்னும் ஒழுக்க நெறியைப் பாடல் வழி எடுத்தியம்பப்படுகிறது. அறமற்ற செயல் செய்தால் அது நம்மைத் தண்டிக்கும் என்னும் நம்பிக்கை இளைய தலைமுறையிடம் வளரவேண்டும் என்பதை வலியுறுத்துகிறது.

ஆனால் கவிமணியோ பெரும்பாலும் குழந்தைகளோடு குழந்தையாக அவர்கள் அணியிலே நின்று இவர்களோடு ஒன்றியே பாடியுள்ளார் என்று குறிப்பிடுவர். எனவே குழந்தைகளோடு குழந்தையாக அவர்கள் அணியிலே நின்று அவர்களோடு ஒன்றிப் பாடப்பட்ட கவிமணியின் பாடல்களில் வாய்மொழி இலக்கியத் தாந்தம் அமைந்திருப்பது இயல்பே. வாய்மொழி வழக்காக வழங்கி வந்த நாட்டுப் பாடல்கள் குழந்தையுள்ளம் கொண்ட கவிஞர்களின் மனத்தைக் கவர்ந்துள்ளன. இப்பாடல்கள் ஓரளவுக்கு அவர்களுடைய குழந்தை இலக்கியப் படைப்புக்குத் துணை நின்றன என்றும் கூறலாம்.

**பாரதியாரும், குழந்தையும்**

தமிழ் இலக்கிய உலகில் பாடல்கள் பதவுரை, பொழிப்புரை, விளக்கவுரையின்றி விளங்கிக் கொள்ள முடியாமல் இருந்த நிலையை மாற்றிப், படித்ததும் பொருள் விளங்கத்தக்க எளிய இனிய பாக்களைப் படைத்தவர் பாரதி. பாரதியாரின் கண்ணம்மா – என் குழந்தை, பிற பிள்ளைத்தமிழ் இலக்கியங்களைப் போல் பராசக்தியைக் குழந்தையாக எண்ணிப் பாடப்பட்டதெனினும், பாடப்பெற்றுள்ள வகையில் ஒரு புதுமை கையாளப்பட்டு இருப்பதைக் காணலாம். இப்பாடலில் தாய்மைப் பண்பு மிகச் சிறந்த முறையில் விளக்கிக் காட்டப்பட்டுள்ளது. ஒரு தாய், தன் குழந்தையைப் பார்த்து, கொஞ்சிக் கொஞ்சி மகிழும் நிலை, குழந்தையின் துன்பங்காணும் போது துடிதுடிக்கும் நிலை, தன் குழந்தையை உலகிலேயே மிகவுயர்ந்த செல்வமாகக் கருதும் நிலை ஆகியவை தெளிவாகக் காட்டப்பட்டுள்ளன. பாரதியார், தாம் குழந்தையாகக் காணும் பராசக்தியின் அருமை பெருமைகளை இப்பாடலில் அமைத்துப் பாடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பாரதியாரின் பாப்பாப்பாட்டு பாப்பாவை முன்னிலைப் படுத்திக் கூறப்படும் உயர்ந்த கொள்கை விளக்கங்களாகவும் அறச் சட்டங்களாகவும் அமைந்துள்ளது. பெரியவர்களுக்காகப் பாரதியார் பாடிய நானூறுக்கு மேற்பட்ட கவிதைகளின் சாரம் அனைத்தையும் உள்ளடக்கிய ஒரு பாடலாகவே பாப்பா பாட்டு திகழ்கிறது என்னும் வள்ளிப்பாவின் கருத்து ஈண்டு

எடுத்துக்காட்டத்தக்கது. அவர் குழந்தைகளுக்கு அறமுரைக்கும் பாரதியார் பாடல்கள் பலவற்றை எடுத்துக்காட்டி இறுதியில், பாரதியார் குழந்தைகளுக்குப் பாடிய இரு பாடல்களிலும் குழந்தைகளை எதிரே வைத்துக்கொண்டு அறிவுரை கூறுவது போல் பாடியிருக்கிறார்.

புதிய குழந்தைப் பாடல்களின் படைப்புக்கு வாய்மொழி இலக்கியம் துணை நின்றது போலவே, புதிய குழந்தை கதைகளின் படைப்புக்கும் வாய்மொழியாக வழங்கப்பட்டு வந்த பல்வேறு நாட்டுப்புறக் கதைகள் துணை செய்துள்ளன. நம் தமிழகத்தில் இஸ்லாமியர் வரவால் செல்வாக்குப் பெற்ற பீர்பால் கதைகள், ஷேக் செல்லி கதைகள் முதலியவையும், விசயநகர மன்னர்கள் வரவால் செல்வாக்குப் பெற்ற இராயர் அப்பாசி கதைகளும், நாயக்க மன்னர் ஆட்சியால் செல்வாக்குப் பெற்ற மதன காமராசன் கதை, விக்கிரமாதித்தன் கதை, மரியாதை இராமன் - தெனாலிராமன் கதை ஆகியவையும், புராண இதிகாசக் கதைகளும் வாய்மொழி வழக்காகவே வழங்கி வந்துள்ளன.

கவிமணியும் பாரதியாரும் கவிதைப் படைப்பில் தமக்கெனச் சில தனித்தன்மைகளைப் பெற்றிருந்தமையால், இவர்கள் படைப்புகளின் மீது ஈடுபாடு கொண்டவர்கள் கவிமணி பரம்பரையினராகவும் பாரதி பரம்பரையினராகவும் உருக்கொண்டனர். கவிமணி, பாரதி ஆகிய இருவர் பாடல்களையும் பள்ளிப் பருவத்தில் பாடி மகிழ்ந்த அழ. வள்ளியப்பா குழந்தைப் பாடல்கள் எழுதுவதில் பெரிதும் ஈடுபாடு கொண்டார்.

**பாரதிதாசனும் குழந்தையும்**

அன்பு என்பது ஒரு பண்பு அதற்கு வடிவம் இல்லை. வண்ணம் இல்லை இதைக்கண்ணால் பார்க்க முடியாது. பார்க்க முடியாத அன்பைப் பாவேந்தர் பாரதிதாசன் தன் பாவினால் பார்க்கச் செய்கிறார்.

**‘‘தேடிய அப்பத்தில் கொஞ்சத்தை இன்னொரு**
**சின்னவனுக்குத்தர –நீ**
**ஓடுவ துண்டெனில் கண்டிருப்பாய்**
**ஊன் உள்ளத் திருந்த அன்பை’’**[98]

அன்பின் அகமகிழ்ச்சியை அருமையான பாடலாகத் தந்துள்ளார்.

குழந்தை உலகம் தனியானது அவர்கள் ஒரு விந்தையான உலகத்தைத் தமக்குள்ளே படைத்துக் கொள்பவர்கள். குழந்தைகளின் வளர்ச்சி நிலைக்கு ஏற்றார் போலப் பாடல்கள் வேறுபடுகின்றன. குழந்தை பாடலின் அடிப்படைக்கூறுகள் தீமை பயவாத இன்பம் பயக்கின்ற பொருளுடைய பாடல்களாகும். தாய்மொழி தழைக்க வேண்டுமானால் சேய் மொழி தழைக்க வேண்டும். எதிர் காலத்தில் சாதிக்கப் போவதையும், அதைக் குழந்தை உலகம் சந்திக்கப் போவதையும் தம்மை மறந்த நிலையில் ஆழ்ந்து கேட்பதையும் நாம் காணமுடிகிறது. பாட்டிகள் கதை சொல்லும் வழக்கம் இன்று நம்மிடையுறைந்து விட்டதை அறியமுடிகின்றது.

**‘‘அண்டிப்பிழைக்கும் நம்மை ஆடு இவை**
**ஆதரிக்க வேணுமடி பாப்ப’’**[99]

என்று பாப்பாவுக்கு ஆட்டின் இயல்பைக் கூறி அவற்றை ஆதரிக்க வேண்டுவது நமது கடமை என்று குறிப்பிடுகின்றார்.

### அழ வள்ளியப்பாவும், குழந்தையும்

அழ வள்ளியப்பா என்ற குழந்தைக் கவிஞர் தம் பாடலில் வினா விடை உத்தி முறையைக் கையாண்டு சின்னஞ்சிறு குழந்தைகள் அலுக்காமல் சளைக்காமல் வினாவுக்கு மேல் வினா எழுப்பித் தன் ஐயப்பாட்டைப் போக்கி உலகியல் அறிவைப் பெற இவ்வகைப் பாடல்கள் பெருந் துணை புரிகின்றன.

**‘‘வண்ணக்கிளியே வீடெங்கே?**
**மரப் பொந்தே என் வீடு**
**தூக்கணாங்குருவி வீடெங்கே?**
**தொங்குது மரத்தில் என் வீடு**
**கறுப்புக் காகம் வீடெங்கே?**
**கட்டுவேன் மரத்தில் வீடு’’**[100]

என்று வினா விடை முறையைக் கையாண்டு குழந்தைகளின் அறிவுக்கண்ணைத் திறந்துள்ளதை அறியமுடிகின்றது.

வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்தவள் பாட்டி. இவர் குழந்தைகளுக்குப் பலவித கதைகள் சொல்லி மகிழ்விப்பாள். விடுகதைகள் சொல்லி இன்புறுத்துவாள். கவிஞர் கதிரேசன் பாட்டி பற்றிக் குறிப்பிடும் போது,

**''பாட்டி வைத்த மரத்திலே,**
**பந்து போல் விளாம்பழம்**
**பாட்டி கதைகள் சொல்கிறாள்**
**பாக்கை உரலில் இடிக்கிறாள்**
**பாட்டி வாயில் பல் இல்லை**
**பவழச்சுரங்கம் பாருங்கள்''**[101]

*என்று பாட்டியின் தோற்றத்தைக் குழந்தைகளுக்கு அறிவிக்கிறார்.*

**பத்தொன்பதாம் நூற்றாண்டில் குழந்தை**

*பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய எச்.ஏ. கிருஷ்ண பிள்ளையே சின்னஞ்சிறுவருக்கென்று வயது குறிப்பிட்டுப் பாடல் எழுதிய முதல் கவிஞராவார். 'பால்ய பிரார்த்தனை' என்னும் தலைப்பிட்ட இப்பாடல் குழந்தைகளுக்காக 1879-ஆம் ஆண்டு நற்போதகம் என்னும் இதழில், சூலைத் திங்கள் வெளியீட்டில் இடம் பெறுகின்றது.*

*குழந்தைகள் குழந்தைப் பருவ முதலாகவே ஆன்மீக வழியில் நடத்தப்பெற வேண்டுமென்ற ஆர்வம் 'கிறித்துவக் கம்பன்' என்று சிறப்புப் பெற்ற கிருஷ்ண பிள்ளை அவர்களைப் 'பால்ய பிரார்த்தனை' எழுதத் தூண்டியுள்ளது. விவிலியக் கருத்துகளையும், இயேசு பெருமானுடைய மலைப்பொழிவின் பிழிவையும் தம்மால் இயன்ற வரை எளிமையான சொற்கள் கொண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.*

**''பொய்யும் வஞ்சமும் போக்கியமே**
**மெய்யும் அன்பும் விடாமல்யான்**
**தெய்வமே உனைச் சேவித்திங் (கு)**
**உய்யும் நல்வரம் உதவுவாய்**
**எனக்கு மற்றவன் எதைச்செய்ய**
**மனங்கொள் வேன்அதை மற்றவன்**
**தனக்கு யான்செயத் தகுமனம்**
**எனக்கு நல்கிடும் யேசுவே''**[102]

*எனும் பாடலில் ஐந்து வயதுள்ள சிறு குழந்தைகள் உள்ளங்களிலும் பதியத் தக்க இயற்சொற்களால் தெளிவான பொருளுடைய சிறுசிறு கவிகளால் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.*

குழந்தையின் உள்ள வளர்ச்சியை அதன் வயதிற்கேற்பப் பாகுபாடு செய்துள்ள ஆய்வாளர், கருத்துக்களைப் படிப்படியாக மனத்தில் அமைத்துக் கொள்ளும் திறம், நான்காம் நிலையினரான ஒன்பது முதல் பதினொன்று அகவைக்குட்பட்ட குழந்தைகளிடமே அமையக்கூடும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

மக்கட் பேற்றின் சிறப்பு நீண்டகாலமாகத் தமிழ்நாட்டில் உணரப்பட்டு வந்ததெனினும் குழந்தை இலக்கியத்தின் இன்றியமையாமை உணரப்பட்டதாகக் கருதப்படும். இடைக்காலத்தில் எழுந்த ‘பிள்ளைத் தமிழ்’ என்னும் சிற்றிலக்கிய வகைகள், அக்காலப் புலவரின் ஆற்றலையும் கற்பனையையும் பாட்டுக் கலையில் அவர்கள் செய்ய வல்ல மாய வித்தைகளையும் காட்ட வல்லனவாக அமைந்தனவேயன்றிக் குழந்தைகள் பாடி இன்புற்று மகிழும் எளிய இலக்கியமாக அமையவில்லை என்பது பாரதி, கவிமணியின் படைப்புகளை ஒப்புநோக்கும் போது புலனாகிறது.

### வாய்மொழி இலக்கியமும் குழந்தையும்

வாய்மொழியாக வழங்கப்பட்டு வரும் இலக்கியங்கள் இன்று நாட்டுப்புற இலக்கியங்கள் என வழங்கப்படுகின்றன. இதன் வகைகளாகிய தாலாட்டும் நாட்டுப்புறக் கதைகளும், விடுகதைகளும், நாட்டுப்புற விளையாட்டுப் பாடல்களும் குழந்தைகளால் சுவைக்கப்படுவனவாகும்.

இலக்கியங்கள் மனிதனின் குழவிப் பருவந்தொட்டு முதுமைப் பருவம் வரையில் துய்க்கத் தக்கவாறு பல்வேறு பருவ நிலைக்களுகேற்பப் பல்வேறு வகைகளாகப் படைக்கப்படுகின்றன. அன்னையின் அணைப்பில் வாழும் குழவிப் பருவத்திலேயே, தாலாட்டு மனிதனுக்கு ஓசையின்பத்தை நுகரக் கற்றுக் கொடுத்து விடுகிறது.

குழந்தை வளரும் நிலையின் பல்வேறு பருவங்களிலும் அன்னையின் நினைவில், எழுதாக் கிளவிகளாக வழிவழியாகப் போற்றப்பெற்றுப் பாதுகாக்கப்பட்டு வரும் வாய்மொழி இலக்கியமான வாய்மொழிப் பாடல்கள் குழந்தைகளை மகிழ்விக்கின்றன. குழந்தை மூன்று மாதங்கள் ஆனதும், அதன் விரல்களை நீட்டி மடக்கப் பயிற்சியளிக்க விரும்பும் தாய்,

**''கீரிகீரி நண்டுபிடி**
**கீரிப்பிள்ளை நண்டுபிடி''**[104]

என்று சொல்லி, நண்டு ஓடுவது போன்று விரல்களை நீட்டி மடக்கிக் காட்டிக் கற்றுக் கொடுக்கிறாள்.

தாய் கூறும் இச்சொற்களில் அமைந்துள்ள ஓசையின்பத்தை மனதில் படியச்செய்து கொண்ட குழந்தை, தாய் இதனைக் கூறத் தொடங்கியதும் விரல்களை நீட்டி மடக்குகின்றது. விரல்களைச் சேர்த்துத் தாமரை மொட்டுப்போல வைத்துக் கொண்டுயிருப்பதை,

**''தாப்பூ தாமரைப்பூ**
**தாயார் வீட்டுச் சண்பகப்பூ**
**மாம்பூ மல்லிகைப்பூ**
**மாமன் வீட்டு மகிழம்பூ''**[105]

இப்பாடலின் வாயிலாக அறியமுடிகின்றது. தாய் தன் கைகளை அசைத்துக் காட்ட, அது கண்டு, தன் கைகளையும் அசைத்துக் காட்டிப் பயிற்சி செய்யும் குழந்தை, மீண்டும் அத்தாய் அப்பாடலைக் கூறத் தொடங்கியதும் அவ்வோசையின்பத்தை மனத்துட்கொண்டு தன் பிஞ்சுக் கைகளை அசைக்கின்றது. இடது உள்ளங்கையை விரித்துக் காட்டிக் கொண்டு வலது கை ஆட்காட்டி விரலால் இடது உள்ளங்கையின் நடுப்பகுதியில் ஒற்றி ஒற்றி எடுத்துக்கொண்டு வருகிறது என்பதை,

**''அத்தெ சித்தெ நெய்யூத்து**
**ஆறிப் போகும் நெய்யூத்து**
**பிஞ்சுக் கத்தரிக்கா பொரிச்சேன்**
**பின்னும் கொஞ்சம் நெய்யூத்து**
**குண்டுக் கத்திரிக்கா பொரிச்சேன்**
**கூடக் கொஞ்சம் நெய்யூத்து''**[106]

என்ற பாடலடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

மறுமுறை தன் அன்னை அப்பாடலைப் பாடக் கேட்டதுமே அக்குழந்தை தன் இடது உள்ளங்கையில் வலது கை ஆட்காட்டி விரலை ஒற்றி ஒற்றி எடுக்கத் தொடங்குகிறது. சப்பாணி கொட்டும் பருவத்தில் கைகளைக் கொட்டிக் காட்டும் தாய்,

**''தத்தாங்கி கொட்டும் பிள்ளை**
**தயிருஞ் சோறுந் தின்னும் பிள்ளை**
**அப்பஞ் சுட்டால் தின்னும் பிள்ளை**
**அவல் இடிச்சால் மொக்கும் பிள்ளை''**[107]

என்று பாடிக் காட்ட, குழந்தையும் இப்பாடலில் ஓசையின்பத்தை மனத்தில் அமைத்துக் கொண்டு, மீண்டும் ஒருமுறை பாடத் தொடங்கியதுமே சப்பாணி கொட்டத் தொடங்குகிறது.

குழந்தை உட்காரும் பருவம் வந்ததும் தாய் தன் குழந்தையை உட்காரவைத்து, முன்னும் பின்னுமாக உடலையசைத்துச் சாய்ந்தாடக் கற்றுக் கொடுக்கிறாள். தன் குழந்தையைச் சாய்ந்தாட வைக்கும் அன்னை,

**''சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு**
**சாயக் கிளியே சாய்ந்தாடு**
**குத்துவிளக்கே சாய்ந்தாடு**
**கோயில் புறாவே சாய்ந்தாடு**
**கட்டிக் கரும்பே சாய்ந்தாடு**
**கனியே பாகே சாய்ந்தாடு''**[108]

என்று பாடுகின்றாள். தன் குழந்தை சொன்னதைச்சொல்லும் கிளிப்பிள்ளையாய் அமைந்து மொழியினைக் கற்றுக் கொள்ள வேண்டுமென்பதையும், வீட்டில் ஏற்றி வைத்த விளக்குப் போலச் சமுதாயத்தில் ஒளிவீசி நிற்க வேண்டும் என்பதையும், கோயில் புறாபோல் அமைதியாக வாழவேண்டும் என எண்ணுகின்றாள். அக்குழந்தை கட்டிக் கரும்பு, கனி, பாகு ஆகியவற்றினும் இனிமையானது என்பதை வெளிப்படுத்துகின்றாள். ஆனால், இப்பாடல் அன்னையின் மனத்தில் தோன்றும் இவ்வளவு பொருளையும் அதைக் கேட்கும் குழந்தை அறிந்து கொள்வதில்லை. இதை கேட்கும் பெரியவர்களுக்குத்தான் பாடலிலமைந்துள்ள பொருள் புலப்படுமாறு உள்ளது.

ஆனால், குழந்தையோ இப்பாடலில் அமைந்துள்ள தன் அன்னையின் அன்பு மிகுதியையும் ஒலிநய இன்பத்தையுமே உணர்கின்றது. பாடலைக் கேட்டதுமே முன்னும் பின்னுமாக உடலை அசைத்துச் சாய்ந்தாடத் தொடங்குகிறது.

குழந்தை தன் கைகளை வீசி மகிழ்ச்சியடையும் போது, அதன் மகிழ்ச்சியை மிகுவிக்க,

**‘‘கைவீசம்மா கைவீசு**
**கடைக்குப் போகலாம் கைவீசு**
**மிட்டாய் வாங்கலாம் கைவீசு**
**மெதுவாய்த் தின்னலாம் கைவீசு**
**பட்டு வாங்கலாம் கைவீசு**
**பகட்டாய் உடுக்கலாம் கைவீசு**
**லட்டு வாங்கலாம் கைவீசு**
**இனிக்கத் தின்னலாம் கைவீசு’’**[109]

*என்று தாய் பாடுகிறாள். இதை கேட்கும் குழந்தை மகிழ்ச்சி மேலிடக் கை வீசுகின்றது. இதைக் காணும் அனைவரும் மகிழ்ச்சியடைகிறோம். வானில் உலவும் அம்புலியைக் கை நீட்டி அழைக்கும் பருவத்தில்,*

**‘‘நிலா நிலா ஓடிவா**
**நில்லாமல் ஓடிவா**
**மலைமேலே ஏறிவா**
**மல்லிகைப்பூக் கொண்டு வா**
**நடுவீட்டில் வை**
**நல்லதுதி செய்’’**[110]

*எனப்பாடும் அன்னை, தன் குழந்தைக்கு அம்புலியை அழைக்கக் கற்றுத் தருகிறாள்.*

*குழந்தை காலை ஊன்றி நிற்க முயலும் பருவத்தில் அன்னை தன் குழந்தையின் கைகளைப் பிடித்துக் கொண்டு மேலும் ஊக்கம் அளிக்கின்ற வகையில்,*

**‘‘சிங்கு சிங்காளாம் மாவிடிச்சாளாம்**
**கோலம் போட்டாளாம் கூழ் குடிச்சாளாம்’’**[111]

*எனப் பாடி, அக்குழந்தை பெருமகிழ்ச்சியோடு தன் முயற்சியினால் ஏற்படக்கூடிய தோல்வியையும் தசைவலியையும் உணராத வகையில் ஊக்குவிக்கின்றாள். தானாகவே நின்று, தளர்நடை பயின்று ஆடி மகிழும் நிலையில் அன்னை தன் குழந்தையிடம்,*

**‘‘சங்கு சக்கரச் சாமி வந்து**
**சிங்கு சிங்கென ஆடுச்சாம் – சாமி**
**சிங்கு சிங்கென ஆடுச்சாம்’’**[112]

*என்று பாடி, ஆடச் செய்து மகிழ்விப்பதை காணமுடிகின்றது.*

குழந்தையின் வளர்ச்சி நிலை ஒவ்வொன்றிலும், குழந்தைக்கு மகிழ்ச்சியூட்டவும், அதற்குத் தேவையான தசைப்பயிற்சியையும் அளிக்க அன்னைக்கு இவ்வாய்மொழிப் பாடல்கள் பெருந்துணை புரிகின்றன. பலவகை இயக்கங்களின் தொடர்பாக விளங்கும் செயல்களைக் குழந்தைக்குள் கற்பிக்க வேண்டுவது இன்றியமையாததால், அன்னையர் அவற்றைக் கற்பிப்பதற்கு முன்னர் அத்தொடர் பாட்டில் ஒழுங்காக விளங்குகிற இயக்கத்தினைச் செய்து வருவதற்காக, தசைகளை இயக்கி, விரும்பிய வகையிலெல்லாம் அடக்கியாளுமாறு குழந்தையைப் பயிற்றுவிக்க வேண்டிய கடப்பாடு உடையவராகின்றனர்.

"ஆழ்ந்து சிந்திக்கும் திறமுடைய ஒரு தாய் தன் குழந்தைக்கு அதன் இளம் பருவத்திலிருந்தே, சொற்களின் சந்த நயத்தையும் பாடல்களையும் சுவைகக்கும் வாய்ப்பை ஏற்படுத்துகிறாள். செவிலியப் பாடல்கள், விரலசைக்கும் விளையாட்டுப் பாடல்கள், செயல் விளக்கப்பாடல்கள், ஆகியவை குழந்தைகளுடன் விளையாடுவதற்கான பாடல்களாகும்''[113] என்னும் மேல் நாட்டு ஆய்வாளர் கருத்து ஈண்டு குறிப்பிடத்தக்கது இப்பாடல்கள் தற்போது எழுத்துருவம் பெற்று வருவதுடன் ஆய்வுப் பொருளாகவும் இடம் பெற்று வருவது சிறப்புக்குரியதாகும்.

மொழி கற்றுக்கொள்ளாத குழந்தைப் பருவத்தில் ஓசையின்ப நுகர்ச்சியைத் தம் பாடல்கள் வாயிலாகக் கற்றுக்கொடுத்து வரும் தாய்மார், தம் குழந்தைகளுக்கு, அவர்கள் மொழியறிந்து விட்ட பின், கதைகள் கூறிக் கதை கேட்கும் ஆர்வத்தைத் தோற்றுவிக்கின்றனர்.

குழந்தைகளை நீராட்டும் போதும், உணவூட்டும் போதும், உறங்கச் செய்யும் போதும் பல கதைகளைக் கூறித் தாய்மார் அவர்களுக்கு மொழித் திறத்தையும் கற்பனைத் திறத்தையும் ஒருங்கே ஊட்டுகின்றனர். குழந்தைகளும் தாங்கள் வாழும் சுற்றுச் சூழலிற் காணப்படும் காக்கை, குருவி, நாய், ஆடு, மாடு, கோழி ஆகியவற்றை முதன்மைப் பாத்திரங்களாகக் கொண்ட கதைகளை மிகவும் விரும்பி கேட்கின்றன.

காட்டுமிராண்டியாக இருந்த மனிதன் தொடக்க நிலையிலேயே, கதைகள் அவனது வாழ்வில் சிறந்த இடத்தைப் பெற்றிருக்க வேண்டுமென்று மானிடவியலாளர் குறிப்பிடுவர். தாழ்ந்த நெற்றியையும், முன் தள்ளிக் கொண்டிருக்கும் தாடையையும், சிரைத்தறியாத் தலையையுங் கொண்ட நம் முன்னோர் கதை கேட்கும்போது, அவர்கள் எண்ணங்களின் வழியே என்ன

நிகழ்ந்தது என்று நம்மால் அறிய முடியாவிடினும், கதை அவனுடைய வாழ்க்கை அறிவை உயர்த்தியது என்னும் அதன் அடியமைந்த காரணத்தை நம்மால் உய்த்துணர முடிகிறது.

நம் இந்திய மண்ணிலும் இத்தகு காவியங்கள் தோன்றின. இராமாயணம் மகாபாரதம் போன்ற இதிகாசங்கள் இவ்வாறான ஒப்பற்ற தலைவர்களைக் கொண்டு உருவாகியுள்ள நிலையைக் காணலாம். வாய்மொழி இலக்கியமாக இருந்த குழந்தைகளுக்கான கதைகள் இராமாயண மகாபாரத கதைகளாகவே தொடக்கக் காலத்தில் அமைந்திருந்தன. தம் குழந்தைகளிடம் வீரவுணர்ச்சி ஏற்பட வேண்டுமென விரும்பிய தாய்மார்கள் பாரதப் பாத்திரமான அர்ச்சுனனின் வீரத்தையும் திறமையையும் விளக்கும் நிகழ்ச்சிகளைச் சிறுசிறு கதைகளாக்கிக் கூறினர். அறவுணர்வூட்ட எண்ணிய அன்னையர் தருமரின் அறச்செயல்களை விளக்கும் நிகழ்ச்சிகளைக் கதைகளாகக் கூறினர்.

‘அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்’ என்னும் அறச் சட்டத்தைத் தம் குழந்தைகளின் மனத்தில் பதிய வைக்க எண்ணிய தாய்மார்கள் இராமனின் காடேகு நிகழ்ச்சியைக் கதையாகக் கூறினர். தம் குழந்தைகள் உடலுரம் பெற்றவர்களாகத் திகழ வேண்டுமென்னும் விருப்புற்ற தாய்மார்கள் உடல் வலிமையின் உயர்வைத் தம் குழந்தைகளுக்கு உணர்த்தக் கூடிய வகையில் பீமனின் உடலுரம் பற்றி விளக்கும் மகாபாரத நிகழ்ச்சியைக் கதைகளாகக் கூறினர். உடன் பிறப்பாளரிடையே இருக்க வேண்டிய அன்பு வெளிப்பட உணர்த்த விரும்பியோர், பரதன் இராமனின் காலணிகளை அரியனையேற்றி அரசாண்ட நிகழ்ச்சியைக் கதையாகக் கூறினர். இவ்வாறு தம் குழந்தைகளுக்கு அறவுணர்வும், மறவுணர்வும், அருளுணர்வும் ஊட்டக் கருதிய தாய்மார்கள் கூறிய கதைகள் யாவும் வாய்மொழியாகவே வழங்கி வந்துள்ளன.

பிற்காலத்தில் புராணக் கதைகளும் குழந்தைகளுக்குச் சொல்லப்பட்டன. அரிச்சந்திரன், மனுநீதிச்சோழன், சிபிச்சக்கரவர்த்தி, சிரவணன் ஆகியோர் கதைகளும் புராணங்களில் சொல்லப்பட்ட செய்திகளின் வாயிலாக குழந்தைகளுக்கு வாய்மை, நேர்மை, அருளுடைமை, அன்புடைமை ஆகிய நற்பண்புகளை வளர்த்தனர்.

“பொதுவாக எல்லாச் சமுதாயங்களிலும் வழக்கிலுள்ள நாட்டுப் பாடல்களிலே கணிசமான பகுதி குழந்தைகள் சம்பந்தமானவையாகும். இவற்றைப் பற்றுக் கோடாகக் கொண்டு, புதிய புதிய ஆக்கங்களைச் செய்வதற்கு

ஏற்ற மனப்பக்குவம் வேண்டும்''[114] என்பர். இந்த வகையில் ஏற்ற மனப்பக்குவம் பெற்று மழலைச்செல்வங்களுக்காகப் பாடல்களைப் பாடியவர் கவிமணியாவார். இதற்குச் சான்றாகக் கவிமணியின் பொம்மைக் கல்யாணம், இயற்கை, பாண்டியாடுதல், தாலாட்டு போன்ற தலைப்புகளில் அமைந்த பாடல்களைக் காட்டலாம். கூட்டுக் குடும்பங்கள் பெருவழக்காக இருந்த காலத்தில் வீட்டிலுள்ள பாட்டிமார் குழந்தைகளைக் கூட்டிவைத்து இந்தக் கதைகளையே கூறி வந்தனர். அச்சுக்கலை பெருவழக்கான பின் இந்தக் கதைகளே நூல்களாகவும் அச்சேறின.

இலண்டன் கதாசபை உறுப்பினர் பண்டித நடேச சாஸ்திரியார், அந்நாள் சென்னைப் பாடப் புத்தக, இலக்கியக் கழகத்தின் வாயிலாக 1897-ஆம் ஆண்டு அச்சிட்டு வெளியிட்ட திராவிட பூர்வ காலக் கதைகளின் முன்னுரையில், இச்சிறு புத்தகத்தில் அடங்கியுள்ள கதைகளில் அநேகம் நான் சிறுவயதாகவிருக்கும் பொழுது என்னுடைய தாயார், பாட்டி முதலிய சமூக பந்தங்கள் கதைகளானதால் அவை மனதில் நன்றாகப் பதிந்ததுமன்றி இம்மாதிரியான கதைகளைக் கேட்க ஒரு ஆவலும் உண்டாயிற்று என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர் அப்புத்தகத்தில் அடங்கியுள்ள கதைகளெல்லாம் (பழமையான) கதைகள் என்றும் 300-400 வருடங்களுக்கு முந்தி மக்கள் அறிந்து கொண்ட கதைகள் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இவருக்கு முன்பே 1876-ஆம் ஆண்டில் உசேன்கான் என்பவரால் தொகுத்து வெளியிடப்பட்ட 'கதா சிந்தாமணி'யில் மரியாதை ராமன் தீர்ப்புக் கதைகள், அப்பாசியின் யுத்திக் கதைகள், தென்னாலிராமலிங்கையன் கதைகள், கோமுட்டி உபாயக் கதைகள், வேடிக்கை கதைகள், கட்டுவாக்கியக் கதைகள், விடுகதைகள் ஆகியவை இடம் பெற்றுள்ளன. இவ்வாறு வாய்மொழி வழக்காக வழங்கிவந்த, வழி வழியாகச் சொல்லப்பட்ட கதைகளும், பாட்டி கதைகளும் நூல் வடிவம் பெற்றுச் சென்ற நூற்றாண்டிலேயே குழந்தைகளிடம் செல்வாக்குப் பெற்றுள்ளன.

இன்று குழந்தையுலகில் பெரும் செல்வாக்குப் பெற்றுள்ள 'அம்புலி மாமா' என்னும் இதழிலுள்ள அனைத்துக் கதைகளுமே மேலே கூறப்பட்ட கதைகளின் மறுவடிவங்களாகக் காணப்படுகின்றன என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. வாய்மொழி வழக்காக வழங்கப் பெற்று வந்த பாடல்களும் கதைகளும் கடந்த இரு நூற்றாண்டுகளில் வளர்ச்சிப்பெற்றுக் குழந்தை இலக்கிய வகைகளாக உருவெடுத்துள்ளன. இதற்கு உரைநடை இலக்கிய வளர்ச்சியும் அச்சுக்கலை வளர்ச்சியும் அடிப்படைக் காரணங்களாக அமைந்தன எனலாம்.

## தொகுப்புரை

- தமிழிலுள்ள இலக்கியங்கள் அனைத்துமே குழந்தைகள் பற்றிய செய்திகளைத் தெளிவாக எடுத்துக்கூறி அதன் நுணுக்கங்களையும் கருத்துக்களையும் தெளிவாகப் புலப்படுத்திக் காட்டியுள்ளமை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.
- தொல்காப்பியம் தொடங்கி இன்று வரை இலக்கியங்கள் வாயிலாகக் குழந்தைகளைப்பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. குழந்தைகளுக்குக் கதைகள் என்றால் மிகவும் பிடிக்கும் கதைகள் குழந்தைகளுக்காகக் கூறப்பட்ட வாய்மொழிக் கதைகளாகவே இருக்கின்றன என்பதை தொல்காப்பியம் வழி நிரூபிக்கப்பட்டுள்ளது.
- தமிழின் முழு முதல் இலக்கண நூலான தொல்காப்பியமும் குழந்தைகளைப் பற்றி ஆங்காங்கே சுட்டிக்காட்டி அதன் விளக்கித்தினையும், பொருட் சுவையையும் சுட்டியுள்ளது.
- திருவள்ளுவர் குழந்தைப் பேற்றின் முக்கியத்துவத்தை மனித குல வளர்ச்சிக்கும் சமூக பெருக்கத்திற்கும் குழந்தை அடிப்படையானது வாழ்க்கையில் அனைத்து செல்வங்களையும் பெற்றிருந்தாலும், குழந்தைப்பேறு இல்லையென்றால் வாழ்ந்து பயனில்லை, ஆகவே வாழ்க்கையின் பயன்களில் குழந்தைப்பேறும் மிகவும் அவசியம் என்பது புலனாகிறது.
- சங்க இலக்கியங்களில் காணலாகும் நாடக உரைநடையைத் தனி உரையாடல், தனிமொழி, குழு உரையாடல் என நான்கு நிலைகளில் வகைப்படுத்தி உணர்வுடையவராகக் கேட்போர் அமையாதபோது பேசுவோர் தம் எண்ணங்களை வெளிப்படுத்த விரும்புவதில்லை. ஆனால் தன்மைச் சூழல் இத்தகு மாந்தரிடம் எண்ண ஓட்டம் மிகுதியாக வாய்ப்பளிக்கின்றது. தலைவி தன்னுடைய தனிமொழியை பேசும்போது பல்வேறு இடங்களில் குழந்தைகள் குறித்த செய்திகளையும் விவரமாக விளக்கப்பட்டுள்ளது.

- தமிழர்களின் வீரம், கொடை, பண்பு, போர்நெறி என்று மக்களையும் அரசர்களையும் புகழ்ந்த புறநானூற்றில் குழந்தைகள் பேசும் மழலை மொழியும், செய்யும் செயலும் கண்ணுக்கும் செவிக்கும் உடலுக்கும் இன்பம் தந்து மகிழ்விப்பதைத் தெளிவுறுத்துகிறது.
- குழந்தை வளரும் நிலையின் பல்வேறு பருவங்களிலும் அன்னையின் நினைவில், எழுதாக் கிளவிகளாக வழிவழியாகப் போற்றபெற்றுப் பாதுகாக்கப்பட்டு வரும் வாய்மொழி இலக்கியமான வாய்மொழிப் பாடல்கள் குழந்தைகளை மகிழ்விக்கின்றன என்பதை அறியமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்

1. திருக்குறள்.61
2. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப.583
3. முத்துசண்முகன், வே. கிருட்டிணசாமி, தமிழில் குழந்தைப் பாடல்கள், ப.13
4. கம்பராமாயணம், பா.எ.300
5. மேலது., பா.எ.382
6. குறுந்தொகை, பா.246, வரிகள் 6-7
7. மேலது., பா.61, வரிகள் 1-3
8. புறநானூறு, பா.4. அடி.18
9. திருக்குறள், 66
10. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.14
11. மேலது., நூ.144
12. மேலது., நூ.172
13. மேலது., நூ.163
14. மேலது., நூ.144
15. மேலது., நூ.145
16. மேலது., நூ.148
17. மேலது., நூ.149
18. மேலது., நூ.எ.567
19. பிரேமா ரேவதி, குழந்தைகள் சுமங்கலிகள் லாபம், காலச்சுவடு, ப.49
20. பூவண்ணன், தேசியக் கருத்தரங்கம் முதன்மை உரை, சிறுவர் இலக்கியம், ப.5
21. மேலது., ப.187
22. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி ஏழு, தமிழ்ப்பல்கலைக்கழகம், ப.744
23. [redacted]
24. [redacted]
25. மேற்கோள், முத்துச்சண்முகம் உ.வே.கிருட்டிணசாமி, மு.நூ.ப.18
26. மேலது., ப.20
27. மேலது., ப.18
28. ஈ.த. ராஜேசுவரி, குழவி உள்ளம், ப.58
29. வாழ்வியற் களஞ்சியம், மு.நூ.ப.734
30. பிரிட்டானிக்கா கலைக்களஞ்சியம், ப.317

31. வாழ்வியற் களஞ்சியம், மு..நூ.தொகுதி- ப.50
32. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.எ.384
33. வாய்மொழிப்பாடல், அழவள்ளியப்பாவும் குழந்தையும், ப.45
34. நற்றிணை, பா.110, 1-4
35. அகநானூறு, பா.216, 5-7
36. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நூ.எ.475
37. மேலது., நூ.எ.477
38. கலித்தொகை, பா.80, 1-6
39. மேலது., பா.83, 1-3
40. ஐங்குறுநூறு, பா.403 , 1-2
41. மேலது., பா.108, 1-4
42. கலித்தொகை, பா.83,1-4
43. அகநானூறு, பா.184, வரிகள் 1-4
44. வளையாபதி, பா.12
45. பெரும்பாணாற்றுப்படை, பா.249
46. பட்டினப்பாலை, பா.24-25
47. கலித்தொகை, பா.81, வரி.6-10
48. நற்றிணை, பா.287, வரிகள் 1-5
49. புறநானூறு, பா.41, வரிகள் 14-15
50. கலித்தொகை, பா.80, வரிகள் 16-17
51. மேலது., பா.80, வரிகள் 11-15
52. திருக்குறள்.66
53. புறநானூறு, பா.164, வரிகள் 1-5
54. மேலது., பா.188, வரிகள் 1-5
55. மேலது., பா.92, வரிகள் 1-3
56. மேலது., பா.312, வரிகள் 1-6
57. மேலது., பா.278, வரிகள் 1-9
58. மேலது., பா.86, வரிகள் 1-6
59. திரு.வி. கல்யாணசுந்தரனார், முருகன் அல்லது அலகு, ப.105
60. திருக்குறள்.63
61. மேலது., பா.69

62. மேலது., பா.64
63. மேலது., பா.70
64. புறநானூறு, பா.312
65. திருக்குறள். பா. 67
66. மேலது., பா. 68
67. மேலது., பா. 78
68. நான்மணிக்கடிகை, பா.105, வரிகள் 1-4
69. இனியவை நாற்பது, பா.14, வரிகள் 1-4
70. திருக்குறள், பா. 68
71. திரிகடுகம், பா. 64, வரிகள் 1-4
72. ஏலாதி, பா.55, வரிகள் 1-4
73. மேலது., பா.41, வரிகள் 3-4
74. சிறுபஞ்சமூலம், பா.34, வரிகள் 4-2
75. நாலடியார், பா.201, வரிகள் 1-4
76. மேலது., பா.198, வரிகள் 3-4
77. மேலது., பா.212, வரிகள் 1-2
78. திரிகடுகம், பா.38, அடி.3
79. நான்மணிக்கடிகை, பா.29, வரிகள் 1-4
80. திரிகடுகம், பா.32, வரிகள் 1-2
81. நாலடியார், பா.33 வரிகள் 3-4
82. திரிகடுகம், பா.46, வரிகள் 1-2
83. சிறுபஞ்சமூலம், பா.125, வரிகள் 1-2
84. ஏலாதி, பா.139, அடி.3
85. குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா, வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம், முதற்பதிப்பு, 1981, ப.9
86. மயிலை சீனி வேங்கடசாமி, பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் (1800-1900), பக்.64
87. க. கைலாசபதி, நவீன இலக்கியத்தின் அடிப்படைகள், முதற்பதிப்பு, 1980, ப.60
88. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், பா.36, வரிகள் 1-4
89. பன்னிரு பாட்டியல், இனவியல், பா.17, வரிகள் 1-3
90. நாலாயிரத்திவ்யப் பிரபந்தம், பா.1.1.9
91. மேலது., 1.2.19
92. மேலது., 1.9.7

93. மேலது., 2.4.6

94. மேலது., 2.9.1

95. மேலது., 2.9.10

96. கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை, நெற்பானையும், ப.83

97. மேலது., ப.17

98. பாரதியார், பாப்பா பாட்டு, ப.99

99. மேலது., ப.33

100.அழவள்ளியப்பாவும் குழந்தையும், ப.97

101. கதிரேசன் செட்டியார் குழந்தைப்பாடல், 61

102.ஹெச். ஸ்ரீகிருஷ்ணப்பிள்ளை, பால்ய பிரார்த்தனை, ப.74

103.டாக்டர் மு.வ. இலக்கியத்திறன், முதற்பதிப்பு, ஜனவரி 1959, பக். 55-56

104.வாய்மொழிப்பாடல்கள் அழவள்ளியப்பாவும் குழந்தையும், ப.14

105.மேலது., ப.15

106.மேலது., ப.16

107.மேலது., ப.17

108.மேலது., ப.18

109.மேலது., ப.34

110. மேலது., ப.18

111. மேலது., ப.25

112. மேலது., ப.30

113. Anne Fleet, Childrens Libararies , first Edition, P.4

114. முத்துச்சண்முகன், வெ. கிருட்டிணசாமி, தமிழில் குழந்தைப் பாடல்கள், பக்.26-29.

# இயல் - 2

## குழந்தை வளர்ப்பு முறைகள்

பரிணாம வளர்ச்சியில் தோன்றிய மனித சமூகம் வேரூன்றிய காலந்தொட்டு குழந்தைகள் பற்றிய எண்ணம் மக்கள் மனதில் எழுந்துள்ளன. குழந்தை வளர்ப்பில் பிறர் கவனம் செல்லாதிருந்தாலும் தாய் தன் குழந்தையை சிறந்த முறையில் சமூகத்தில் உயர்ந்து நிற்கும் ஒருவனாக வளர்க்க வேண்டும் என்ற நோக்கோடு திகழ்ந்திருந்தார்கள்.

காலத்தைக் காட்டும் கண்ணாடியாகத் திகழும் இலக்கியங்களில் குழந்தைகளைப் பற்றிய அழகியல் மற்றும் அன்பியல் கூறுகள் இயற்கையோடு இயைந்து இயல்பாகவும், புனைந்தும் காலந்தோறும் இலக்கியப் படைப்பாளர்கள் பதிவு செய்துள்ளனர். நாகரிக வளர்ச்சியால் குழந்தை வளர்ப்பில் சிறிது மாற்றம் ஏற்பட்டாலும் குழந்தை வளர்ப்பில் தொன்று தொட்டு வரும் பண்பாட்டுக் கூறுகள் பெரிதும் மாற்றங்கள் காணப்படுவதில்லை. தொடக்கக் கால சமூகம் தாய்வழிச் சமூகம் என்பதால் தாய்மார்களும் குழந்தைகளும் மக்கள் மனதில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்திருந்தார்கள்.

தாய்வழிச் சமூகம் பற்றிய முழுமையான பதிவுகள் நம்மிடையே இல்லையென்றாலும் அதன் எச்சத்தை சங்க இலக்கியங்களில் காணமுடிகின்றது. அந்த வகையில் சங்க இலக்கியங்களில் குழந்தை வளர்ப்பும் குழந்தைகளைப் பற்றிய மேம்பட்ட எண்ணமும் எவ்வகையில் காணப்படுகின்றது என்பதை இவ்வியலில் ஆராயப்படுகிறது.

மனித வாழ்வின் பெறற்கு அரிய பேறுகளுள் சிறந்தது மக்கட்பேறு. அதுவே மணவாழ்வின் மிகப்பெரிய இன்ப நிறைவாகும். குழந்தை என்பது கணவன் மனைவியினது அன்பின் கனி, அவர்களது உறவின் உயிருள்ள அடையாளம். அவர்களுடைய ஈருயிர்களும் அன்பால் ஒன்றி மற்றொரு உயிராக மலர்ந்திருப்பதே அவர்களது குழந்தை. அது இல்லறத்தின் இணையற்ற செல்வம், கணவனும் மனைவியும் ஒருவருக்கு ஒருவர் தரும் ஒப்பற்ற பரிசு. மழலையில் மட்டும் அன்று, குழந்தைக் கருவுறுதலிலிருந்து அது பிறந்து ஆளாகும் வரை

உள்ள ஒவ்வொரு நிலையிலும் பெற்றோருக்கு எத்தனையோ வியப்புகள், பெருமைகள்! அதன் ஆளுமையினது ஒவ்வொரு வளர்ச்சியிலும் அவர்களுக்கு எவ்வளவோ மகிழ்வும், மனநிறைவும் உண்டாகும்.

**மகிழ்ச்சியும் வளர்ச்சியும்**

குழந்தை பெற்றோருக்கு மகிழ்ச்சியையும் வளர்ச்சியையும் தருகின்றது. பெற்றோர் குழந்தைகளை வளர்க்கிறார்கள் என்பது நமக்குத் தெரிந்த உண்மை. ஆனால் குழந்தைகளால் பெற்றோரும் வளர்கிறார்கள் என்பது நாம் தெரிந்து கொள்ள வேண்டிய உண்மை. உளவியல் அறிஞர் எரிக்சன் இதனைத் தெளிவுப்படுத்தியுள்ளார். குழந்தையை வளர்ப்பதன் வழி, பெற்றோர்கள் பாசத்திலும், பண்புகளிலும் வளருகின்றனர். அவர்களுடைய ஆளுமைகள் பண்பட்டுப் பக்குவம் அடைகின்றது. கணவன் - மனைவி உறவும் வளம்பெற்று வலுவடைகிறது எனலாம்.

குழந்தை வளர்ப்பு அருமையான அனுபவம் மட்டும் அன்று. பெற்றோர்களின் கடமைகளுள் மிகவும் பெரியது. பொறுப்பானது, பாரமானது என்பதை எவரும் மறுக்க இயலாது. மேலும் குழந்தைகளின் பிறப்பும் வளர்த்திடும் பொறுப்பும் கணவன் மனைவி உறவுகளில் சில பிரச்சனைகளை ஏற்படுத்துவது இயல்பாகும். ஆழமற்ற பொருத்தமற்ற சில திருமண உறவுகளில் குழந்தை வளர்ப்பின் கடமைகள் வேதனையான விரிசல்களுக்கும் உறவு முறிவுக்கும் கூடக் காரணம் ஆகிவிடுகின்றன. குறிப்பாக, தங்கள் குழந்தைகளை வளர்க்கும் முறைப்பற்றித் தாய் தந்தைக்கு இடையே கருத்து வேறுபாடுகள் ஏற்படுவது உண்டு. அவற்றால் சில குடும்பங்களில் அவர்களின் உறவு மட்டும் அன்று, குழந்தைகளின் வளர்ச்சியும் கேள்விக்குறி ஆகிவிடுகிறது எனலாம்.

**குழந்தையும் மனிதப் பண்புகளும்**

குழந்தைப் பேற்றின்வழி கணவனும் மனைவியும் தந்தை தாய் என மாறுகின்றனர். தந்தைக்கும் தாய்மைக்கும் உரிய விழுமிய பண்புகள் அவர்களிடம் தளிர்விடத் துவங்குவது இயல்பு. குழந்தையின் பிறப்பும், வளர்ப்பும் அவர்களுடைய உள்ளத்தில் அன்பின் ஊற்றுகளை அதிகமாகத் திறந்து விடுகின்றன. பொறுமை, தியாகம் போன்ற நல்ல பண்புகள் அவர்களிடம் மலரத் துவங்குகின்றன. குழந்தைப் பேற்றினால் பண்பட்டுப் பக்குவம் அடைகின்றனர். மனித நேயத்துடன் வளர்ச்சிக் காண்கின்றனர்.

குழந்தைகளின் முன்பு நன்முறையில் நடந்து கொள்ள வேண்டிய தேவையைப் பெற்றோர்கள் பொதுவாக உணர்ந்து நடந்து கொள்கின்றனர். குழந்தைகளின் கள்ளம் கபடம் அற்ற தன்மை எதையும் பெரியவர்களிடமிருந்து எளிதில் கற்றுக்கொள்ளும் இயல்பும், மனத்தூய்மையும் மாசற்ற நிலையும் பெற்றோருக்கு ஒரு கண்ணாடிபோல் அமைகின்றன. அதில் அவர்கள் தங்கள் குற்றம் குறைகளை எளிதில் கண்டுகொள்ள முடியும். பெற்றோருடைய வாழ்வின் பல இரட்டை வேடங்களையும் முரண்பாடுகளையும் குழந்தைகள் எளிதில் கண்டுகொள்கின்றன. ஒளிமறைவு இன்றிப் பெற்றோர்களிடம் அவற்றைச் சுட்டிக்காட்டிவிடவும் செய்கின்றன. ‘அம்மா பொய் சொல்றீங்க’, ‘அப்பா ஏமாத்துறீங்க’ என்பன போன்ற குழந்தைகளின் கபடற்ற பேச்சுக்கு எந்தப் பெற்றோரையும் நல்லவராகச் செயல்படவைக்கும் ஆற்றல் உண்டு. இது மட்டும் இன்றி, குழந்தைகளுக்குத் தவறான மாதிரியாக இருந்து விடக்கூடாது எனும் எண்ணம் எல்லாப் பெற்றோருக்கும் இயல்பானது. இதன் காரணமாகத் தீய பெற்றோர்கள் கூடத் தங்களுக்குக் குழந்தை பிறந்ததும் தவறான பேச்சுமுறைகளையும் பழக்க வழக்கங்களையும் மாற்றித் திருந்தி வாழச் சிறிதாவது முயல்வது உண்டு என்பதை காணமுடிகின்றது.

### பெற்றோர்களும் குழந்தைகளும்

ஒவ்வொரு குழந்தையின் வருகையும் அதனை வளர்க்கும் பணியும் கணவன் மனைவிக்கு இடையேயுள்ள உள்ள அன்பை அதிகரிக்கும் அனுபவங்கள். தன் மனைவி தாயாக மாறுவதைக் கண்டு கணவனுக்கு வியப்பை அளிக்கிறது. தாய்மைக்கு உரிய பண்புகள் அவளிடம் மலருவதைக் கண்டு தந்தைக்கு எல்லையில்லா மகிழ்வு! அதுபோலத் தன் கணவன் தந்தையாகச் செயல்படுவதைப் பார்த்து மனைவிக்கும், மகிழ்வும் பெருமையும் ஏற்படுகின்றன. இதன் காரணமாக அவர்கள் ஒருவர் மீது ஒருவர் அதிகக் கவர்ச்சியும் ஈடுபாடும் அடைகின்றனர். அவர்களது அன்பும் நெருக்கமும் அதிகமாகிறது. கணவன் - மனைவியின் வாழ்க்கையினை இன்னும் அதிகமாக இணைத்துப் பிணைக்கின்றது அவர்களது குழந்தை. இருவருக்கும் இடையில் ஓர் அடிப்படையான பொதுமையை, மைய ஒன்றிப்பை உருவாக்குகிறது. அவர்கள் இருவரும் இணைந்துகாட்டும் அன்புகளுள் குழந்தைப்பாசம் முதன்மையானது. என்பதனை,

**‘‘மறி இடைப் படுத்த மான் பிணை போல**
**புதல்வன் நடுவணன் ஆக, நன்றும்**

**இனிதுமன்ற அவர் கிடக்கை, முனிவு இன்றி**
**நீல் நிற வியலகம் கவைஇய**
**ஈனும் உம்பெரும் பெறலருங்குரைத்தே''[2]**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. புள்ளி மானானது தம் குட்டிகளை இடையே படுத்திருக்க அதன் இரு மருங்கும் படுத்திருக்கும் மானும் அதன் பிணையும் போல், தம் புதல்வன் நடுவே படுத்திருக்க தம் மகனும் பெற்றோரும் இருமருங்கும் படுத்து உறங்குவதை சங்க இலக்கியப் பாடல் வழி அறியமுடிகின்றது.

பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் அதன் பெற்றோரின் இதயங்களைப் பெரிதாக்க முடியும், அவர்களுடைய உள்ளங்களை உயர்வாக்க முடியும், அவர்களுக்கு இடையிலான அன்புறவை வளர்க்க முடியும். குறிப்பாக அவர்களை இன்னும் அதிக பண்பட்ட, நல்ல மனிதர்களாக உருவாக்க முடியும். வாழ்வுக்கு இணையற்ற இன்பமும் நிறைவும் தர முடியும். பொதுவாக எல்லாக் கணவர் - மனைவியருமே குழந்தைச் செல்வத்திற்காக ஏங்குகின்றனர். குழந்தைப் பேறு இல்லை என்றால் மிகவும் ஏமாற்றம் அடைந்து வருந்துகின்றனர். சமயங்களும் பண்பாடுகளும் கூட இதனால்தான் குழந்தைச் செல்வத்தைப் பெறர்க்கரிய செல்வமாகவும் பேரருளாகவும் கருதி வந்துள்ளன என்பதை காண முடிகின்றது.

### பெற்றோர்களின் சிக்கல்களைத் தீர்க்கும் குழந்தைகள்

கணவருடன் உள்ள உறவு சீர்குலைந்திருக்கும் நிலையில் குழந்தை ஒன்று பெற்றுவிட்டால் அவரது அன்பும் அக்கறையும் மீண்டும் கிடைத்து விடும், தங்கள் திருமண உறவு உறுதியடைந்துவிடும் என நினைக்கும் மனைவியர் சிலர் உள்ளனர். ஒரு சில குடும்பங்களில் பிரிந்திருந்த கணவன் - மனைவி உறவைப் குழந்தைப்பேறு சரிப்படுத்தியுள்ளது என்பது உண்மைதான்.

சேற்றிலே செந்தாமரை மலரலாம். ஆனால் பெற்றோரிடையே நல்லுறவு இல்லாத குடும்பங்களில் குழந்தைகள் நன்முறையில் வளருவது இயலாதது. ஏனெனில் குழந்தையின் உள வளர்ச்சியை நிர்ணயிக்கும் முதல் முக்கிய காரணி பெற்றோரின் உறவாகும். அதன் முதல் தாக்கம் கோணலாக அமைந்து விடும் போது குழந்தையின் வளர்ச்சி முற்றிலும் கோணல் ஆகிவிடும். ஒருவருக்கொருவர் காட்டும் ஆழமான அன்பு பெற்றோர் தங்கள் குழந்தைகளுக்குத் தரும் மிகப்

பெரும் பரிசு. அதனைப் பெற்றோரிடமிருந்து பெறுவதற்கு மாறாக, அவர்களை ஒன்றிணைத்து வைத்திருக்க வேண்டிய சுமையும் பிறக்கும் குழந்தை நிச்சயம் இரங்குவதற்கு உரியதாகும்.

பிறக்கும் முன்பே இத்தகைய கடமைக்கு ஆளாக்கப்படும் குழந்தைதான் பிறந்த பின்பும், வளரும் போதும் பெற்றோரின் பல்வேறு உறவுப் பிரச்சினைகளையும் உணர்ச்சிக் காயங்களையும் தான் சுமக்க வேண்டியதாகிறது. தங்கள் உறவுப் பிரச்சினையைத் தீர்த்துக்கொள்ளும் நோக்குடன் குழந்தையைப் பெற்றுக் கொள்கின்றவர்கள் தங்கள் குழந்தைகளின் வாழ்வு பிரச்சனை ஆக்கிவிடுகிறார்கள்.

**குழந்தை வளர்ப்பு ஓர் அன்புப் பணி**

குழந்தைப் பேற்றுக்கும், குழந்தை வளர்ப்புக்கும் அன்பு அடிப்படையானதாகும். கணவனும் மனைவியும் அன்பால் இணைவதன் கனி தான் குழந்தைப்பேறு. அந்தப் குழந்தைப்பேற்றின் இயல்பான தொடர்ச்சி குழந்தை வளர்ப்பு. அது கணவன் மனைவி இருவரது இணைந்த ஓர் அன்புப் பணி. குழந்தை இருவருக்கும் உரியதாக மலருவது கருவில் அவர்களுடைய இனக்கீற்றுகளைப் பெற்றிருப்பதால் மட்டும் அன்று. அவர்களுடைய ஆளுமைகளின் சாயல்களும் அவர்களது குழந்தையின் மீது படவேண்டும். அவர்களுடைய பண்புக் கீற்றுகளும் அதில் பதிய வேண்டும். குழந்தைகளின் ஆளுமைகளிலும் வளர்ச்சியிலும் பெற்றோர் இருவரின் உள்ளங்களும் உணர்வுகளும் எண்ணங்களும் குறிக்கோள்களும் இணையும்போதுதான் அவர்களது குழந்தை வளர்ப்புப் பணி ஆக்கபூர்வமானதாக அமைகிறது எனலாம்.

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பற்பல வசதிகளையும் வாய்ப்புகளையும் தர விரும்பியும் இயலாது போகலாம். எல்லாப் பெற்றோர்களும் தங்கள் குழந்தைகளுக்குத் தர முடிந்த, கட்டாயம் தரவேண்டிய ஒன்று உண்டு. அது அவர்களது அன்புதான். அன்பு இன்றி எந்தக் குழந்தையும் நலமாக வளர முடியாது. நிறைவான அன்பு இருந்தால் வேறு எந்தக் குறைபாட்டையும் குழந்தையால் அதிகப் பாதிப்பின்றித் தாங்கிக்கொள்ள முடியும். வாழ்வில் ஏற்படும் இழப்புகளை ஈடுசெய்து வளர்ந்திட இயலும். அதற்கு மாறாக, அன்பு இல்லாத குடும்பங்களில் வளரும் குழந்தைகள் உண்மையில் ஊனமுற்றவை. வளர்ந்தபின்பு கூடச் சரிசெய்ய இயலாத பல மனக்கோளாறுகளுக்கு ஆளாகின்றனர். அழிக்க இயலாதவாறு பல வடுக்கள் மனதில் ஆழப்பதிந்து

விடுகின்றன. பல்வகை உணர்ச்சிகள் அல்லது உறவுப் பிரச்சனைகளுக்கு இலக்காகின்ற சமூக விரோத செயல்களில் ஈடுபடுகின்ற மிகப் பலர் சிறு பருவத்தில் பெற்றோரின் அன்பையும் ஆதரவையும் அதிகம் பெறாதவர்களாவர் .

**அன்பின் வெளிப்பாடு அக்கறையே**

பெற்றோர் தங்கள் குழந்தைகளை உளமார ஏற்றுக்கொள்வதுடன் தங்களது உள்ளன்பை அவர்கள் வெளிப்படையாகக் காட்ட வேண்டும். அன்பு என்பது மனத்திற்குள் மறைந்திருப்பது அன்று. அது சொற்களிலும் செயல்களிலும் வெளிப்பட வேண்டும். அன்பு வெளிப்படுத்தப்படும் போதுதான் குழந்தைகள் அதனை அறிந்து, உணர்ந்து அனுபவித்துத் தாங்களும் அன்பு செய்யக் கற்றுக்கொள்கின்றனர். பெற்றோரின் அக்கறை குழந்தைகளின் நலனை, நல்வாழ்வைத் தேடுகிறது. அவர்களது வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் வழிவகுக்கிறது. அவர்கள் இன்புற்று, மகிழ்வுற்று இருப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்கிறது எனலாம்.

பெற்றோர்கள் குழந்தைகளின் தேவைகளைத் தெரிந்து, அவற்றை நிறைவேற்றிவைப்பது அவர்களது அக்கறையின் இயல்பான செயல்பாடாகும். குழந்தைகள் தாங்களாகவே தங்களுடைய தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள வளர்ச்சிநிலை அடையும் வரை பராமரிப்பு தேவைப்படுகிறது. உணவு, உடை, பாதுகாப்பு போன்ற அடிப்படைத் தேவைகள் சரியாக நிறைவேற்றப்படாமல் உரிய கவனிப்பு இன்றி வாழும் குழந்தை உடல் வளர்ச்சியில் மட்டும் அன்றி, உள்ள நலத்திலும் குறையுற்றதாக அமைகிறது எனலாம்.

**குழந்தைக்கு அமுது – தாய்ப்பால்**

தாய் தன் குழந்தைக்குப் பால் ஊட்டுவது அவளுடைய அன்பு வெளிப்பாடுகளுள் மிக முக்கியமான ஒன்றாகும். உடல் நலிவு காரணமாகச் சில தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்குத் தாய்ப்பால் ஊட்ட இயலாது போகலாம். வேலைக்குச் செல்பவர்கள் வேலை நேரங்களில் தங்கள் குழந்தைகளுக்குத் தாய்ப்பால் தர இயலாதிருக்கலாம். இத்தகையோர் குழந்தைகளுக்குப் புட்டிப்பால் தருவது தவிர்க்க இயலாத தேவை. ஆனால் தங்கள் அழகு குறைந்துவிடும் எனும் அச்சத்தால் அல்லது அது போன்ற வேறு போலிக் காரணங்களால் தாய்ப்பால் தர மறுக்கும் தாய்கள் சிலர் இன்று உள்ளனர்.

குழந்தைகளுக்கான உணவுகள் தயாரிக்கும் நிறுவனங்கள் விளம்பரப் படங்களில் காட்டும் 'கொழுகொழு மொழுமொழு' குழந்தைகளைப் பார்த்து எளிதில் மயங்கிவிடும் தாய்மார்கள் இன்று அதிகமாக நமது சமூகத்தில் உள்ளனர். அந்த உணவுகளைக் கொடுத்து விட்டால் தங்கள் குழந்தைகளும் அவ்வாறு உருண்டு திரண்டு வளர்ந்துவிடும் என எண்ணி அவர்கள் அவற்றைக் கொடுப்பதால் உண்மையாகவே கொழுத்து வளரப்போவது குழந்தைகள் அல்ல, மாறாக அந்த விளம்பரங்களைச் செய்து மக்களை ஏமாற்றும் சில பன்னாட்டுப் பணமுதலைக் கம்பெனிகள் மட்டுமே. சங்க காலத்தில்,

**''பால்கொண்டு மடுப்பவும் உண்ணான் ஆகலின்,**
**செறாஅது ஓச்சிய சிறுகோல் அஞ்சியொடு,**
**உயவொடு வருந்தும் மன்னே! இனியே**
**புகர்நிறம் கொண்ட களிறுஅட்டு ஆனான்''**[3]

எனும் பாடலின் வாயிலாக, தன் குழந்தை பால் உண்ணாததைக் கண்டு சினம் கொண்டு கோல் எடுத்து அடிப்பது போல் குழந்தையை அச்சுறுத்தி பால் உண்ணச் செய்தமையை அறியமுடிகின்றது.

கைக்குழந்தைகளுக்குத் தாய்ப்பால் போல் ஏற்ற, இனிய, ஊட்டச் சத்தான உணவு வேறு எதுவும் இல்லை. தாய்ப்பால் தர மறுக்கும் அன்னையர் தங்கள் தாய்மையின் மிக அருமையானதும் நிறைவு அளிப்பதுமான ஒர் அனுபவத்தைப் பெறத் தவறுகின்றனர். ஏனெனில் தன் குழந்தையை மார்போடு அணைத்துத் தன் ஊனையும் உதிரத்தையும் பாலாக அதற்குத் தருவது ஒரு தெய்வீகத் தியாகச் செயல். இனிய அனுபவங்களுள் எல்லாம் இணையற்ற ஒன்று ஆகும். மேலும் தாய் - குழந்தை உறவு தனிச் சிறப்பான நெருக்கமும் உறுதியும் அடைந்திடும் வழியாக அமைகிறது என்பது உளவியல் சொல்லும் உண்மை.

### அன்பும் ஆதரவும்

பெற்றோர் தங்கள் குழந்தைகளுக்கு வெளிப்படையாக அன்பு காட்டும் முறைகளுள் முக்கியமானவை, ஒன்று அவர்களை அடிக்கடி அள்ளி எடுத்து அரவணைத்துக்கொள்வது. மார்போடு அணைத்துக் கொள்வது, தோளில் தூக்கிக் கொள்வது, கைகளில் தாங்கிக் கொள்வது போன்ற அரவணைப்பு முதலியவையாகும். இவை எல்லாக் குழந்தைகளின் வளர்ச்சிக்கும் இன்றியமையாதவையாகும். மேலும் முத்தமளித்தல், தொட்டுத் தழுவிக் கொள்ளுதல், தட்டிக்கொடுத்தல் போன்றவையும் நல்ல பெற்றோர்கள்

இயல்பாகவே செய்யும் அன்பின் வெளிப்பாடுகளாகும். ஆனால் சில குடும்பங்களில் தந்தையர் உடல்சார்ந்த அன்பு வெளிப்பாடுகளை அதிகம் காட்டுவது இல்லை. தாய், தந்தை இருவருமே இத்தகைய அன்பு வெளிப்பாடுகளைத் தாராளமாகத் தருவது குழந்தைகளின் உடல், மற்றும் மன வளர்ச்சிக்குத் தேவையானவை.

உடல்சார்ந்த அன்பு வெளிப்பாடுகள் குழந்தைப் பருவத்தில் குழந்தைகளுக்கு நிறைய தேவைப்படுகின்றன. ஆனால் அவர்கள் வளர வளர இந்தத் தேவை இயல்பாகவே சற்றுக் குறைகிறது. இருப்பினும் சிறு வயதிலும் இளமையிலும் கூட அவை தேவையில்லை என நாம் கருதிவிடலாகாது. நல்ல அன்புறவு உள்ள குடும்பங்களில் உடல்சார்ந்த சில அன்பின் வெளிப்பாடுகள் வாழ்க்கை முழுவதுமே தொடர்கின்றன. தழுவிக்கொள்ளல், தட்டிக்கொடுத்தல், கைகளைப் பற்றிக்கொள்ளுதல், அருகில் அமர்தல் போன்ற முறைகளைப் பெற்றோர் தங்கள் குழந்தைகளிடம் காட்டத் தயங்க வேண்டியது இல்லை.

பெற்றோர் குழந்தைகளுக்குக் காட்டும் அரவணைப்பும் ஆதரவும் சீரானவையாகவும் நிலையானவையாகவும் இருத்தல் தேவை. அதாவது, ஒரு நேரத்தில் குழந்தைகள் மீது பாசத்தைப் பொழிவது, மறு நேரத்தில் அக்கறையின்றி அவர்களிடம் அலட்சியமாக நடந்துகொள்வது அல்லது எளிதில் ஆத்திரப்படுவது போன்ற நடைமுறைகள் குழந்தைகள் மனத்தில் பெரும் குழப்பத்தையே ஏற்படுத்துவதை அறியமுடிகிறது. .

**பாராட்டுதல்**

குழந்தைகள் வளர வளரப் பிறரது உதவி இன்றித் தாங்களாகவே பல காரியங்களைச் செய்யத் துவங்குகின்றனர். இதனைப்பெற்றோர் அனுமதிப்பதும் ஊக்குவிப்பதும் தேவையானதாகும். குழந்தைகள் தாங்களாகவே முயலும் போது பல காரியங்களில் தடுமாறலாம். தவறுகள் செய்யலாம், அல்லது பெரியவர்களைப் போலத் திறமையாக அவற்றைச் செய்ய இயலாது போகலாம். அந்தவேளைகளில் தாங்கள் உடனடியாகக் குறுக்கிட்டு அவற்றைச் சிறப்பாகச் செய்து கொடுத்து விடும் சோதனை எளிதில் பல பெற்றோர்களுக்கு ஏற்படுகிறது. ஆனால் அவ்வாறு செயல்படுவது குழந்தைகளின் உண்மையான வளர்ச்சிக்கு உதவாது. தவறாகச் செய்பவற்றைச் சரியாகச் செய்வது எவ்வாறு என ழந்தைகளுக்குச் சொல்லித்தருவதும் தேவையானால் அதற்கு உதவுவதுமே பெற்றோரின் உண்மையான அன்பின் வெளிப்பாடு. தவறுகள் சில செய்து அவற்றின் வழியாகச்

சரியானவற்றைத் தாங்கள் கண்டறியக் குழந்தைகளை விட்டுவிடுவதும் சில வேளைகளில் பெற்றோரின் கடமையாக கருதப்படுகின்றது என்பதை கீழ்வரும் பாடலடிகள் உணர்த்துவதை அறியமுடிகின்றது.

**''பூங்கண் புதல்வனைப் பொய்பல பாராட்டி**
**நீங்காய் இகவாய் நெடுங்கடை நில்லாதி,**
**ஆங்கே அவர்வயின் சென்றீ – அணி சிதைப்பான்**
**ஈங்கு எம் புதல்வனைத் தந்து''**[4]

பூப்போலும் அழகிய கண்ணினை உடைய புதல்வனைப் பொய்கள் பல சொல்லி பாராட்டி, அவனைவிட்டுப் போகாமலும், பரத்தையர் குறிக்கொண்ட நிலையை விடாமலும் என்னுடைய பெரிய வாயிலில் நிற்காதே என்றும், நின்றால் அவன் அணிகலன்களை அணிய மறுப்பான், ஆகையால் எம் புதல்வனை கொடுத்து விட்டு பரத்தையர் குடியிருக்கும் காலனிக்கே செல்வாயாக என்று தலைவனை தலைவி கூறுகிறாள். தலைவன் மேற்கொள்ளும் பரத்தமை ஒழுக்கம் குழந்தைக்கும் வந்துவிடும் என்று அஞ்சிய தாயின் நிலையைச் சுட்டுவதாக இப்பாடல் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

குழந்தைகளின் சொந்த முயற்சிகளைப் பெற்றோர் ஆதரிப்பது தேவை. இதற்கு இன்றியமையாதது குழந்தைகளை அவர்கள் நிறையப் பாராட்டுவது ஆகும். நமது சமூகத்தில் பெரும்பாலான பெற்றோர் குழந்தைகளைப் போதிய அளவு பாராட்டி ஊக்குவிப்பது இல்லை. சில பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் பண்புகளையும் செயல்களையும் பற்றி மனத்திற்குள் நிறைய பெருமைப்பட்டுக் கொண்டாலும் பிறரிடத்தில் பெருமையாகப் பேசினாலும் தங்கள் குழந்தைகளிடம் அவற்றைப் பற்றி நேரடியாகவும்,. வெளிப்படையாகவும் தங்கள் மகிழ்ச்சியையும், பாராட்டையும் தெரிவிப்பது இல்லை. சில குடும்பங்களில், பெற்றோர்கள் குழந்தைகளிடம் எதற்கு எடுத்தாலும் குற்றம் காணுகின்றனர். அவர்களைக் குறைகூறுகின்றனர். சிறிய தவறுகளைக் கூடப் பெரிதுபடுத்தி வன்மையான சொற்களால் திட்டுகின்றனர். இதனால் குழந்தைகளின் மனத்தில் தன்னம்பிக்கைக்குப் பதில் தாழ்வுமனப்பான்மை வளருகிறது.

பொது நிலையில் எந்த அளவுக்குப் குழந்தைகளுக்குப் பாராட்டும் ஊக்கமும் தரப்படுகின்றதோ அந்த அளவுக்கு அவர்கள் தன்னம்பிக்கையுடன் வளருகின்றனர். அதனால் தங்கள் வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தாங்களே

சமாளிக்கும் திறமையையும் அவர்கள் அதிகம் பெற்றிடமுடியும். அதற்கு மாறாக, பாராட்டும் ஊக்கமும் அதிகம் பெறாமல் குறை கூறலுக்கே அதிகமாக ஆளாகி வரும் குழந்தைகள் அளவுக்கு மீறிய தயக்கமும் வெட்கமும் அச்சமும் உடையவர்களாக வளருகின்றனர். பல வகையான உணர்ச்சி அல்லது ஆளுமைக் கோளாறுகளுக்கு அவர்கள் இலக்காவது எளிது.

## பெற்றோர்கள் – ஆசிரியர்கள்

பொதுவாக உலகில் பிறக்கும் உயிர்கள் எல்லாம் உயிர் வாழ்வதற்குத் தேவையான பல்வேறு அடிப்படைத் திறமைகளுடன் பிறக்கின்றன. பிறக்கும் போது மனிதக் குழந்தைக்கு இயல்பாகத் தெரிந்திருப்பவை பால் குடிப்பது, அழுவது என்பன போன்ற ஒரு சில செயல்கள் மட்டும். மனித வாழ்வுக்கு இன்றியமையாத பெரும்பாலான செயல்களை அது பிறரிடமிருந்தே சிறிது சிறிதாகத் தெரிந்து கொள்கிறது. ஏனைய உயிர்களின் வாழ்வை அவற்றின் இயல்பு பெரிதும் வரையறுக்கிறது. பண்பாட்டிற்கும் மிக முக்கிய இடம் உண்டு. மனிதர் மனிதராக வாழவும் வளரவும் வேண்டும் என்றால் தாம் இயல்பாகப் பெற்ற பண்புகளுடன் சமூகப் பண்பாட்டிலிருந்தும் அவர்கள் கற்றுக்கொள்ள வேண்டியவையும் நிறைய உள்ளன எனலாம்.

பிறரிடமிருந்து கற்றுக்கொள்ளும் திறமை இயல்பாக மனிதருக்கு நிறைய உண்டு. பிறர் கற்றுத்தர துவங்குவதற்கு முன்பே குழந்தைகள் தானாக பிறரிடமிருந்து நிறைய கற்றுக்கொள்கின்றனர். பிறந்தநாள் முதல் பல செயல்கள் அவற்றின் மனத்தில் ஆழப்பதிந்து அழியாத பாடங்கள் ஆகின்றன. யாரும் சொல்லித் தருபவற்றைவிடப் குழந்தைகள் தாங்களாகவே பெற்றோரையும் பிறரையும் பார்த்துக் கற்றுக்கொள்ளும் இந்தப் பாடங்களே அவர்களது வாழ்வில் அடிப்டையானவை. இதனால் நல்ல எடுத்துக்காட்டுகளாகவும் சிறந்த முன் மாதிரிகளாகவும் பெற்றோர்கள் விளங்குவது மிக முக்கியமானது. அதைவிட அவர்கள் தங்கள் குழந்தைகளுக்குத் தரும் அருமையான பாடமும் ஆழமான பயிற்சியும் வேறு எதுவும் இல்லை.

## குழந்தையைக் குறிக்கும் பெயர்கள்

சங்க இலக்கியத்தில் சிறார், மகாஅர், சிறான் போன்ற ஆண்பாற்சொற்களும், சிறுமி, குறுமகள் போன்ற பெண்பாற் சொற்களும் குழந்தைகளைக் குறிக்கும் சொற்களாகத் திகழ்கின்றன. இதனை,

**‘‘புலிப்பல் தாலி புண்தலைச் சிறாஅர்’’[5]**

புலிப்பல்லால் ஆன தாலி என்னும் அணியை அணிந்திருந்த சிறுவன் என்றும் ‘சிறாஅர்’ எனும் சொல்லுக்கு சிறுவர்கள் என்பது பொருளாக அமைகின்றது. .

**‘‘பாடுவல் மகாஅர்’’[6]**

இப்பாடலின் அடியில் ‘மகாஅர்’ என்னும் சொல்லுக்கு மகள் என்பது பொருளாகும்.

**‘‘செம்முது பெண்டிர் காதலம் சிறான்’’[7]**

ஈண்டு சிறான் எனும் சொல் சிறுவன் என்ற பொருளில் பயின்று வந்துள்ளது.

**‘‘கைப்படுக்கப் பட்டாய்சிறுமி நீ’’[8]**

இப்பாடலின் அடியில் இளையவளாய் இருந்த பெண்ணை சிறுமி என்று கலித்தொகைக் கூறுகின்றது. இளம் பெண்ணை ‘குறுமகள்’ என்பதை,

**‘‘இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்’’[9]**

எனும் அடிகள் சுட்டுகின்றன. குறு என்ற அடைமொழி இளம் வயதினரைக் குறிப்பதாக இடம் பெற்றுள்ளமையை அறிய முடிகிறது.

குழந்தைப்பருவம் என்று சொல்லுகின்ற சிறுவயதினரைக் குறிக்க புதல்வன், மகள், மகன், சிறுவன், குழவி, சேய் என்னும் சொற்கள் ஒருங்கு அமைவதை,

**‘‘ஆல்கெழு கடவுட் ‘புதல்வ’**
**மலை ‘மகள்’ ‘மகனே’**
**வெற்றி வெல்போர்க் கொற்றவை ‘சிறுவ’**
**இழையணி சிறப்பின் பழையோள் ‘குழவி’ஞ’**
**அலந்தோர்க்கு அளிக்கும் பொலம் புண் ‘சேய்’’[10]**

பாடல் அடிகளில் பயின்று வந்துள்ளமை சுட்டிக்காட்டத்தக்கதாகும். சேய் என்னும் சொல் பல பொருள் பயக்கும் ஒரு சொல்லாகத் திகழ்கின்றது. சேய் என்னும் சொல் சங்க இலக்கியங்களில் சில இடங்களில் ‘குழந்தையைக்’ குறிக்கவும் சில இடங்களில் ‘தொலைவிடம்’ எனும் பொருளிலும் பயின்று வந்துள்ளமை அறியமுடிகிறது.

**புதல்வன்**

*புதல்வன் என்ற சொல் ஒரு வயது முதல் ஐந்து வயது வரையுள்ள குழந்தைகளைக் குறிப்பதற்குப் பயன்படுத்தியுள்ளனர்.*

**''கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை**
**பொற் காற் புதல்வர் புரவி இன்று உருட்டும்''[11]**

*இப்பாடலின் வாயிலாக நடக்க ஆரம்பித்த குழந்தை விழுந்து விடாதிருப்பதற்காக மூன்று சக்கரங்களை உடைய தேர் போன்று இருக்கும் வண்டியினை தாய்மார்கள் கொடுப்பார்கள். இவ்வண்டியினை நடக்க முயற்சிக்கும் குழந்தைகளுக்கு நடைபயிலவும், ஐந்து வயது வரையுள்ள குழந்தைகள் விளையாட்டுப் பொருளாகவும் பயன்படுத்தியுள்ளனர் என்பதை நாம் அறியலாம். ஐந்து வயதிற்கு மேற்பட்ட குழந்தைகள் தேர் செய்வது போன்ற விளையாட்டுகளும், பிற ஏனைய விளையாட்டுகளும் விளையாண்டுள்ளனர் என்பதை சங்க இலக்கியப் பாடல் வழி அறியலாம்.*

**சிறுவர், சிறுமி**

*ஆறு வயதிலிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளைக் குறிப்பதற்கு சிறுவர், சிறுமி என்ற சொல்லை சங்க இலக்கியப் புலவர்கள் கையாண்டுள்ளனர் என்பதை பாடல்களில் காட்சிப்படுத்துதலின் வாயிலாக நாம் அறியலாம்.*

**இளையோள், இளையோர்**

*'இளையோர்' என்ற சொல்லாட்சி சில இடங்களில் சிறுவர்களைக் குறிக்கவும், ஒரு பருவத்தினரைக் குறிக்கவும், குமரப் பருவத்தினரைக் குறிக்கவும் பயன்படுத்தியுள்ளனர். சங்க இலக்கியத்தை நோக்குமிடத்து தன்னை விட இளையவர் என்று குறிப்பதற்காக 'இளையோர்' என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது. அந்த வகையில் சில இடங்களில் குழந்தைகளைக் குறிக்கவும், சில இடங்களில் குழந்தை அல்லாதோரைக் குறிக்கவும் 'இளையோர்' என்ற சொல்லாட்சி இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.*

**குறுமகள்**

*மழலை மாறிய வயது முதல் மங்கையர் பருவம் அடையும் வயது வரையுள்ள குழந்தைகளைக் குறிப்பதற்கு 'குறுமகள்' எனும் சொல்லாட்சியைச் சங்கப் புலவர்கள் கையாண்டுள்ளனர் என்பதை அறிய முடிகிறது.*

சங்க இலக்கியத்திற்குப் பின்னர் எழுந்த சிற்றிலக்கியங்களில் ஒன்றாகத் திகழ்கின்ற உலா இலக்கியம் பெண்களுக்கான வயது வரம்பினை ஏழு வகையாகப் பிரித்துக் காட்டுகிறது. அவற்றை நோக்குங்கால் 'மங்கைப்' பருவத்தை நாம் குமரப் பருவமாக எடுத்துக் கொள்ளலாம் அவ்விலக்கியம் மங்கைப் பருவத்திற்கு 12 வயதினைச் சுட்டுகிறது. உளவியல் அறிஞர்களும் 12 வயது தொட்டே பாலுணர்ச்சி சிறிது சிறிதாக ஆரம்பமாகிறது என்ற கருத்தைத் தெரிவித்துள்ளனர். ஹார்மோன்களின் வளர்ச்சிக் குறித்துக் கூறுகையில் அறிவியலும் மேற்சொன்ன கருத்தையே முன்வைக்கின்றது எனலாம்.

"குழவிப் பருவத்திலிருந்து குழந்தைப் பருவமடைந்து குமரப்பருவமாகி பின்னர் முதுமைப் பருவம் எய்தி மூப்படைவது மனிதவாழ்வின் பருவங்களாகும். குழந்தைப்பருவத்திலிருந்து குமரப்பருவத்திற்கு ஏற்படும் மாற்றம் பதினொன்றிலிருந்து பன்னிரெண்டு வயதிற்குள் நிகழும் மாற்றம் என்றும் இப்பருவம் பதினெட்டு வயதுவரை நீடிக்கும்''[12] என்றும் உளவியலறிஞர்கள் கருதுகின்றனர். மேற்கூறியக் கருத்துக்களை நோக்குங்கால் குழந்தைகளுக்கான வயது வரம்பு பிறப்பு முதல் பன்னிரெண்டு வயது வரை குழந்தைப் பருவம் என்பதை நாம் முடிவான கருத்தாகக் கொள்ள முடிகிறது.

## சங்க காலத்தில் குழந்தை வளர்ப்பு

"குழந்தை இல்லாத வீடு நாசியில்லாத முகம் போன்றது''[13] என்பர். தொன்மைக்காலம் முதல் அண்மைக் காலம் வரை குழந்தையை விரும்பாதவர்கள் யாரும் இல்லை எனலாம்.

தாயும் குழந்தையும் சங்க காலத்தில் சிறப்பிடம் பெற்று விளங்கினார்கள். குழந்தைகளுக்கு உணவாக, தாய்ப்பாலும், பால் சோறும், பெரும்பான்மையாகக் கொடுத்து வளர்க்கப்பட்டது. சங்க காலத்தில் குழந்தைகளை வளர்ப்பதில் நற்றாயைப் போன்று செவிலித்தாயும் சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்தாள். மேலும் தன் மகள் திருமண வயது வந்து தலைவனுடன் உடன்போக்கை மேற்கொண்ட பொழுது செவிலித்தாய் அக்கறையோடு தேடிச் சென்ற நிலையினைச் சங்க இலக்கியம் வெளிப்படுத்தியுள்ளது. குழந்தை வளர்ப்பின் முக்கிய அங்கமாகத் திகழும் சில செயல்களைக் குறிப்பிடலாம். அவையாவன,

- **உணவூட்டல்**
- **பயிற்றுவித்தல்**

- ***அணிகலன்கள் அணிவித்தல்***
- ***விளையாட்டுகள்***
- ***குழந்தைகளின் முக்கிய செயல்கள்***
- ***அறிவுறுத்தல்***
- ***அச்சுறுத்தல்***

*போன்றவையாகும்.*

**உணவூட்டல்**

*உணவு என்றால் பெரும்பான்மையாக நமக்கு நினைவுக்கு வருவது தாயாகும். தாயில்லாக் குழந்தை உணவுக்கு ஏங்கிய நிலையைக் கொண்டு உணவூட்டலுக்குச் சிறந்தவள் தாய் எனக் கொள்ளலாம். எல்லாக் குழந்தைகளுக்கும் பிறப்பு முதல் ஆறு மாதம் வரை தாய்ப்பால் உணவாகத் திகழ்ந்தாலும் ஆறுமாதங்களுக்குப் பிறகு அவரவர்களின் செல்வ வளமையைப் பொறுத்து உணவுமுறை மாறுபடுகின்றது. இரண்டு மூன்று வயது வரை குழந்தைகளுக்குப் பாலூட்டிய தாய்மார்களையும் சங்க இலக்கியத்தில் காணமுடிகின்றது.*

> **“புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை**
> **முலைவாய் உறுக்கும் கைபோல்’’**[14]

*எனும் பாடல் வரியின் மூலம் புதல்வன் என்ற சொல் ஒன்று முதல் ஐந்து வரையுள்ள குழந்தைகளைக் குறிப்பதற்குச் சங்கப் புலவர்கள் கையாண்டுள்ளனர். அவற்றைக் கொண்டு குழந்தைகளுக்குத் தாய்மார்கள் இரண்டு, மூன்று ஆண்டுகள் அல்லது ஐந்து ஆண்டுகள் வரை பாலூட்டியிருக்கிறார்கள் என்பதை அறியமுடிகிறது.*

*குழந்தைகளின் உணவுமுறைகளைச் சங்க இலக்கியத்தைக்கொண்டு ஆராயுங்கால் மூவகை முறைகளில் அமைகிறது. அவையாவன,*

- ***பொதுவான உணவு முறை***
- ***செல்வந்தர்களின் உணவு முறை***
- ***வறியவர்களின் உணவு முறை***

## பொதுவான உணவுமுறை

பாலூட்டும் உயிரினங்கள் அனைத்தும் தான் ஈன்ற உயிரிக்குப் பாலூட்டுவது பொது மரபாகும். மனித இனமும் மரபினைப் பின்பற்றி வருகிறது. இம்மரபு செல்வந்தர்களுக்கும், வறியவர்களுக்கும், விலங்கினங்களுக்கும் பெரிதும் வேறுபாடின்றி காணப்படுகிறது.

**''வாள்நுதல் அரிவை மகன்முலை ஊட்ட**
**தான் அவள் சிறுபுறம் கவையினன்''[15]**

எனும் பாடலில் தாய்தன் குழந்தைக்குப் பாலூட்டிய செய்தியை அறிய முடிகின்றது.

**''பாலார் துவர்வாய்ப் பைம்பூன் புதல்வன்''[16]**

மேலும் பாலுண்ட குழந்தையின் வாய் எப்படி இருந்தது என்பதை நற்றிணையின் இப்பாடல் அடி விளக்குகிறது.

தாய்ப்பால் இல்லாது குழந்தை அழுத நிகழ்வு சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ளது.

***"பால்இல் குழவி அலறவும் மகளிர்''[17]***

பாலில்லாது குழந்தை அலறிய காட்சியை புறநானூற்றுப் பாடலின் மூலம் அறிய முடிகிறது.

## செல்வந்தர்களின் உணவுமுறை

செல்வந்தர்களின் குழந்தைகள் மிகுந்த சீரோடும் சிறப்போடும் வளர்க்கப் பெறுவார்கள். வறியவர்களின் குழந்தைகளை விட செழிப்பாக வளர்ந்த தன்மையையும், பொற்கலத்தில் பாலூண்டதையும் சங்க இலக்கியம் பதிவு செய்துள்ளது. கலம்பால், பால்சோறு, நெய்சோறு ஆகியவற்றைச் செல்வ வளம் மிகுந்த குழந்தைகள் உண்டமையை சங்க கால மக்கள் வாழ்க்கை முறையின் வாயிலாக அறிய முடிகின்றது.

**கலம்பால்**

*தாய்ப்பால் குறைவாக இருக்கின்றபொழுது பசும்பாலை பாட்டில் மூலம் (பீடிங் பாட்டில்) கொடுக்கும் பழக்கம் தற்போது நிலவுகிறது. இதே போன்று சங்க கால மக்கள் தங்களது குழந்தைகளுக்கு பசும்பால், ஆட்டுப்பால் இவற்றை கொண்டு, அல்லது மூக்குக் குவளை (கெண்டி) மூலம் குழந்தைகளுக்கு பால் கொடுத்துள்ளதை கலம்பால் என்று கூறியுள்ளதை அறியலாம். அதற்குச் சான்றாக,*

**''முகிழ் நிலாத் திகழ்தரும் முளைத்திங்கள்**
**பொன்னுடைத் தாலி என்மகன் ஒற்றி**
**வருகுவை ஆயின், தருகுவென் பால் என''**[18]

*என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. "செல்வர் வீட்டு இளமகளிர் பொற்கலத்தில் பால் குடித்தார்கள்''*[19] *கலம்பால் ஊட்டுதல் செல்வந்தர்கள் குழந்தைகளின் உணவாக இருந்தமையை அறிய முடிகின்றது.*

**பால்சோறு**

*அகன்ற மனையகமெல்லாம் சிலம்பொலி ஒலிக்க ஓடியும் ஆடியும் சிறிது நேரம் பந்தாடியும் விளையாடினள் சிறுமி. அதனால் அவளது உடம்பு இளைத்தும், களைத்தும் விட்டதென எண்ணியத் தாய், பால்சோறு இட்ட வெள்ளி வள்ளத்தினைக் கையில் ஏந்தி 'வாராயோ' என அன்புடன் தன் குழந்தையை அழைத்து, எனக்காக ஒரு பிடி உண்டனையாயின், உன் தந்தைக்காக ஒரு பிடி உண்பாயாக என்று கூறி ஊட்டினாள் என்பதனை,*

**''பகன்றை வான்மலர்ப் பனிநிறைத்தது போல்**
**பால்பெய் உள்ளம் சால்கைப் பற்றி**
**எண்பாடு உண்டனை ஆயின் ஒருகால்**
**நுந்தைபாடும் உண் என்று ஊட்டி''**[20]

*எனும் பாடலடியின் மூலம் அறியலாம்.*

*வெள்ளிய சோற்றுடனே பாலையும் குழந்தைகள் விரும்பினார்கள் என்பதை,*

**''வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்**
**முனித்தலைப் புதல்வர்''**[21]

*என்ற பாடலடிகளால் அறியமுடிகின்றது.*

## நெய்சோறு

சங்க காலத்தில் குழந்தைகளுக்கு, நெய்ச்சோறு ஊட்டப்பட்டதை,

> **''படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும்**
> **உடைப் பெருஞ்செல்வர் ஆயினும், இடைப்படக்**
> **குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி**
> **இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்,**
> **நெய்யுடை அடிசில் மெய்பட விதர்த்தும்**
> **மயக்குறு மக்களை இல்லோர்க்குப்**
> **பயக்குறை இல்லை தான்வாழு நாளே''**[22]

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் வழி அறியமுடிகிறது.

கலம்பால், பால்சோறு, நெய்சோறு போன்றவைகளை வறியவர் குழந்தைகளும் சிறுபான்மை உண்டிருப்பினும் பெரும்பான்மையாகச் செல்வந்தர்க் குழந்தைகளின் உணவாகவே அவைகள் இருந்திருக்கின்றன என்பது தெளிவாக அறியமுடிகின்றது.

## வறியவர்களின் உணவுமுறை

சங்க காலத்தில் நிலப்பாகுபாடு அடிப்படையில் திணைநிலைக் குடிகளைக் கொண்டதாக இருந்துள்ளன. பலவகை நிலங்களில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறையினைக் கொண்டு அவர்களின் வீர, தீர செயல்கள் கொண்ட வாழ்க்கையை புறம் என்றும், ஒத்த தலைவன் தலைவியின் அன்பு வாழ்க்கையை அகம் என்றும் கூறுவர். அகத்திணை, புறத்திணை என்ற இரு திணை மாந்தர்களில் சிலர் செல்வந்தர்களாகவும், சிலர் வறியவர்களாகவும் வாழ்ந்து இருக்கின்றார்கள் அவ்வகையில்,

***அ) வேடர்***
***ஆ) கானக்குறவர்***
***இ) ஆயர்***
***ஈ) பரதவர், உமணர்***
***உ) உழவர்***
***ஊ) தச்சர் என்னும் கைவினைஞர்***
***எ) பாணர் எனும் இசைக்குடியினர்***

போன்றோர் வறியவர்களாகத் திகழ்ந்துள்ளார்கள் அவர்களின் உணவுமுறை முற்றிலும் மாறுபட்டதாக அமைந்துள்ளது.

### அ) வேடர் குழந்தைகளின் வளர்ப்பு முறை

*வேடர்கள் பாலை நிலத்தைச் சேர்ந்தவர்கள் ஆவார்கள். இவர்களின் குழந்தைகள் வேட்டையாடிய பொருட்களையே உணவாகக் கொண்டார்கள். இக்குழந்தைகள் சிறுவயது முதலே தாங்களே வேட்டையாடும் திறம் மிக்கவர்களாக வளர்க்கப்பட்டிருக்கிறார்கள். இச்சிறுவர்கள் வேட்டையாடுதலையே விளையாட்டாகவும் கொண்டிருக்கிறார்கள்.*

**''வேட்டச் சிறாஅர் சேண்புலம் படராது**
**படப்பைக் கொண்ட குறுந்தாள் உடும்பின்**
**விழுக்கு நிணம் பெய்த தயிர்க்கண் விதவை''[23]**

*இப்பாடலில் வேடர் நிலச் சிறுவன் ஒருவன் தங்கள் வீட்டில் விருந்தோம்பல் நடைபெற்றபோது, தன் தாயாருக்கு உதவும் வகையில் படப்பைக்குச் சென்று உடும்பை வேட்டையாடிக் கொண்டு வந்ததை குழந்தைகள் தங்கள் தாய்க்கு உதவும் வகையிலும், விருந்தினரைப் பேணும் வகையிலும் வளர்க்கப்பட்டார்கள் அவர்களின் உணவாக வேட்டைப் பொருளே இருந்தன என்பதை இப்பாடல் அடிகள் சுட்டுவதை உணரமுடிகின்றது.*

### ஆ) கானக் குறவர்களின் குழந்தை வளர்ப்பு முறை

*கானக்குறவர்கள் குறிஞ்சி நிலப்பகுதியில் வாழ்ந்து வந்தனர். தினை, கிழங்கு, தேன், பலா, போன்றவைகள் இவர்களது முக்கிய உணவுப்பொருளாகும். இதனை,*

**''வெறிகொள் இவனம் விதத்தல் செறிகுரல்**
**பைந்தினை காத்தல் செந்தேன் அழித்தல்**
**செழுங்கிழங்கு அகழ்தல்..........................''[24]**

*என்று நம்பியகப் பொருள் குறிப்பிடுகின்றது.*

*இவர்கள் மலைப்பகுதிகளில் தினையைப் பயிரிட்டு வளர்த்தார்கள். எனவே தினைப்புனங்களைக் காப்பதற்கும், தினையை உண்ண வரும் கிளிகளை விரட்டுவதற்கும் சிறுமிகளுக்குப் பயிற்சி அளித்து வளர்த்துள்ளார்கள் என்பதை,*

**''அன்னையும் அமர்ந்து நோக்கினளே என்னையும்**
**களிற்று முகம் திரிந்த கல்லா விழுத்தொடை**
**ஏவல் இளையரொடு மாவழி பட்டெனச்**

**சிறுகிளி முரணிய பெருங்குரல் ஏனல்**
**காவல் இனியென் றாளே''**[25]

*என்ற பாடலடிகள் விளக்குகின்றன.*

*குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அந்நிலத்தில் கிடைத்ததையே உணவாகக் கொண்டார்கள். குழந்தைகள் பெரியவர்களுக்கு உறுதுணையாக தங்களால் இயன்ற சிறுவேலைகளைச் செய்துள்ளனர். குழந்தைப் பருவம் முதலே வேலைச் செய்வதற்கு அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டதைத் தெளிவுற அறிய முடிகின்றது.*

### இ) ஆயர் குழந்தை வளர்ப்பு முறை

*ஆயர்கள் முல்லை நிலத்தைச் சேர்ந்த குடிகளாவார்கள். அவர்கள் ஆடு மாடுகளை மேய்த்தார்கள் அவற்றிலிருந்து கிடைக்கப் பெற்ற பாலைக் கொண்டு தம் வாழ்க்கையை நடத்தினார்கள். பாலினை உணவாகவும் பண்டமாற்று முறையில் பாலினைக் கொடுத்து அதற்கு பதிலாகக் கிடைக்கும் பிற உணவுப் பொருட்களையும் உண்டனர் என்பதை,*

**''தாற்றுக்கதிர் வரகொடு சாமை முதிரை**
**ஏற்றுப்பறை முல்லை யாழ் சாதாரி**
**சாமை வரகு தரமுடன் வித்தல்**
**அவைகளைகட்டல் அரிதல் கடாவில்''**[26]

*என்று நம்பியகப் பொருள் கூறுவதிலிருந்து வரகு, சாமை, முதிரை போன்றவற்றைக் காட்டுப் பகுதியில் விளைவித்து உண்டார்கள் என்பதையும் இவற்றை அவர்களின் குழந்தைகளுக்கும் ஊட்டினார்கள் என்பதையும் அறிய முடிகின்றது.*

*ஆயர்கள் தங்கள் குழந்தைகளைத் தம் தொழிலுக்கு உதவும் வகையில் பழக்கியிருந்தார்கள் சிறுமிகளுக்குப் பாலினைக் கறக்கும் தொழிலைக் கற்றுக் கொடுத்திருந்தார்கள் இதனை,*

**''தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாம்**
**தாம்பில் பிணித்து மன்ன நிறீஇ யாய்தந்த''**[27]

எனும் பாடலடிகளில் ஆயர்குல சிறுமி ஒருத்தி பாலைக்கறந்து கலத்தில் எடுத்துக்கொண்டு கன்றினைத் தொழுவத்தில் கட்டியமையைச் சுட்டிக் காட்டுகிறது. முல்லை நிலமக்களான ஆயர்கள் பெண் குழந்தைகளை இல்லினுள்ளும் ஆண் குழந்தைகளை இல்லின் வெளியிலும் தம் தொழிலுக்கு உதவும் வண்ணம் வளர்த்தார்கள் என்பதை காண முடிகின்றது.

**ஈ) பரதவர், உமணர் குழந்தை வளர்ப்பு முறை**

பரதவர்களும் உமணர்களும் நெய்தல் நிலப்பகுதிகளில் வாழ்ந்தவர்களாவர். பரதவர்கள் மீன்பிடித்து விற்று அதன் மூலம் கிடைக்கும் வருவாயைக் கொண்டு தம் வாழ்க்கையை நடத்தினார்கள். உமணர்கள் உப்பு விற்றலால் வரும் பொருட்கள் மற்றும் மீன் போன்றவைகளை உணவாகக் கொண்டிருந்தார்கள். இதனை,

**''புலவு மீன் உப்பு விலைகளில் பெற்றன**
**நளிமீன் கோட்பறை நாவாய்ப் பம்பை**
**விளரியாழ் செவ்வழி மீன் உப்புப் படுத்தல்**
**உணங்கவை விற்றல்மீன் உணக்கல் புள்ளோப்பல்''**[28]

என்று நெய்தல் நில மக்கள் பரதவர், உமணர் ஆகியோரின் உணவினையும், அவர்கள் செய்யும் தொழிலையும் விளக்குவதை அறிய முடிகின்றது.

தம் வாழ்க்கையின் ஆதாரமாக மீன்பிடித்தொழிலைக் கொண்டிருந்த பரதவர்கள் ஆண் குழந்தைகளுக்கு இளவயது முதலே மீன்பிடித்தொழிலைக் கற்றுக்கொடுத்து வளர்த்தார்கள். பெண் குழந்தைகளுக்குப் பெரியவர்கள் கடலில் பிடித்து வந்து கொடுக்கும் மீன்களை உணங்க வைத்தல் மற்றும் உணவு சமைத்தல் போன்ற வேலைகளைக் கற்றுக்கொடுத்தனர் என்பதனை,

**''புலவு மீன் உணங்கள் படுபுள் ஒப்பி**
**மடநோக்கு ஆயமொடு உடன் ஊர்பு ஏறி''**[29]

என்ற பாடலடிகளின் மூலம் சிறுமியர்கள் மீன்களை உணங்க வைத்துள்ளனர் அம்மீனை உண்ணவரும் பறவைகளை விரட்டினார்கள் என்பதை அறியமுடிகின்றது.

**"நெடுந்திமில் தொழிலொடு வைஇய தந்தைக்கு**
**உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு**
**அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து**
**கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்"[30]**

*என்ற பாடலடிகள் குறுமகளாய்த் திகழ்ந்த சிறுமியர்கள் உணவைச் சமைத்துப் பங்கிட்டு அளித்தமையைச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.*

*உமணர்களின் சிறுமியர் உப்பை விற்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தார்கள். உப்பின் விலையும் நெல்லின் விலையும் சமமாக இருந்தது என்பதை,*

**"நெல்லும் உப்பும் நேரே ஊரீர் கொளீரோ"[31]**

*என்று உப்பு விற்கும் மகளிர் கூறுவர் எனும் கூற்றிலிருந்து அறியலாம்.*

### உ) உழவர்களின் குழந்தை வளர்ப்பு முறை

*உழவர்கள் மருதநிலப் பகுதியில் உழவுத் தொழிலைச் செய்து வாழ்ந்தனர். இவர்களின் முக்கிய உணவாக செந்நெல், வெண்ணெல் ஆகியவை பயன்படுத்தினர் என்பதை,*

**"செந்நெல் வெண்ணெய் அந்நெல் அரிகிணை"[32]**

*என்று நம்பியகப்பொருள் கூறுகிறது. மருதநிலப் பகுதியில் வளர்ந்திருந்த மலர்களை உழவர்களின் சிறுமிகள் கடகப்பெட்டியில் வைத்துக்கொண்டு தெருக்களில் விற்றார்கள்.*

**"துய்த்தலை இதழ் பைங்குருக்கத்தியொடு**
**பித்திகை விரவு மலர் கொள்ளீரோ? என**
**வண்டு சூழ் வட்டியள் திரிதரும்**
**தண்டலை உழவர்தனி மடமகளே"[33]**

*என்ற பாடலடிகள் சிறுமிகள் இளம்வயதிலேயே வணிக தொழில் செய்து வந்துள்ளனர் என்பதை உணர முடிகின்றது.*

### ஊ) தச்சர்களின் குழந்தை வளர்ப்பு முறை

*தச்சர்கள் தச்சுத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்தார்கள். தச்சுத் தொழிலால் வரும் வருமானத்தை வைத்து அவர்களுக்குத் தேவையான உணவு மற்றும் இதர தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டார்கள். தச்சர்கள் தம்*

தொழிலுக்குத் தேவையான மரங்களைக் காட்டில் சென்று வெட்டிக் கொண்டு வரும் தொழிலுக்குத் தங்களது பிள்ளைகளையும் ஈடுபடுத்தினார்கள்.

**''மரம் கொல் தச்சன் கைவல் சிறாஅர்**
**மழுவுடைக் காட்டகத்து அற்றே''[34]**

எனும் பாடல் மூலம் தச்சர்களின் சிறுவர்கள் மழுவினைக் கையில் ஏந்திக்கொண்டு காட்டிற்கு மரத்தை வெட்டச் சென்று தம் தொழிலை மேற்கொண்டிருப்பதை அறிய முடிகின்றது.

### ஏ) பாணர்களின் குழந்தை வளர்ப்பு முறை

பாணர்கள் குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழ்க்கை நடத்தவில்லை. எல்லாப்பகுதிகளிலும் விரவி வாழ்ந்தார்கள். ஊரில் செல்வம் மிக்கோர் மனம் மகிழும்படி பண்ணிசைத்து அவர்கள் கொடுக்கும் பொருளைக் கொண்டு வாழ்ந்து வந்தனர். பாணர்களின் சிறுமிகள் மீனினை விற்றும் அதற்குப் பதிலாக நெல்லைப் பெற்றார்கள். இதனை,

**''அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்**
**சின்மீன் சொரிந்து பன்னெல் பெறூஉம்''[35]**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. திணைநிலைக் குடிகளில் வாழ்ந்த வறியவர்களின் குழந்தைகள் அவ்வந் நிலப்பகுதியில் விளைந்தவற்றை உண்டும், எஞ்சியவற்றைப் பிற பகுதிகளுக்குக் கொண்டு சென்று விற்று அதன் மூலம் கிடைக்கும் பொருட்களை உண்டும் வாழ்ந்து வந்துள்ளனர். சிறுவர் சிறுமியர்கள் தங்கள் பெற்றோருக்கு உறுதுணையாக வேலைகளை செய்தார்கள் என்பதையும் அறியமுடிகின்றது.

### பயிற்றுவித்தல்

குழந்தைகளுக்கு முதல் ஆசானாகத் திகழ்வது தாய். அந்த தாயே குழந்தைகள் உண்ண, உடுக்க, நடக்க, பேச, படிக்க, எழுத முதலிய செயல்களைப் பயிற்றுவிக்கிறாள். சங்க இலக்கியம் கல்வி பயிற்றுவித்தல், சொல் பயிற்றுவித்தல், தாளம் பயிற்றுவித்தல் ஆகியவற்றை எடுத்துரைக்கின்றது.

### கல்வி பயிற்றுவித்தல்

ஒரே தாயின் வயிற்றில் பிறந்தவர்களில் கல்விச் செல்வத்தில் சிறந்து விளங்கும் பிள்ளையிடம் தாய் மனம் வேறுபட்டு விரும்பி நிற்கின்றாள் என்பதை,

**''பிறப்பு ஓர் அன்ன உடன்வயிற் றுள்ளும்**
**சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்''[36]**

*எனக் கூறுவதிலிருந்து குழந்தைகட்கு கல்வி பயிற்றுவிக்கப் பட்டதையும், சங்க காலத்தில் கல்வி மதிக்கப்பட்டதையும் அறிய முடிகின்றது.*

### சொல் பயிற்றுவித்தல்

*தாய் தன் குழந்தைகளுக்குத் திருத்தமாகப் பேசக் கற்றுக்கொடுத்தாள். விருந்தினர் வருதலால் கை ஓயாது கடமையிலே ஈடுபட்டிருந்ததாலும் தன் கணவனின் பிரிவினாலும் மருந்தறியாது துயருற்ற தன் நெஞ்சிற்கு அமுதத்தை உண்டாற் போன்ற திருத்தமான சொற்களைக் கூற வேண்டுமென்பதை தன் குழந்தையிடம் வேண்டினாள். இதனை,*

**''பெரும! விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளாய்**
**பெருந்தெருவில் கொண்டாடி ஞாயர் பயிற்றே,**
**திருந்துபு நீ கற்ற சொற்கள் யாம் கேட்ப,**
**மருந்து ஓவா நெஞ்சிற்கு அமிழ்தம் அயின்றற்றா,**
**பெருந்தகாய் கூறு சில''[37]**

*என்ற பாடலடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.*

### தாளம் பயிற்றுவித்தல்

*சங்ககால மக்கள் இயற்கையொடும் இசையொடும் இயைந்து வாழ்க்கை நடத்தினார்கள். குழந்தையின் பேச்சு இனிமையானது என்பதை,*

**''குழலினிதி யாழினி தென்பதம் மக்கள்**
**மழலைச்சொற் கேளா தவர்''[38]**

*எனும் திருக்குறளின் கருத்து ஒப்புநோக்கத்தக்கதாகும். இவ்வாறு இனிமையாகப் பேசக்கூடிய குழந்தைகளுக்குத் தாளம் பயிற்றுவிக்கப்பட்டதை,*

**''பாணர் முல்லை பாடச் சுடரிழை**
**வாணுதல் அரிவை முல்லை மலைய**
**இனிதிருந் தனனே நெடுந்தகை**
**துனிநீர் கொள்கைத் தான் புதல்வனோடு பொலிந்தே''[39]**

எனும் பாடலில் இன்னிசை கேட்டு மகிழும் போது தலைவன் தன் புதல்வனை, தன் மடியின் மேல் உட்கார வைத்துக்கொண்டு யாழின் பாட்டுக்கு ஏற்றபடி தாளம் கொட்டுமாறு செய்து மகிழ்ந்தான். இவ்வாறு தாயும் தந்தையும் குழந்தைகளுக்கு இளம் வயது முதலே கலையையும் கற்றுக்கொடுத்துள்ளனர் என்பதைக் காண முடிகின்றது.

## குழந்தைகளுக்கு அணிகலன்கள் அணிவித்தல்

வீட்டிற்கு அணிகலன்களாகத் திகழும் குழந்தைகளுக்கும் சங்க கால மகளிர் சில வகை அணிகலன்களை அணிவித்திருந்தனர். சங்க காலத்தில் பெண்கள் அணியும் அணிகலன்கள், குழந்தைகளுக்கான அணிகலன்கள், ஆண்களுக்கான அணிகலன்கள், முதியவர்களுக்கான அணிகலன்கள் என்று மக்கள் அணிகலன்களை வகைப்படுத்தி அணிந்துள்ளனர். அவ்வகையில் குழந்தைகளுக்குத் தாலி, ஐம்படைத்தாலி, புலிப்பல்தாலி முதலிய அணிகலன்களை அணிவித்திருந்தார்கள் என்பதை, “தாலி என்பது குழந்தைகள் அணியும் நகையாக இருந்தது ஐம்படைத்தாலி, புலிப்பல் தாலி போன்றவற்றைக் குழந்தைகள் அணிந்திருந்தனர்’’[40] என்ற தெசினியின் கருத்தும் அமைந்திருப்பது ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

சங்க காலத்தில் புலிப்பல் கோத்த தாலியைப் புதல்வர்கள் அணிந்திருந்தமையை,

**‘‘புலிப்பல் தாலிப் புதல்வற் புல்லி’’[41]**

என்ற பாடலடி சுட்டிக்காட்டுகிறது.

மக்கள் தங்களது செல்வ நிலைக்கு ஏற்ப குழந்தைகளுக்கு முத்துவடம், நெற்றிச்சுட்டி, கிண்கிணி போன்ற அணிகலன்களையும் அணிவித்திருந்தனர் என்பதை,

**‘‘பொலம் பிறையுள் தாழ்ந்த புனைவினை உருள்கலன்**
**நலம்பெறு கமழ் சென்னி நகையொடு துயல்வர**
**உருளஞ்சாது இடைகாட்டும் உடைகழல் அம்துகில்**
**அரிபொலி கிண்கிணி ஆர்ப்பு ஓவா அடி தட்ப’’[42]**

என்ற பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. தென்னங் குரும்பையின் வடிவு கொண்ட மணிகளைக் கொண்ட கிண்கிணியைப் புதல்வர்கள் அணிந்திருந்ததை,

**''குரும்பை மணிப்பூண் புதல்வன் தாயே''[43]**

*என்ற பாடலடியின் வாயிலாக அறியமுடிகிறது.*

**''குரும்பை மணிப்பூண் பெருஞ்செங் கிண்கிணி''[44]**

*எனும் அடியும் எடுத்துக்காட்டாக அமைவதை தெளிவுறலாம்.*

*"செல்வர்கள் தங்கள் குழந்தைகளின் கால்களிலே தவளை வாயைப்போல் வடிவமைக்கப்பட்ட பொன்னாற் செய்த கிண்கிணிகளைப் போட்டிருப்பார்கள்''[45] என்பர். மேலும், காலில் கிண்கிணியும், அல்குலில் பொன்மணிகளாலாகிய வடத்தினையும் அதன் மேல் பவள வடத்தினையும், பூந்துகிலையும், தொடியையும், பவளத்தால் செய்த பூணினையும், முத்தும் பல மணிகளும் சேர்ந்த மூன்று வடத்தினையும், நீலமணியாற் செய்யப்பட்ட மாலையையும் செல்வர்களின் குழந்தைகள் அணிந்திருந்தார்கள் என்பதனை,*

**''காலவை, கடுபொன் வளைஇய ஈரமை சுற்றொடு**
**பொடியழல் புறந்தந்த செய்வுறு கிண்கிணி**
**உடுத்தவை, கைவினைப் பொலிந்த காசுமை பொலங்காழீமேல்**
**மையில் செந்துகிர் கோவைணுயற்றின் மேல்**
**தைஇய பூந்துகில் ஐதுகழல் ஒருதிரை**
**கையதை, அலவன் கண்பெற அடங்கச் சுற்றிய**
**பலவுறு கண்ணுள் சிலகோல் அவிர்தொடி,**
**பூண்டவை, எறியாவாறும் எற்றா மழுவும்**
**செறியக் கட்டி ஈரிடைத் தாழ்ந்த**
**பெய்புல மூதாய்ப் புகர்நிறத் துகரின்**
**மையற விளங்கிய ஆனேற் றவிர்பூண்**
**கடின, இருங்கடல் முத்ததும் பன்மணி பிளவுமாங்**
**கொருங்குடன் கோத்த உருளமை முக்காழ்வேல்**
**கரும்பார் கண்ணிக்குச் சூழ் நூலாக**
**அரும்பவிழ் நீலத் தாயிதழ் நாணச்**
**சுரும் பாற்றுப் படுத்த மணிமருள் மாலை**
**ஆங்க, அவ்வும் பிறவும் அணிக்கு அணியாக''[46]**

*என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இவற்றிலிருந்து குழந்தைகளின் அணிகலன்கள் அவர்களது செல்வச் செழிப்பிற்கு ஏற்ப அணிவிக்கப்பட்டிருந்தன என்பதை அறியமுடிகிறது.*

### குழந்தைகளின் முக்கிய செயல்கள்

அக வாழ்வில் தலைவன், தலைவி ஆகிய இருவருக்கும் இடையேயுள்ள ஊடலைத் தீர்க்கும் வாயில்களாகத் தோழி, பாங்கன், பாங்கி, பாணன் போன்றோர் திகழ்ந்துள்ளனர். இல்வாழ்க்கையில் கணவன், மனைவி ஆகியோருக்கு இடையேயுள்ள ஊடலைத் தீர்க்கும் வாயிலாகக் குழந்தைகள் இருக்கின்றனர்.

“இல்லத்தில் வாழ்வோருக்குப் புத்திரப்பேறு ஒரு சிறந்த செல்வமாகக் கருதப்பட்டது. கணவனுக்கும் மனைவிக்கும் எவ்வளவு கடுமையான மனக்கசப்புகள் நேர்ந்தாலும் குழந்தைகளிலிருந்தால் சச்சரவு தலைதூக்காது, அவ்விருவருக்கும் குழந்தைகளே சமாதானத் தூதர்களாய் நிற்கும் அவர்களுடைய பிணக்கும் விரைவில் மறையும்’’[47] என்று சாமி சிதம்பரனார் கூறுவதிலிருந்தும் குழந்தைகள் சிறந்த ஊடல் தீர்க்கும் வாயிலாக அமைந்திருந்ததை அறியலாம்.

- **தலைவனின் பரத்தமையை அறிந்துகொள்ளுதல்**
- **தலைவனின் பரத்தமையை மாற்றுதல்**
- **ஊடலைத் தீர்க்கும் வாயிலாக அமைதல்**

போன்ற செயல்களில் குழந்தைகளோடு ஈடுபடுத்தியதை சங்க இலக்கியத்தில் காணமுடிகின்றது.

### தலைவனின் பரத்தமையை அறிந்துகொள்ளுதல்

சங்க காலத்தில் பரத்தமை ஒழுக்கம் ஆண்களுக்குரிய ஒழுக்கத்தில் ஒன்றாகக் கருதப்பட்டுள்ளது. பரத்தமை ஒழுக்கம் அக்காலத்தில் கடுமையாக கண்டிக்க கூடிய ஒன்றாக இல்லை. பரத்தை பிரிவை தோழி, பாங்கன், பாணன், புலவர் போன்றோர் சிறிதளவு கண்டித்துள்ளனர். தலைவி பரத்தையின் பொருட்டு பிரிந்து சென்று வந்த தலைவனை மென்மையாக கண்டித்துள்ளாள். தலைவியை காதலித்த போது கொண்டிருந்த அன்பையும், வாக்குறுதியினையும் நினைவுறுத்தி கூறுவதாக பாடல்கள் அமைந்துள்ளன.

குழந்தையே தலைவனின் பரத்தமையைத் தலைவிக்கு தெரிவிக்கும் கருவியாக இருந்திருக்கிறார்கள். இதனை,

**''காமக் கிழத்தி தன் மகத் தழீஇ**
**ஏமறு விளையாட்டு இறுதிக் கண்ணும்**
**..........................................................**
**தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை**
**மாயப் பரத்தை வழியும்''[48]**

என்று தொல்காப்பியம் கூறுவதிலிருந்து நாம் அறிந்து கொள்ளலாம்.

தலைவி தன் குழந்தையைத் தோழியுடன் அனுப்பினாள். வழியில் அக் குழந்தையைக் கண்ட பரத்தை ஒருத்தி அவனைக் கண்டு மகிழ்ந்து கொஞ்சினாள். இதன் மூலம் தலைவி, தலைவனின் பரத்தமையை அறிந்துகொண்டாள் என்பதை,

**''அடக்கம் இல் போழ்திண்கண், தந்தை காமுற்ற**
**தொடக்கத்துத் தாயுழைப் புக்காற்கு, அவளும்**
**மருப்புப் பூண் கையுறையாக அணிந்து**
**பெருமான்! நகைமுகம் காட்டு! என்பாள்''[49]**

இப்பாடலடிகள் விளக்குகின்றன.

தலைவனின் புதல்வன் தெருவில் சிறுதேர் உருட்டி விளையாடினான். அதனைக் கண்ட பரத்தை காண்பார் யாரும் இல்லாமையால் அவனிடம் சென்றாள். புதல்வனை அணைத்துக் கொண்டாள். அதனைக் கண்ட தலைவி இவள் தலைவனின் பரத்தை என்பதை அறிந்து, நீயும் இவனுக்கு தாயே ஆவாய் என்று கூறுவதை,

**''பொங்கலம் சுமந்த புண்தாங்கு இளமுலை**
**வருகமாள்; என் உயிர்! எனப் பெரிது உவந்து**
**கொண்டனள் நின்றோட கண்டு, நிலைச் செல்லேன்**
**மாசு இல் குறுமகள்! எவன் பேதுற்றனை?**
**நீயும் தாயே இவற்கு? என யான்தற்**
**கரைய, வந்து விரைவனென் கவைஇ''[50]**

இப்பாடலடிகளின் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

இவ்வாறு தலைவனின் பரத்தமையை அறிந்து கொண்ட தலைவி தலைவனின் பரத்தமையை தன் குழந்தை மூலம் மாற்றும் முயற்சியில் ஈடுபட்டாள் என்பதை தெளியலாம்.

**தலைவனின் பரத்தமையை மாற்றுதல்**

*தலைவன் பரத்தை ஒருத்தியைத் திருமணம் செய்து கொள்ள எண்ணினான். இதனைத் தலைவி தெரிந்து கொண்டாள். தலைவனின் திருமணத்தை நிறுத்த எண்ணிய தலைவி, தன் மகனை தலைவனின் தேர் முன்பாக போகவிட்டாள். தன் மகனைப் பார்த்த தலைவன் அவன் மீது கொண்ட அன்பின் காரணமாக திருமணத்திற்குச் செல்லாமல் குழந்தையுடன் தலைவியின் இல்லத்திலேயே தங்கி விட்டான். இவ்வாறு தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தை மாற்ற தலைவி தன் குழந்தையை வாயிலாக அமைத்துக் கொண்டாள். இக்கருத்தினை,*

**‘‘நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியோடு**
**வதுவை அயர்தல் வேண்டி, புதுவதின்**
**இயன்ற அணியன், தெரு இரப்போன்**
**மாண்தொழில் மாமணி கறங்க, கடை கழிந்து**
**காண்டல் விருப்போடு தளர்பு தளர்பு ஓடும்**
**பூங்கண் புதல்வனை நோக்கி, நெடுந்தேர்**
**தாங்குமதி வலவ! என்று இழிந்தனன்’’**[51]

*என்ற பாடலடிகளின் வழி குழந்தையைக் கண்டவுடன் தன் தவறுகளை உணர்ந்து நேர்மையுடன் வாழ வழிவகுத்துள்ளதை அறிய முடிகிறது.*

*தலைவி தன் கூந்தலில் இருந்த கோதையைப் பறித்துச் செல்லும் விளையாட்டினைக் கற்றுக்கொடுத்து அதன் மூலம் குழந்தையைத் தலைவனுடன் விளையாடச் செய்து அதன் மூலம் தலைவனின் பரத்தைமையை மாற்ற முயன்றதை,*

**‘‘ஐய, எம் காதில் கனங்குழை வாங்கி பெயர்தொறும்**
**போது இல் வறுங்கூந்தல், கொள்வதை நின்னையாம்**
**ஏதிலார் கண்சாய நுந்தை வியன் மார்பில்**
**தூதுதேர் வண்டின் கிளைபாட தைஇய**
**கோதை பரிவு ஆட், காண்குவம்’’**[52]

*என்ற பாடல் குறிப்பிடுகிறது.*

*குழந்தை தலைவனுடன் விளையாடும் விளையாட்டு குழந்தைக்கும் தந்தைக்குமிடையேயுள்ள உறவை அதிகரிக்கிறது. இதன் மூலம் குழந்தையின் மேல் தலைவனுக்கு அன்பு பெருகி பரத்தையை மறந்து தலைவியொடு வந்து சேர்ந்து வாழ்ந்த நிலையை அறிய முடிகின்றது.*

**ஊடலைத் தீர்க்கும் வாயிலாக அமைதல்**

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் தலைவி தலைவன் மீது ஊடல் கொண்டாள். இதனைப் போக்க எண்ணிய தலைவன் தன் குழந்தையைத் தூக்கிச் சென்றான். உடனே தலைவி ஊடல் தீர்ந்து தலைவன் பின்னால் சென்றாள். இதனை,

> **''மேதக்க எந்தை பெயரனை யாம் கொள்வோம்**
> **தாவா விருப்போடு கன்று யாத்துழிச் செல்லும்**
> **ஆ போ படர்தக''**[53]

என்ற பாடலடிகள் இயம்புகின்றன.

> **''கண்டிசின் பாண! பண்புடைத் தம்ம!**
> **மாலை விரிந்த பசுவெண் ணிலவில்**
> **குறுங்கால் கட்டில் நறும்பூம் சேக்கைப்**
> **பள்ளி யானையின் உயிரா அசைஇப்**
> **புதல்வன் தழீஇனன் விறலவன்,**
> **புதல்வன் தாய் அவன்புறம் கவையினளே''**[54]

இது போன்ற பாடல்களின் வழியும் அறிஞர்கள் கூற்றுக்களின் வழியும் குழந்தைகள் எவ்வாறு ஊடல் தீர்க்கும் வாயிலாகத் திகழ்ந்துள்ளார்கள் என்பதை அறிய முடிகின்றது.

"வெளியே சென்றிருக்கும் கணவன் மேல் மனைவி கடுங்கோபத்துடன் இருந்தாள். கணவனும் இதனைத் தெரிந்து கொண்டான். அவன் வீட்டுக்கு வரும்போது ஒரு தந்திரம் செய்தான். நாம் நேரே அவளிடம் சென்றால் அவள் நம்முடன் பேச மாட்டாள் என்று நினைத்து அவன் ஒரு தந்திரத்தைக் கையாண்டான். தலைவன் வீட்டிற்குள் கட்டிலிலே உறங்கும் புதல்வனை அணைத்துக் கொண்டு படுத்துவிட்டான். அதைக் கண்ட மனைவி, தானும் கட்டிலில் ஏறித் தன் கணவனுடைய முதுகுப் புறத்தை அணைத்துக் கொண்டு படுத்துவிட்டாள். இவ்வளவோடு அவர்கள் பிணக்குத் தீர்ந்துவிட்டது''[55] என்பர். குழந்தை ஊடலைத் தீர்க்கும் வாயிலாக இருந்து ஒற்றுமையை வெளிப்படுத்தியுள்ளமையை அறிய முடிகின்றது.

**அச்சுறுத்தல்**

குழந்தைகள் ஆண், பெண் என்ற வேறுபாடின்றி தவறு செய்யும் பொழுது தாய் அடித்துத் தண்டித்தாள். இதனால் குழந்தைகள் கண்டிப்புடன் வளர்க்கப்பட்டதை அறியமுடிகிறது.

தலைவன் பரத்தை ஒருத்தியை மணம் செய்து கொள்ள விரும்பித் தேரில் சென்றான். வழியில் தன் மகனைக் கண்ட தலைவன் தேரை விட்டு இறங்கித் தன் மகனைத் தூக்கிக்கொண்டு தலைவியின் வீட்டினுள் சென்றான். தன் மகனால் தலைவனின் பயணம் தடைப்பட்டதை அறிந்து தலைவி தன் மகனை அடிக்கக் கோலுடன் சென்றாள் என்பதை,

**''...................................மகனொடு**
**தானே புகுந்தோனே! யான் அது**
**படுத்துனன் ஆகுதல் நாணி, இடித்து, இவற்**
**கலக்கினன் போலும், இக் கொடியோன் எனச் சென்று**
**அலைக்கும் கோலோடு குறுக''**[56]

எனும் பாடலடிகள் விளக்குகின்றன.

தன் தோழியருடன், புத்தேளிர் கோட்டம் சென்ற தன்மகன் வழியில் பரத்தையின் வீட்டிற்குச் சென்றான். அதனை அறிந்த தலைவி கோபமுற்றாள். 'நினக்கு அவள் என்ன உறவுடையள், ஏடி இவனை அடிப்பதற்கு ஒரு கோல் தருவாயாக' என்று தன் மகனை அச்சுறுத்தினாள். இதனை,

**''புலத்தகைப் புத்தேள் இல் புக்கான் – அலைக்கு ஒரு**
**கோல்தா, நினக்கு அவள் யார் ஆகும் – எல்லா''**[57]

என்ற பாடலடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

மேலும் குழந்தை உணவு உண்ண மறுக்கும் பொழுதும் கோல் கொண்டு அச்சுறுத்தி உணவு உண்ண வைத்தார்கள். இதனை,

**''பால்கொண்டு மடுப்பவும் உண்ணான் ஆகலின்,**
**செறாஅது ஒச்சிய சிறுகோல் அஞ்சியொடு''**[58]

என்ற பாடலடிகள் குழந்தையின் நன்மைக்காக எதிர்கால வாழ்க்கைக்காக அடிக்காமல் அச்சுறுத்தியதை அறிய முடிகின்றது.

வறுமையின் காரணமாகவும் குழந்தைகளை அச்சுறுத்தியுள்ளனர். பாலில்லாத வறுவிய முலையைச் சுவைத்துப் பால் கிடைக்கப் பெறாததால் கூழையும் சோற்றையும் விரும்பி, உள்ளே ஒன்றுமில்லாத வறிய கலத்தைத் திறந்து அங்கும் ஒன்றும் காணாத குழந்தை அழுதது. அதனைக் கண்ட தாய் புலியின் வரவு சொல்லி அச்சுறுத்தினாள். இதனை,

**''புல் உளைக் குடுமிப் புதல்வன் பல்மான்**
**பால் இல்வறு முலை சுவைத்தனன் பெறாஅன்**
**கூழும் சோறும் கடைஇ, ஊழின்**
**உள் இல் வறுங்கலம் திறந்து, அழக்கண்டு**
**மறப்புலி உரைத்தும்''[59]**

என்ற பாடலடிகள் இல்லாமையை காட்டுகின்றன. சங்க காலத்தில் குழந்தைகளை அச்சுறுத்தியும், அறிவுறுத்தியும் மிகவும் கண்டிப்புடன் வளர்த்தார்கள் என்பது தெளிவாகிறது.

## குழந்தைகளின் இயல்புகள்

குழந்தைகள் உறவுகளை இணைக்கும் பாலமாக விளங்கியுள்ளனர். குழந்தைகள் தளர்நடையும், அழகுத் தோற்றமும் இனிமையான மழலைப் பேச்சும், பார்ப்பவர் மனங்களைக் கவர்ந்தன. இதனை,

- **தந்தையின் பண்பை ஒத்திருத்தல்**
- **தாயின் மேல் அதிக அன்பு**
- **குழந்தையின் தோற்றம்**
- **மழலைப் பேச்சு**
- **மென்மைத் தன்மை**
- **முறுவல்**
- **பகுத்தறியாத் தன்மை**
- **உண்ணும் அழகு**

போன்றவற்றை குழந்தைப் பருவத்தினரின் இயல்புகளாகச் சங்க இலக்கியம் குறிப்பிட்டுள்ளதைக் காண முடிகிறது.

**தந்தையின் பண்பை ஒத்திருத்தல்**

மகன் தந்தையின் பண்புநலன்களை ஒத்திருப்பான். தலைவனும் தலைவியும் கற்பு நெறியில் வாழும் பொழுது தலைவி கூற்று நிகழுமிடத்து தலைவி தன் மகன் தலைவனின் அதாவது தந்தையின் உருவத் தோற்றமும் பண்பு நலனும் மகனுக்கும் தொடரும் என்பதை,

**''தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால்**
**அந்தியில் சிறப்பின் மகல்பழிந்து நெடுங்கினும்''[60]**

என்று தொல்காப்பியம் கூறுகிறது. இக்கருத்தினை வலியுறுத்தும் சங்கப்பாடல் ஒன்றும் அமைந்துள்ளது.

தந்தையைப் போன்று அழகு, குணம், பண்பு, இவற்றையெல்லாம் ஒத்திருந்தாலும், தந்தையின் தன்மைகளுள் அனைத்தும் உன்னிடம் இருப்பதைக் கண்டேன். அவரைப் போல் விளங்குவாயாக, போர்க்களத்தில் பகைவரை வென்று களத்தில் வெற்றி கொள்ளும் குணத்தோடு தந்தையைப் போல் இருப்பதை தாயானவள் தன் குழந்தை, தந்தையின் பண்பை ஒத்திருப்பதைப் பின்வரும் பாடலடி தெளிவுப்படுத்துவதை,

**''செம்மால் வனப்பு எலாம் நுந்தையை ஒப்பினும் நுந்தை**
**நிலைப்பாலுள் ஒத்தகுறி என வாய்க்கேட்டு – ஒத்தி''[61]**

அதியமான் என்ற சிற்றரசன் தனக்குப் பிறந்த எழினி என்ற மகனை முதன்முதலாகக் காணச்சென்ற போது போர்க்கோலத்தோடு சென்றான் என்பதனை,

**''வெட்சி மாமலர் வெங்கையோடு விரைஇச்**
**சுரி இரும் பித்தை பொளியச் சூடி,**
**வரிவயம் பொருத வயக் களிறு போல,**
**இன்னும் மாறாது சினனே ,அன்னோ!**
**உயர்ந்தனர் அல்லர், இவன் உடற்றியோரே ,**
**செறுவர் நோக்கிய கண், தன்**
**சிறுவனை நோக்கியும் சிவப்பானாவே''[62]**

புறநானூற்று அடிகள் விளக்குகின்றன. இப்பாடலின் மூலம் மகன் தந்தை போல் வீரனாக வர வேண்டும் என்ற எதிர்ப்பார்ப்பு இதற்குக் காரணமாக அமையலாம் என்று கருதப்படுகிறது.

**தாயின் மேல் அதிக அன்பு**

குழந்தைகள் தங்கள் தாயின் மீது அதிக அன்பு கொண்டவர்களாக இருந்தனர். இது மாறாத பண்பாகத் தொடர்கிறது. தாய் சினம் கொண்டு தன் குழந்தையை அடித்த பொழுதும் குழந்தைத் தன் தாயிடமே செல்லும் என்பதை,

**''தாய் உடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு**
**அன்னாய் என்னும் குழவி போல''**[63]

என்ற பாடலடிகள் மூலம் இதனை நாம் அறியலாம். இந்த கருத்தினை அடியொற்றி தெசினி, "தாய் சினந்து அடித்தாலும், குழந்தை அன்னையே என்று தன் வாய்விட்டு அலறும். தாய் தன் குழந்தையைக் காப்பாற்ற கடமைப் பட்டவள்''[64] என்ற கருத்தின் வழியும் குழந்தைத் தன் தாயின் மேல் அதிக அன்பு கொண்டு திகழ்வதை உணரமுடிகிறது.

**குழந்தையின் தோற்றப் பொலிவு**

குழந்தைகள் தாமரையின் இதழ் போன்ற உள்ளத்தையும், பவளம் போன்ற அழகிய வாயினையும் கொண்டிருந்தனர். குழந்தைகளின் மழலைச் சொற்கள் கேட்போர்க்கு மகிழ்ச்சியைத் தந்தன. அத்தகைய குழந்தைகளை எல்லோரும் விரும்பினார்கள். இதனை,

**''நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்**
**தாதின் அல்லி அவிர் இதழ் புரையும்,**
**மாசு இல் அங்கை மணி மருள் அவ்வாய்,**
**நாவொடு நவிலா நகைட்டு தீம் சொல்**
**யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை''**[65]

எனும் பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது.

**மழலைப் பேச்சு**

குழந்தைகள் பேசும் பேச்சினை மழலைப் பேச்சு என்பார்கள். குழந்தைகளின் 'மழலை' என்பதற்கு தமிழ் லெக்சிகன், குழந்தைகளின் திருந்தாச் சொல், மென்மொழி, இளமை, மெல்லோர் என்ற நான்கு பொருளைத் தருகிறது. குழந்தைகளின் மழலையை உணர்த்தும் முகமாக,

> **''ஐய காமரு நோக்கினை அத்தத்தா என்னும் நின்**
> **தேமொழி கேட்டல் இனிது''[66]**

என்ற பாடலடிகளால் அக்கால மக்கள் குழந்தையின் மழலை மொழியைக் கேட்டு இன்புற்றனர் என்பதை அறியமுடிகிறது.

குழந்தைகளின் மழலைமொழி யாழோசை போல இன்பம் தராது. காலத்தோடும் கூடியிராது, பொருளும் அறிய வராது, ஆயினும் தம் பிள்ளைகளுடைய மழலையைக் கேட்டு தந்தையர் மகிழ்ந்தனர் என்பதனை,

> **''யாழோடும் கொள்ளா, பொழுதோடும் புணரா,**
> **பொருள் அறிவாரா, ஆயினும் தந்தையர்க்கு**
> **அருள் வந்தனவால், புதல்வர்''[67]**

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன

தலைவனைப் பிரிந்து தலைவி துயரத்தில் வேதனைப் பட்டாள். தன் துயரத்தைப் போக்கிக் கொள்ளும் மருந்தாகக் குழந்தையையும், குழந்தையின் மழலையையும் எண்ணினாள். துன்பத்தைப் போக்கும் மருந்தாக குழந்தையின் மழலை அமைந்திருத்தலை,

> **''மருந்து ஓவா நெஞ்சிற்கு அமிழ்தம் அயின்றற்றா**
> **பெருந்தகாய் கூறு, சில''[68]**

எனும் பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன. இதன் வாயிலாக மனநோய்க்கு மருந்தாக குழந்தை இருந்துள்ளமையை அறிய முடிகின்றது.

தலைவன் பொருளீட்டும் பொருட்டு பிரிந்து சென்ற தலைவன் மீண்டு வரும் பொழுது தன் குழந்தையை நினைத்து விரைவாக தேரினை செலுத்து என்று பாகனிடம் கூறுவதிலிருந்து தலைவியைக் காட்டிலும் ஈன்ற பிள்ளைகள் நினைவாகவும், அன்பாகவும் இருந்தமையை,

**''செல்க பாகரின் செய்வினை நெடுந்தேர்**
**விருந்து விருப்புறூஉம் பெருந்தோட்கு குறுமகள்**
**மின் ஒளிர் அவிர் இழை நல் நகர் விளங்க,**
**நடைநாட் செய்த நாவிலாச் சீறடிப்**
**பூங்கட் புதல்வன் உறங்குவயின் ஒல்கி,**
**வந்தீக, எந்தை என்னும்**
**அந்தீம் கிளவி கேட்க நாமே''[69]**

*எனும் பாடல்வழி அறிய முடிகின்றது.*

### மென்மைத் தன்மை

*குளத்திற்கு அணி செய்யும் தாமரை மலர்போல இல்லத்திற்கு அணி செய்யும் குழந்தைகள் என்பர். பெண்கள் தங்கள் குழந்தைகளைக் கையால் பிடித்துச் செல்லும் காட்சி தாமரைப் போதினைப் பிடித்துள்ளது போல இருப்பதை,*

**''திண்கதிர் மாதணி ஒண்டுமாறு மாக்களை**
**தாது அணி தாமரைப் போது பிடித்தாங்கு''[70]**

*என்ற பாடலடிகள் குழந்தையின் அழகினைச் சித்தரிக்கின்றன.*

*சிறு குழந்தையின் கை மென்மையும், தூய்மையும் நிறைந்த தாமரைப்பூவின் இதழைப் போன்று அமைந்திருந்ததாக,*

**''நாயுடை முதுநீர் கலித்த தாமரைத்**
**தாதின் அல்லி இதழ் அவிர் புரையும்**
**மாசில் அங்கை''[71]**

*இப்பாடலடிகள் குறிப்பிடுவது சுட்டிக்காட்டத்தக்கதாகும்.*

*குடையின் நிழலில் தோன்றும் குழந்தையைக் கண்ணுற்ற புலவர், அக்காட்சியினை இலையின் கீழ் தோன்றும் தாமரைப் போதாக உவமித்துக் காட்டுவதை,*

**''அடைமறை ஆயிதழ்ப் போதுபோல் கொண்ட**
**குடைநிழற் தோன்றுநின் செம்மலைக் காணூஉ''[72]**

*எனும் பாடல் வழி அறியமுடிகின்றது.*

*தம் குழந்தைகள் தாயின் மெய்யைத் தீண்டுவதால் அவர்களுக்கு இன்பம் ஏற்பட்டது. அவரது மழலைப் பேச்சு செவிக்கு இன்பம் தந்தது என்பதை,*

**‘‘ஆகலந் துறத்தலின் அழுதோவா உண்கண் எம்**
**புதல்வனை மெய்தீண்டப் பொருந்துதல் இயைபவால்’’[73]**

*என்ற பாடலடிகள் எடுத்தியம்புகின்றன. இக்கருத்தினையே,*

**‘‘மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றவர்**
**சொல்கேட்டல் இன்பம் செவிக்கு’’[74]**

*என்ற திருக்குறளும் அரண்செய்கிறது.*

*தெளிந்த நீர்க்கண் மலர்ந்த தாமரைப் பூவினை போன்று இளங்குழந்தையின் மென்மைத் தன்மையினை,*

**‘‘தெண்ணீர்ப்**
**போவிதழ் தாமரை அன்ன நின்**
**காதலம் புதல்வன்’’[75]**

*என்ற பாடலடி குறிப்பிடுகிறது. குழந்தையின் மென்மைத் தன்மையைத் தாய்மார்கள் விரும்பிப் போற்றியுள்ளனர் என்பதையும், புலவர்களின் ஒப்பற்ற உவமையின் வழி அக்காலம் தொட்டு இன்று வரை குழந்தைகளின் மென்மைத் தன்மையில் மாறுபாடில்லாது அமைந்திருப்பதை வெளிக்கொணர முடிகின்றது.*

**முறுவல்**

*குழந்தையின் முறுவல் அனைவரையும் வியக்க வைக்கும். பொருள்வயின் பிரிந்து செல்ல நினைக்கும் தலைவனிடம் நீ பிரிந்து சென்று ஈட்டக் கருதும் பொருள் உன்னுடைய மனைவியின் முகத்தில் பிறந்த முறுவலையும், உன் குழந்தையின் முறுவலையும் கண்டு மகிழ்வதை விட இனிதோ? என்று தோழி வினவுவதாக,*

**‘‘நின் நயந்து உறைவி கடுஞ்சூற் சிறுவன்**
**முறுவல் காண்டலின் இனிதோ –**
**இறுவரை நாட–நீ இறந்து செய் பொருளே?’’[76]**

எனும் பாடல் அடிகள் அமைந்துள்ளன. குழந்தையின் முறுவலே சிறந்த செல்வம் அதுவே தாயின் மனதிற்கும், காண்போர் மனதிற்கும் இன்பத்தைத் தரும். அதை விட இன்பத்தை ஈட்டும் பொருள் அளிக்காது என்பதை சங்க கால மக்கள் உணர்த்தியமையை உணர முடிகிறது.

**பகுத்தறியாத் தன்மை**

குழந்தைகள் ஒரு செயலைச் செய்யும் போது நன்மை, தீமை என்று அறியாது மனதிற்கு பிடித்ததைச் செய்வார்கள். தனக்கு தீது நேருமோ என்று ஆராய்ந்து நன்மைத் தரும் செயலை செய்யும் அளவிற்கு அவர்களுக்குப் பகுத்து அறியக்கூடிய பக்குவம் வராது என்பதை,

**‘‘மறு இல் யாணர் மலிகேழ் ஊர! நீ**
**சிறுவரின் இணைய செய்தி**
**நளிரோ பெருமநின் கண்டிசினோரே’’**[77]

எனும் பாடல் வழி அறிய முடிகிறது.

**உண்ணும் அழகு**

குழந்தைகள் உண்பது பார்ப்பவருக்கு வேடிக்கையாய் இருக்கும். அவர்கள் உணவினைக் கீழேக் கொட்டியும் அருகிலே இருக்கும் நாய், பூனை, கோழி போன்ற உயிரினங்களுக்குப் போட்டும். அன்னையர்களுக்குப் பிஞ்சு கைகளால் இரண்டு மூன்று சோறுகள் ஊட்டியும் ஊட்டும் பொழுது கீழே விழுந்து கிடக்கும் சோற்றையோ அல்லது பாத்திரத்தில் உள்ள சோற்றையோ தனது மெல்விரலால் கீழே கொட்டும்படி எடுத்து இரண்டோ அல்லது மூன்று சோற்றுப் பருக்கைகளை வாயில் வைத்து முல்லைப் பூப்போன்று இருக்கும் முன்பற்கள் இரண்டு வெளியே தெரிய புன்முறுவல் பூத்தப்படியே உண்ணுவதை எல்லாக் குழந்தைகளிடத்தும் நாம் காணலாம். இவ்வாறு குழந்தை மகிழ்ச்சியுடன் சிறிதளவு உணவினை உட்கொண்டாலும் அவ்வுணவு அதன் வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்படுகிறது.

பல செல்வங்களைப் பெற்றிருந்தாலும், கூடி உண்ண கோடிச் சுற்றம் இருப்பினும் தத்தித் தவழ்ந்து, தடுமாறி நடந்து, தனது அழகிய சிறிய கையை நீட்டி, உண்கலத்தில் உள்ள உணவை வாயில் போட்டும், கையால் துழாவியும், நெய்யாலான சோற்றை அள்ளித் தன் உடலெல்லாம் வாரி இறைத்துக் கொண்டும் விளையாடும் பிள்ளைகளைப் பெறாதவர்களுக்கு பிறவியே வீணாகும். இக்கருத்தினை,

**''குறு குறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டும் தொட்டும் கல்வியும் துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதர்த்தும்''[78]**

*என்ற பாடல் குறிப்பிட்டுள்ளது.*

*குழந்தைச் செல்வத்தின் இன்றியமையாமையை எடுத்துரைக்கும் இப்பாடலின் வழி குழந்தைகள் உண்ணும் அழகை அறியமுடிகின்றது.*

## குழந்தை வளர்ப்பில் தந்தையின் பங்களிப்பு

*குழந்தை வளர்ப்பில் தாயின் பங்களிப்பு முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். தாயின் பங்களிப்பு அதிகமாக இருந்த போதிலும் குழந்தையையும் தாயையும் பாதுகாத்து வளர்ப்பது தந்தையின் கடமையாகும். குடும்பத்தின் முழுப் பொறுப்பும், சுமையும் குடும்பத் தலைவனுக்கு உரியதாய் சங்க இலக்கியம் குறிப்பிட்டுள்ளது.*

**''ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே**
**சான்றோனாக்குதல் தந்தைக் கடனே''[79]**

*என்ற பாடலடிகளின் மூலம் சங்க காலத்தில் தாய்க் குழந்தையைப் பெற்று அவற்றை பேணிக்காப்பது கடமையாக இருந்தது. குழந்தையைச் சிறந்த முறையில் எல்லோரும் விரும்பும் வண்ணம் சான்றோனாக கல்வி கேள்விகளிலும், வீரத்திலும் சிறந்தவனாக வளர்ப்பது தந்தையின் கடமை என்று ஒரு தாய் கூறுவதிலிருந்து குழந்தை வளர்ப்பில் தந்தையின் முக்கியத்துவத்தை அறிய முடிகிறது.*

*தாயையும், சேயையும் விட்டு நீங்காது தலைவன் மகிழ்ந்திருக்கும் காட்சியை சங்க இலக்கியத்தின் பல பாடல்களில் காணலாம்.*

**''மறி இடைப்படுத்த மாண்பினைப் போல**
**புதல்வனை நடுவணன் ஆக, நன்றும்**
**இனிது மன்ற அவன் கிடக்கை''[80]**

*இப்பாடலில், மறியிடைப்படுத்த மாண்பினைப் போலப் புதல்வனை, நடுவே கிடத்தி தாயும் தந்தையும் இருபுறமும் படுத்திருக்கும் காட்சிக்கு இவ்வுலகமும் மேலுலகமும் ஈடாகாது என்று குறிப்பிடுவதன் வாயிலாக குழந்தை வளர்ப்பில் தந்தைக்குரிய பங்களிப்பை அறிந்து கொள்ள முடிகின்றது.*

*மேலும், தாய்த் தன் புதல்வனை அணைத்துப் படுத்திருந்தாள். தலைவன் அவளுடைய புறத்தை அன்புடன் தழுவிப் படுத்திருந்தான் என்பதை,*

**''புதல்வன் கவைகிய மாய் புறமும் முயங்கி**
**நசையினன் வதிந்த கிடக்கை''[81]**

*என்ற பாடலடிகளின் வாயிலாக அறிய முடிகிறது.*

*தந்தை எவ்வாறு தாயையும் குழந்தையையும் அன்புடன் தழுவிப் படுத்திருந்தான் என்பதை இப்பாடல் வெளிப்படுத்துகிறது.*

**''புதல்வற் கவையினன் தந்தை, மென்மொழிப்**
**புதல்வன்தாயே இருவரும் கவைஇயினன்''[82]**

*என்ற பாடலும் குறிப்பிட்டுள்ளமை ஒப்புநோக்கத்தக்கதாகும்.*

*தந்தைப் புதல்வனைத் தழுவிக் கொண்டமையும், மென்மையான மொழியினையுடைய புதல்வனின் தாய் இருவரையும் தழுவிக் கொண்டமையும் புலனாகிறது.*

*தாய் தன் புதல்வனுக்குப் பாலூட்டியதைக் கண்டு தலைவன் அவளது முதுகை மெல்ல அணைத்துக் கொண்டான் என்பதனை,*

**''வாள்நுதல் அரிவை மகன் தலை ஊட்ட**
**தான் அவள் சிறுபுறமும் கவையினன்''[83]**

*இப்பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன. குழந்தைக்குத் தாய் பாலூட்டும் போதும், குழந்தை விளையாடும் போதும், உணவூட்டும் போதும், குழந்தைக்கு பிறவற்றைக் கற்றுக் கொடுப்பதிலும் தாயோடு இணைந்து தந்தை வளர்த்தமை காண முடிகின்றது.*

## குழந்தை வளர்ப்பில் செவிலித் தாயின் பங்கு

*சங்க காலத்தில் குழந்தை வளர்ப்பில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்தவள். செவிலித் தாய் இதனை,*

**''ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்**
**தாயெனப் படுவாள் செவிலியாகும்''[84]**

என்ற தொல்காப்பியரின் கூற்றிலிருந்து செவிலி என்பவள் குழந்தைக்கு இன்னொரு தாய் போன்றவள் என்பதை வெளிப்படுத்துகின்றது.

நன்று, தீது என்று பகுத்தறிய முடியா பருவத்தில் அவற்றைச் சொல்லிக்கொடுத்து வளர்த்தவளாகத் திகழ்கிறாள் செவிலித்தாய் என்பதனை,

**''கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள**
**நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்**
**செவிலிக்குரிய ஆகும் என்ப''[85]**

என்னும் நூற்பாவின் வழி அறியலாம். இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலத்திலும் நல்லவற்றைக் கூறுதலும் அல்லவற்றைக் கடிதலும் செவிலிக்குரிய பண்புகளாக வரையறுக்கப்பட்டுள்ளன.

தலைவிக்குத் தோழியாய்த் திகழ்ந்தாள் செவிலி அத்தகைய செவிலி தலைவியின் திருமண வாழ்க்கைச் சிறப்பாக அமைவதற்கு தலைவியின் களவு வாழ்க்கையின் போது அறத்தொடு நின்றும், கற்பு வாழ்க்கையின் போது வேண்டிய அறிவுரையைத் தலைவன் தலைவிக்கு எடுத்துரைப்பவள். மேலும் அவர்களது குழந்தையை வளர்க்கும் பொறுப்பை பெற்றுத் திகழ்ந்தவள். செவிலி என்பதை,

**''வெறியுற விரிந்த அறுவை மெல்லினைக்**
**புனிறுநாறு செவிலியோடு புதல்வன் துஞ்ச**
**ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணி**
**பசுநெய் கூர்த்த வெண்மை யாக்கைச்**
**சீர்கெழு மடந்தை ஈரிணை பொருத்த''[86]**

எனும் பாடலில் நறுமணம் கமழும் கட்டிலில் அண்மையில் செவிலிக்கு அருகில் புதல்வன் உறங்குகிறான். புதல்வன் பிறந்தமையால் சிறப்பு மிக்க தலைவி வெண்சிறு கடுகு அணிந்து நெய்யாட்டு நிறைவேறிய அண்மைக் காலத்தில் பசிய நெய் விளங்கும் மெல்லிய உடம்புடன் இரு இமைகளும் பொருந்தத் தூங்கிக் கிடந்தாள் என்று விளக்கமளிப்பதை உணரமுடிகிறது.

தலைவன் தலைவி ஆகிய இரு குடும்பத்தார்களும் திருமணத்திற்கு உடன்படாத போது உடன்போக்கு நிகழும். அப்படி உடன்போகிய தலைவியை நினைத்து மனையிலிருந்து புலம்புதல் தாய்க்கு உரியதாகவும், அதுமட்டுமின்றி சுரம் மிகுந்த பகுதிகளுக்குச் சென்று தேடியதாக சங்க இலக்கியம் குறிப்பிட்டுள்ளது. இவற்றால் குழந்தை மீது செவிலித்தாய் கொண்ட பாசம் வெளிப்படுகிறது. மேலும், திருமணமாகி கணவன் வீட்டிற்குச் சென்ற மகள் எப்படி தனது கணவனையும் பிறரையும் உபசரிக்கிறாள் என்பதை செவிலித்தாய்ப் போய்ப்பார்த்து வந்ததற்கான குறிப்பும் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது.

**''முளி தயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம், கழாஅது, உடீஇ,**
**குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்**
**தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்**
**'இனிது' எனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே''**[87]

என்ற பாடலடிகள் இதனை விளக்குகிறது.

நற்றாயின் குழந்தையானது செவிலித்தாயிடமும் பாசத்துடன் இருந்திருக்கிறது என்பதையும், செவிலித்தாய் குழந்தையை மிகுந்த அன்புடனும் அக்கறையுடனும் வளர்த்துள்ளமையை அறியமுடிகிறது. அக்காலத்தில் செவிலித்தாய் செய்த பணிகளைப் போன்றே வீட்டு வேலைக்காரர்களும் குழந்தைகள் காப்பகமும் இக்காலத்தில் குழந்தைகளைப் பெரிதும் பராமரித்து வருவதை தற்போதைய சூழ்நிலையில் காணமுடிகிறது.

### மகப்பேறுக் காலத்தில் தாயும் சேயும்

சங்க காலத்தில் மகப்பேற்றின்போது தாயும், சேயும் சிறப்பாகப் பேணப்பட்டார்கள். இன்றுள்ள அறிவியல் வளர்ச்சியினால் மருத்துவமனையில் குழந்தைகள் பாதுகாக்கப்படுவது போல அன்றும் குழந்தைகளைப் பாதுகாத்துள்ளார்கள். அக்கால மக்களுக்கு பேய், ஆவிகள் ஆகியவற்றின் மீது நம்பிக்கை இருந்துள்ளது, அதிலிருந்து தாயையும் சேயையும் பாதுகாக்க மூலிகைப் பொருட்கள் சிலவற்றைப் பயன்படுத்தியுள்ளனர்.

மகப்பேறு காலத்தில் தாயும் குழந்தையும் தனித்தனியே பாதுகாக்கப் பட்டார்கள். மகப்பேறாகிய தாயிக்கு உறங்க, தோல்வாரினால் கட்டப்பட்ட கட்டில் பயன்படுத்தப்பட்டது. இதனை,

**''சாறுதலைக் கொண்டனைப் பெண் ஈற்று உற்றெனப்**
**பட்டமாரி ஞான்ற ஞாயிற்றுக்**
**கட்டில் நிணக்கும் இழிரினன் கையது''[88]**

**(புறம்.82:1-3)**

*என்ற பாடலடிகளின் வாயிலாக அறியமுடிகிறது.*

*"மகப்பேறுத் தீட்டால் கவர்ந்திழுக்கப்படும் பேய் மற்றும் தீய சக்திகளை நெருங்க விடாதபடி தடுத்துக் காக்கும் 'மாந்திரீக' ஆற்றல் படைத்த இயற்கைப் பொருட்களை அவள் இருக்கும் இடத்தில் தூவினார்கள். இலவங்கனி, வேப்பந்தழை, இமை இழுது (நெய்) ஐயவி (வெண்கடுகு) நறும்புகை ஆகியவை தீய சக்திகளை விரட்டும் தன்மை கொண்டவையாகச் சங்ககாலத்தில் நம்பினார்கள்''[89] என்ற கருத்து பேறுகாலத்தில் தாயினை மிகுந்த கவனத்துடன் பாதுகாத்துள்ளனர் என்பது புலனாகிறது.*

*மணம் மிக்க ஆடை விரித்த மெல்லணை மீது அண்மையில் பிறந்த புதல்வன் செவிலியுடன் உறங்கினான். வெண்கடுகு கலந்து நெய்பூசி, நீராடி உடல் முழுவதும் பசுநெய் வாசம் கூர்ந்த தாய் தனது இமைகளை மூடிப்படுத்திருந்தாள் என்பதை,*

**''புனிறுநாறு செவிலியோடு புதல்வன் துஞ்ச**
**ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்**
**பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச்**
**சீர்கெழு மடந்தை ஈர்இமை பொருந்த''[90]**

*எனும் பாடலடிகள் மகப்பேறான தாய் வெண்கடுகும், நெய்யும் கொண்டு நீராடச் செய்து பாதுகாக்கப்பட்டமை புலனாகிறது.*

*"பிறந்த குழந்தையைத் தீய ஆவிகள் அல்லது பேய்கள் தீண்டி வருந்தாமல் இருக்க வேண்டும் என்பதற்காக ஐயவி (வெண் கடுகு) புதைத்தல் சங்ககாலத் தமிழர் மரபு''[91] என்ற கருத்து ஒப்புநோக்கத்தக்கது.*

*இன்றும் கிராமப்புறங்களில் கற்பினிப் பெண்களும், பாலூட்டும் தாய்களும் வேம்பின் தழை (இலை) அணிந்து வெளியில் செல்கிறார்கள். இது சங்க காலத்தில் இருந்த தீய சக்திகள் குறித்த நம்பிக்கையின் எச்சங்களையே காட்டுகிறது எனலாம்.*

### குழந்தைகளுக்குப் பெயரிடுதல்

*சங்ககால மக்கள் தத்தம் மூதாதையரின் பெயரை தன் குழந்தைகளுக்கு வைப்பதிலிருந்து பழமைப் பெயர்கள் பேணப்பட்ட முறையைக் காணமுடிகிறது. அவற்றின் எச்சமாகத்தான் இன்றும் குழந்தைகளுக்கு குல தெய்வத்தின் பெயரை இடுகின்றனர்.*

*"குழந்தைகளுக்குப் பாட்டன், பாட்டி ஆகியோரின் பெயரை இடுதல் ஒரு மரபாக இருந்தமையால் குழந்தையைப் பேரன் அல்லது பெயர்த்தி என வழங்கும் வழக்கம் தமிழகத்தில் உண்டாயிற்று''*[92] *என்ற கூற்று நோக்கத்தக்கதாகும்.*

*தன் மகனுக்கு தன் தந்தையின் பெயரை இட்டதை,*

**''புணர்ந்த காதலியின் புதல்வன் தலையும்**
**அமர்ந்த உள்ளம் பெரிது ஆகின்றே –**
**அகன் பெருஞ் சிறப்பின் தந்தை பெயரன்**
**முறுவலின் இன்நகை பயிற்றி,**
**சிறுதேர் உருட்டும் தளர்நடை கண்டே''**[93]

*எனும் ஐங்குறுநூற்றுப் பாடல் சுட்டிக்காட்டுகிறது. தன் மகன் மீது கொண்ட அன்பிற்கு இன்னொரு காரணம் அவன் தன் சிறப்பினுடைய தந்தையின் பெயரைக் கொண்டிருத்தல் ஆகும். தலைவனின் குடும்பப் பெருமை வழிவழிப் பெருகும் வண்ணம் தன் மகள் புதல்வனை ஈன்றாள் என்ற பெருமிதம் தோன்றிட அப்புதல்வன் தன் பாட்டன் போலவே அகன் பெருஞ்சிறப்பினாக விளங்கவேண்டும் என்பதற்காக தன்னுடைய பெற்றோர் மற்றும் பாட்டன் பெயரை வைத்துள்ளதை இன்றளவும் காணமுடிகின்றது.*

**''சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே''**[94]

*என்ற பாடலின் அடி தந்தையின் பெயரைத் தன் மகனுக்குச் சூட்டியமையை வலியுறுத்துவதாக அமைந்துள்ளதைக் காண முடிகின்றது.*

### குழந்தையை நாட்டுப்பற்றுடன் வளர்த்தல்

*சங்ககாலத்தை 'வீரயுகம்' என்று குறிப்பிடுவர். அந்த வீரயுகத்தில் வாழ்ந்த மக்கள் போரில் விழுப்புண் பட்டு இறந்தவர்களைத்தான் இம்மண்ணில் பிறந்தவர்களாகக் கருதுவார்கள். அவ்வாறு வீரமரணம் அடையாதவர்களை சமூகம் இழிபிறப்பாய் கருதியதை,*

**''குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**
**ஆளன்று என்று வாளின் தப்பார்''[95]**

எனும் பாடலடி வெளிப்படுத்துகின்றது.

*ஆண் குழந்தைகளை மன வலிமையுடனும், உடல் வலிமையுடனும் போர்க்களத்தில் சென்று பகைவரோடு போரிடுவதற்கும் தக்க பயிற்சியளித்து வளர்த்துள்ளார்கள். பெண் குழந்தைகளை மன வலிமையுடனும் அழகுடனும் வளர்த்து வந்துள்ளார்கள். பெண்கள் போர்க்களத்திற்குச் செல்வது அன்றைய மரபன்று. ஆதலால் பெண் குழந்தைகளுக்குப் போர்களப் பயிற்சியும், போரிடும் வாய்ப்பையும் சங்க கால மக்கள் மறுத்துள்ளனர். பெண்கள் போர்புரிந்ததாக சங்க இலக்கியத்தில் சான்றுகள் இல்லை. ஆண் குழந்தைகள் போர்க்களம் சென்று போர்புரிந்ததற்குச் சான்றுகள் பல காணப்படுகின்றன. இதனை,*

**''பால்கொண்டு மடுப்பவும் உண்ணான் ஆகலின்**
**செறாஅது ஒச்சிய சிறுகோல் அஞ்சியொடு**
**உயவொடு வருந்தும் மண்ணே ! இனியே**
**புகர்நிறம் கொண்டகளிறு அட்டு ஆனான்**
**முன்றாள் வீழ்த்த உரவோர் மகனே,**
**உன்னிலன் என்னும், புண் ஒன்றுஅம்பு**
**மான் உளை அன்ன குடுமித்**
**தோல்மிசைக் கிடந்து புல் அணலோனே''[96]**

*எனும் பாடலடிகள் இளமைக் காலத்தில் வள்ளத்தில் பாலை ஏந்திக் கொண்டு வாயில் வைத்து உண்பிக்கவும் உண்ணாதவன் இப்பொழுது போர்க்களத்தில் யானைகளைக் கொன்று மார்பில் புண்பட்டு வீழ்ந்து கிடந்தான் என்று கூறுவதிலிருந்து ஆண் குழந்தைகள் இளமையிலேயே வீரம் மிக்கவர்களாகத் திகழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.*

*குழந்தைப் பருவத்தில் ஆண்கள் போர்க்களம் சென்று போர் புரிந்ததை,*

**''கிண்கிணி களைந்த கால் ஒண்கழல் தொட்டுக்**
**குடுமி களைந்த நுதல் வேம்பின் ஒண் தளிர்**
**நெடுங்கொடி உழிஞைப் பகைவரோடு மிலைந்து**
**குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி**

**நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிப நின்றேன்**
**யார்கொல் வாழ்க அவன் கண்ணி தார் பூண்டு**
**தாலி களைந்தன்றும் இலளே, பால்விட்டு**
**அயினியும் இன்றயின் றனனே''**[97]

எனும் பாடலில், போர்க்களத்தில் போர்புரிந்த சிறுவன் குழந்தைப் பருவத்தில் அணியும் அணிகலனான ஐம்படைத் தாலியையும் களையவில்லை. பால் உண்பதை விடுத்து உணவு உண்ணத் தொடங்கினான். அதற்குள் போருக்குச் சென்றுவிட்டான் என்ற கருத்தைப் பதிவு செய்கின்றது. இப்பாடலின் மூலம் ஆண் குழந்தையின் வீரம் இளம் பருவத்தில் அறிய முடிகின்றது.

மகன் போர்க்களத்தில் விழுப்புண் பட்டு இறந்து விட்டான். இச்செய்தி கேட்ட தாய் அவனை ஈன்ற பொழுதினும் பெருமகிழ்ச்சியுற்ற செய்தி,

**''வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்**
**களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே''**[98]

என்ற பாடலடிகளில் நாட்டிற்காகத் தன் மகன் உயிர்விட்டான் என்பதைக் கேட்ட தாய்க்கு தான் இந்த மகனைப் பெற்றதற்கான பயனை அடைந்து விட்டோம் என்று நினைத்து மகிழ்வுற்றிருப்பாள். அதைத்தவிர மகன் இறந்ததற்கான வருத்தம் தாயிடம் காணப்பெறவில்லை என்பதை அறிய முடிகின்றது.

**தாயின் வீர செயப் பண்பு**

போரில் தன்மகன் புறமுதுகில் புண்பட்டு இறந்தான் என்ற செய்தியைக் கேட்ட தாய் வெகுண்டாள் அவன் அவ்வாறு இறந்திருப்பின், அவன் பால் உண்ட என் முலையை அறுத்தெறிவேன் என்று கூறி, போர்க்களம் விரைந்தாள். அங்கே தன் மகன் மார்பில் விழுப்புண் பட்டு இறந்து கிடப்பதைப் பார்த்த அந்தத் தாய் பெருமகிழ்ச்சி அடைந்தாள் இதனை,

**''நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென்தோள்**
**முளரி மருங்கின் முதியோள் சிறுவன்**
**புடை அழிந்து மாறினன் என்று பலர் கூற**
**மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயினன் உண்டனன்**
**முலை அறுத்திடுவென், யான் எனச் சினைஇ**

**கொண்ட வாளொடு படுபிணம் பெயரா**
**செங்களம் துழவோள், சிதைந்து வேறு ஆகி**
**படுமகன் கிடக்கை காணூஉ**
**ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே''[99]**

*என்ற பாடல் அடிகளில் தாயின் வீரப் பண்பினை அறிய முடிகின்றது.*

*போர்களத்தில் போர் புரிந்த தன் மகன் போரில் விழுப்புண்பட்டு இறக்கவில்லை என்றெண்ணி தாய் வருத்தமுற்றாள். என்பதனை,*

**''தன் ஓர் அன்ன இளையர் இருப்ப**
**பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்**
**கால்கழி கட்டில் கிடப்பி**
**தூவெள் அறுவை போர்ப் பித்திலதே''[100]**

*என்ற பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. வீரயுகத் தாயிற்குத் தன் மகன் போரில் விழுப்புண்பட்டு இறக்க வேண்டும் என்னும் தாயின் வீரம் மகனுக்கும் ஊட்டப்பட்டுள்ளதை உணர முடிகின்றது.*

*ஒரு பெண் முதல் நாள் நடந்த போரில் தன் தமையனை இழந்தாள், அடுத்த நாள் நடந்த போரில் தன் கணவனை இழந்தாள். இன்றும் போர்ப்பறை கேட்டதை நினைத்து விருப்பமுற்று மயங்கி தனக்கென்று இருக்கும் ஒரு மகனையும் போர்க்களத்திற்குச் செல்லுமாறு கையில் வேல் கொடுத்து அனுப்பினாள் என்பதை,*

**''இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி**
**வேல்கை கொடுத்து வெளிதுவிரித்து உடிஇப்**
**பாறுமயிர்க் குடுமி என்னை நீவி**
**ஒருமகன் அல்லது இல்லோள்**
**செருமுகம் நோக்கி செல்கென விடுமே''[101]**

*எனும் பாடல் குறிப்பிடுகிறது. தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும் சிறுபிள்ளையை போருக்கு அனுப்பி வைக்கும் காட்சியையும் நாட்டிற்காகத் தன் பிள்ளை மீது இருந்த அன்பையும் பொருட்படுத்தாமல் சங்க கால மக்கள் வாழ்ந்திருந்தனர் என்பதை அறிய முடிகிறது.*

*சங்க காலத்தில் குழந்தை வளர்ப்பில் தாய் வீரத்தோடு தன் குழந்தையை வளர்த்துள்ளாள். குழந்தை வளர்ப்பைப் பதிவு செய்துள்ள புலவர்கள் ஒரு கொள்கையை தங்களது பாடலின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்கள். அதாவது, 'பலர் வாழ தான் துஞ்சம்' என்ற கொள்கையை மனதில் கொண்டு போர் என்றால் தங்கள் வீட்டில் இருக்கும் ஆண் பிள்ளைகளைப் பெரியவர், சிறியவர் என்று பாராது போருக்கு அனுப்ப வேண்டும் என்ற எண்ணத்தை மக்கள் மனதில் விதைத்துள்ளார்கள் என்பதை அறிய முடிகின்றது.*

**தாய்க்குப் பெருமைதரும் குழந்தைப் பேறு**

*சங்ககால மகளிர் தம் குழந்தையை மிகுந்த அக்கறையோடு பேணிவளர்த்தார்கள் என்பதை அவர்களின் வளர்ப்பு முறையினைக் கொண்டு அறியலாம். குழந்தை பெறுவதையும், வளர்ப்பதையும் பெரும்பாலானோர் பெரும் தவமாகக் கருதினார்கள். குழந்தையால் சமுதாயத்தில் பெண்ணுக்கு அங்கீகாரம் கிடைத்தது. புதல்வனைப் பெற்றத்தாய் 'புதல்வன் தாய், சிறுவன் தாய், என்று புகழப்பட்டாள்.' குழந்தையைப் பெற்றதால் கடவுளுக்குச் சமமாக பெண் மதிக்கப்பட்டாள். என்பதனை,*

**''கடவுட் கற்பொருகுடிக்கு விளக்காகிய**
**புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்**
**நன்ன ராட்டி''[102]**

*இப்பாடல் அடிகளின் மூலம் அறிய முடிகின்றது. மகனைப் பெற்றதாலே ஒரு பெண் மனைக்கு விளக்கானாள் எனும் கருத்தினை,*

**''ஒண்சுடர்ப் பெண்டிற் செஞ்சுடர் போல**
**மனைக்கு விளக்காயினாள் மன்ற கனைப் பெயல்**
**பூப்பல வணிந்த வைப்பின்**
**புறவுவணி நாயன் புதல்வன் தாயே''[103]**

*என்ற பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன.*

*சிறந்த பிள்ளையைப் பெற்றவர்கள் மறுமையுலக வாழ்விலும் இன்பம் அடைவார்கள் என்ற நம்பிக்கை கொண்டவர்களாகப் பழந்தமிழர் இருந்துள்ளனர் என்பதை,*

**''இம்மை உலகத்து இசையொடு விளங்கி**
**மறுமை உலகமும் மறு இன்று எய்துப**
**செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்**
**சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்**
**பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்**
**வாயே ஆகுதல் வாய்த்தனம் – தோழி''**[104]

*இப்பாடல் சுட்டிக்காட்டுகிறது. குழந்தைப் பேறு பெற்றால் மறுமையிலும் இன்பம் கிடைக்கும் என்ற கருத்தை அறியமுடிகிறது.*

*“மக்களைப் பெற்று வளர்ப்பதில் ஆர்வம் கொண்டிருந்தனர். பழந்தமிழர் குற்றமற்ற அறிவினை உடைய சிறுவரைப் பெற்றவர்க்கு வாழ்வில் ஒரு குறையும் இல்லை அவர்கள் புகழோடு விளங்கி, மறுமையுலக வாழ்வையும் மாசில்லாமல் அடைவார்கள் என்றும் பலரும் பழமொழியாகக் கூறிவந்தனர்''*[105] *என்பர்.*

*பிள்ளைப்பேறு வாய்த்தவர்கள் மணமக்களை வாழ்த்த வேண்டும் என்று சங்ககால மக்கள் நம்பினர். அப்பொழுதுதான் புதிய மணமக்களுக்கும் பிள்ளைப்பேறு கிட்டும் என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்தது. அந்த நம்பிக்கை இன்றளவும் சில பகுதிகளில் தொடர்ந்து வருவதை அறிய முடிகின்றது.*

*முதிய மங்கல மகளிர் நீரையும் பூவையும் முறையாகத் தர, மகனைப் பெற்ற மகளிர் நால்வர், மணமக்களை பெற்ற மகளிர் நால்வர் மணமக்களை வாழ்த்தி நீராட்டிப் பூச்சொரிவதை,*

**''புதல்வற் பயந்த நிதலையவ் வயிற்று**
**வாலிழை மகளிர் நால்வர் கூடிக்**
**கற்பினின் வழாஅ நற்பல உதவிப்**
**பெற்றோற் பெட்கும் பிணையே ஆக''**[106]

*என்ற பாடலில் மகவினைப் பெற்ற மகளிர் மணமக்களை வாழ்த்துவதற்கும் நீராட்டுவதற்கும் உரியவராகப் போற்றப் பெற்றனர் என்பது தெளிவாகிறது.*

### குழந்தைப்பேறு வேண்டி வழிபாடு

*குழந்தைப் பேறு வேண்டி அக்கால மக்கள் இறைவனை வழிப்பட்டுள்ளார்கள். இதனை,*

**''குன்றக் குறவன் கடவுள் பேணி**
**இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்''**[107]

என்ற பாடல் அடிகளில் இல்வாழ்க்கையின் இன்றியமையாதப் பேறாகக் கருதப்பட்ட குழந்தைப் பேறு வாய்க்க குன்றத்தின் கண் வாழ்ந்த குறவன் தன் குடித்தெய்வமான முருகனை வழிபட்டான் என்பதை அறிய முடிகிறது.

குழந்தைப்பேற்றால் ஒரு பெண் ஒருபடி உயர்ந்து தாயாகிறாள். கடவுளால் மட்டுமே ஒரு பொருளைப் படைக்க முடியும் என்ற நம்பிக்கைக் கொண்ட சங்ககால மக்கள் தாயைத் தெய்வமாகக் கருதினார்கள். சமூகத்திலும் பிற மங்கல காரியங்களிலும் அத்தகையத் தாய் முதன்மையிடம் பெற்றுத் திகழ்கிறாள் என்பது தெளிவாகின்றது.

## தொகுப்புரை

- குழந்தையை அன்பு காட்டி வளர்ப்பதில் பெற்றோர்கள் இருவரும் பெரும்பங்கெடுத்துள்ளனர். குழந்தையை இடையிட்டு படுத்து உறங்கிய காட்சிய நம்மிடையே புலப்படுத்துகிறது. குழந்தைக்கு தந்தை, பாட்டன் பெயரை வைத்து மகிழ்ந்துள்ளனர். தலைவன் பரத்தை பொருட்டு பிரிய நினைக்கும் பொழுது குழந்தையை தாய் அடிக்க செல்வது போல பாவனைக் காட்டுகிறாள். அந்நிலையில் தன் குழந்தையை மனைவி அடிக்கும் முன்பாகவே குழந்தையைத் தூக்கிக் கொள்கிறான். பரத்தையிடத்து செல்ல நினைத்த தலைவன் போகாமல் தன் குழந்தையோடு மகிழ்ந்து விளையாடியதை அறிய முடிகின்றது.

- குழந்தைக்கு தாய்ப்பால் கொடுக்கப்படுகிறது. தாய்ப்பால் போதாத நிலையில் கலம்பால் கொடுத்துள்ளனர். நெய் கலந்த உணவினை ஊட்டியதும், ஐந்திணையிலும் செய்யும் தொழிலுக்கு ஏற்றாற்போல் குழந்தைகளுக்கு கொடுக்கும் உணவு மாற்றம் பெறுவதையும் காண முடிகிறது.

- குழந்தைப் பேற்றினால் குடும்பத்தில் மகிழ்ச்சி உண்டாகிறது. குழந்தையைப் பெற்றெடுப்பதனால் தலைவிக்கு சமூகத்தில் பெருமதிப்பும், மகிழ்ச்சியும் கிடைக்கிறது. பரத்தைக் குழந்தையை பெற்று தரும் வழக்கம் இல்லை என்பதனால் பரத்தை பெறும் சிறப்பின்மையினையும் காணமுடிகிறது.

- குழந்தை வளர்ப்பில் பெற்றோர்களுக்கு நிகரான பொறுப்பு செவிலித்தாய்க்கு இருந்துள்ளதைச் சங்க இலக்கியம் எடுத்தியம்புகிறது. குழந்தை பருவம் முதல் வளர்த்தச் செவிலித்தாய் அந்த குழந்தைப் பெரிதானதும் உடன் போக்கு செல்கிறது. அப்போது செவிலித்தாய் தேடிச்செல்வதாகவும், திருமணமான பின்பு கணவனுடன் வாழும் அழகை காணும் வகையில் செவிலித்தாய் விருந்தாளியாகச் சென்று கண்டு மகிழ்வதையும் காண முடிகின்றது.

- சங்க இலக்கியங்களில் குழந்தை வளர்ப்பு என்னும் இவ்வியலின் வாயிலாக குழந்தைகள் பற்றியும், அவர்களின் வயது வரம்பு, வளர்ப்பு முறை, உணவூட்டல், பயிற்றுவித்தல், குழந்தைகளின் அணிகலன்கள், விளையாட்டுகள், செயல்பாடுகள், குழந்தையின் இயல்புகள், குழந்தை வளர்ப்பில் தாய், தந்தை, செவிலித்தாய் ஆகியோரின் பங்களிப்பு இன்றியமையாததாகிறது.

- மகப்பேற்றின் போது தாயும் சேயும் பாதுகாக்கப்பட்ட விதம், குழந்தைக்குப் பெயரிடுதல், குழந்தைகளின் வீரம், தாய்க்கு பெருமை தரும் குழந்தைப் பேறு, குழந்தைப் பேறு வேண்டி வழிபாடு செய்தல் போன்றவை சங்க இலக்கியத்தில் தெளிவாக்கப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்


1. திருக்குறள்.69
2. ஐங்குறுநூறு, பா.401, வரிகள் 1-5
3. புறநானூறு, பா.310, வரிகள் 1-4
4. கலித்தொகை, பா.79, வரிகள் 20-23
5. புறநானூறு, பா.374, அடி.9
6. புறநானூறு, பா.291, அடி.1
7. புறநானூறு, பா.276, அடி.3
8. கலித்தொகை, பா.65, அடி.16
9. ஐங்குறுநூறு, பா.257, அடி.2
10. திருமுருகாற்றுப்படை, பா.அடி.256-270
11. பட்டினப்பாலை, பா.23-24
12. கோதண்டராமன், சங்க அகப்பாடல்களில் உணர்வுப் போராட்டம், ப.61
13. தெசினி, குறுந்தொகை இன்பம், ப.51
14. நற்றிணை, பா.355, வரிகள் 1-2
15. ஐங்குறுநூறு, பா.404, வரிகள் 1-2
16. நற்றிணை, பா.269, அடி.2
17. புறநானூறு, பா.44, அடி.6
18. அகநானூறு, பா.54, வரிகள் 17-19
19. தேசினி, குறுந்தொகை இன்பம், ப.105
20. அகநானூறு, பா.219, வரிகள்.4-7
21. புறநானூறு, பா.250, வரிகள் 7-8
22. மேலது., பா.188, வரிகள் 1-7
23. மேலது., பா.326, வரிகள் 8-10
24. நாற்கவிராசநம்பி, நம்பியகப்பொருள், நூ.18
25. புறநானூறு, பா.389, வரிகள் 3-7
26. நாற்கவிராசநம்பி, நம்பியகப்பொருள், நூ.
27. கலித்தொகை, பா.111, வரிகள் 1-2
28. நாற்கவிராச நம்பி, நம்பியகப்பொருள், நூ.22
29. நற்றிணை, பா.331, வரிகள் 4-5
30. அகநானூறு, பா.60, வரிகள் 3-6

31. நாற்கவிராசநம்பி, நம்பியகப்பொருள், நூ.16
32. மேலது., நூ.
33. நற்றிணை, பா.97, வரிகள். 6-9
34. அகநானூறு, பா. 89, வரிகள்.1-2
35. ஐங்குறுநூறு, பா.49, வரிகள் 1-2
36. புறநானூறு, பா.183, வரிகள் 2-3
37. கலித்தொகை, பா.81, வரிகள் 11-15
38. திருக்குறள்.66
39. ஐங்குறுநூறு, 408, வரிகள் 1-4
40. சாமி, சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழ்ப்பண்பாடும்,ப.63
41. குறுந்தொகை, பா.161.அடி.3
42. கலித்தொகை, பா.81, வரிகள் 3-6
43. ஐங்குறுநூறு, பா.442, அடி.5
44. நற்றிணை, பா.269, அடி.1
45. தெசினி, குறுந்தொகை இன்பம், ப.8
46. கலித்தொகை, பா.85, வரிகள் 1-17
47. சாமி. சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.99
48. தொல்காப்பியம், பொருளதிகாரம்
49. கலித்தொகை, பா.82, வரிகள் 10-13
50. அகநானூறு, பா.16, வரிகள் 9-14
51. மேலது., பா.66, வரிகள் 7-13
52. கலித்தொகை, பா.80, வரிகள் 22-26
53. மேலது., பா.81. வரிகள் 35-37
54. குறுந்தொகை, பா.359, வரிகள் 1-6
55. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.92
56. அகநானூறு, பா.66, வரிகள், 17-21
57. கலித்தொகை, பா.82, வரிகள், 24-25
58. புறநானூறு, பா.310, வரிகள் 1-2
59. மேலது.,பா.160, வரிகள் 14-18
60. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ.145

61. கலித்தொகை, பா.86, வரிகள் 11-212
62. புறநானூறு, பா.100, வரிகள், 5.11
63. குறுந்தொகை, பா.397, வரிகள் 4-5
64. தெசினி, குறுந்தொகை இன்பம், ப.98
65. அகநானூறு, பா.16, வரிகள் 1-5
66. கலித்தொகை, பா.80, வரிகள் 14-15
67. புறநானூறு, பா.92, வரிகள், 1-3
68. கலித்தொகை, பா.81, வரிகள் 14-15
69. நற்றிணை, பா.221, வரிகள், 7-13
70. மதுரைக்காஞ்சி, பா.461-463
71. அகநானூறு, பா.16, வரிகள் 1-3
72. கலித்தொகை, பா.84, வரிகள் 10-11
73. மேலது., பா.70, வரிகள் .11-12
74. திருக்குறள், 66
75. ஐங்குறுநூறு, பா.424, வரிகள் 2-4
76. மேலது., பா.390, வரிகள் 3-5
77. மேலது., பா. 85, வரிகள் 3-5
78. புறநானூறு, பா.188, வரிகள் 3-5
79. மேலது., பா3.12, வரிகள் 1-2
80. ஐங்குறுநூறு, பா.401, வரிகள் 1-3
81. மேலது., பா.402, வரிகள் 1-2
82. மேலது., பா.409, வரிகள் 1-2
83. மேலது., பா.404, வரிகள் 1-2
84. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ.122
85. மேலது., நூ.151
86. நற்றிணை, பா.40, வரிகள் 5-9
87. குறுந்தொகை, பா.167, வரிகள் 1-6
88. புறநானூறு, பா.82, வரிகள் 1-3
89. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும், தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.92
90. நற்றிணை, பா.40 வரிகள் 4-6

91. இல. தாணம்மா., சங்க இலக்கியத்தில் மலர்கள், ப.129

92. சாமி. சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர்பண்பாடும், ப.94

93. ஐங்குறுநூறு, பா.403, வரிகள் 1-5

94. நற்றிணை, பா.40, அடி.12

95. புறநானூறு, பா.74, வரிகள் 1-2

96. மேலது., பா.77, வரிகள் 1-8

97. மேலது., பா.77, வரிகள் 1-8

98. மேலது., பா.277, வரிகள் 2-4

99. மேலது., பா.278, வரிகள் 1-9

100. மேலது., பா.286, வரிகள் 2-5

101. அகநானூறு, பா.137, வரிகள் 1-57

102. மேலது., பா.5, வரிகள் 22-24

103. ஐங்குறுநூறு பா.405, வரிகள் 1-4

104. அகநானூறு, பா.66, வரிகள் 1-6

105. சாமி. சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.191

106. நற்றிணை, பா.39, வரிகள் 1-4

107. ஐங்குறுநூறு, 257, வரிகள் 1-2

# இயல் - 3

# குழந்தை விளையாட்டுக்கள்

காதலையும் வீரத்தையும் போற்றும் சங்க இலக்கியத்தில் மனித வாழ்க்கையோடு தொடர்புடைய பண்பாட்டுக் கூறுகளும் இடம்பெற்றுள்ளன. குழந்தைகளும் அவர்களது விளையாட்டுக்களையும் பிரித்தறிய முடியாதளவிற்கு நெருங்கியத் தொடர்புடையவைகளாக விளையாட்டுகள் விளங்குகின்றன. குழந்தைகள் மனமகிழ்வுக்காகவும் பொழுது போக்கிற்காகவும் விளையாடினாலும் அவ்விளையாட்டுகள் அவர்களது உடல் நலம் மனநலம் பேணுவதில் இன்றியமையாததாகவும் அமைந்து விடுகிறது. அத்தகைய குழந்தைகளின் விளையாட்டு தோற்றம், விளையாட்டுகளின் இலக்கணம், விளையாட்டுக்குறித்து அகராதி தரும் வரையறை, விளையாட்டைப் பற்றிய அறிஞர்களின் விளக்கம், சங்க இலக்கியத்தில் திணை நிலைக்குடிக் குழந்தைகள் மற்றும் செல்வக் குழந்தைகளின் விளையாட்டுகள் பற்றி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

**விளையாட்டு – தோற்றம்**

மனிதன் தோன்றிய பொழுதே விளையாட்டும் தோன்றிவிட்டது எனலாம். மனித வரலாற்றின் தொடக்கக் காலத்தில் இயற்கையுடனும் விலங்குகளுடனும் போராட வேண்டியிருந்தது. மனிதன் தன்னைக் காத்துக் கொள்வதற்காக ஓடினான், தாண்டினான், நீந்தினான், மரம் ஏறினான், கையில் கிடைத்தவற்றை வைத்துக் கொண்டு போராடினான். நாடோடி வாழ்க்கையை விட்டுவிட்டு நிலையான வாழ்க்கையை மேற்கொண்ட போது அவனது வீரத்தை வெளிப்படுத்த வேண்டியதாயிற்று. “வீரத்தோடு மனமகிழ்ச்சியும் இணைய விளையாட்டுகள் தோன்றலாயின. வீரத்தை வளர்க்க, பயத்தை விரட்ட, நம்பிக்கையை ஊட்ட, நண்பர்களைப் பெருக்க, பொழுதுபோக்கை வரவேற்க, முரண்பாட்டை உணர்த்த, வாழ்க்கையினையும் தொழிலினையும் எதிரொலிக்க, போலச் செய்ய எனப் பல நிலைகளில் விளையாட்டுகள் தோன்றலாயின’’[1] என்பர். இவற்றிலிருந்து விளையாட்டுகளின் தோற்றம் பல நிலைகளில் அமைந்திருப்பதை அறியமுடிகிறது.

### விளையாட்டு – சொற்பொருள் விளக்கம்

விளையாட்டு என்ற சொல்லும், அது தொடர்பான செய்திகளும் தமிழின் தொன்மை இலக்கண நூலாகிய தொல்காப்பியம்,

**''செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்று**
**அல்லல் நீத்த உவகை நான்கே''[2]**

என்ற நூற்பாவில் கூறுகிறது. உவகை என்னும் மெய்ப்பாடு தோன்றுவதற்குரிய நான்கு நிலைகலன்களைக் கூறுமிடத்து விளையாட்டையும் ஒன்றாகத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இன்பத்தை ஏற்படுத்துவது விளையாட்டின் நோக்கமாகும். இவற்றிலிருந்து மன மகிழ்ச்சியூட்டும் ஒரு செயல் விளையாட்டு என்பது தெளிவாகிறது. ஆங்கிலத்தில் ( [redacted] வழக்கில் உள்ளன. தமிழில் ஆடல், ஆட்டு, ஆடு, விளையாட்டு போன்ற சொற்கள் வழங்கப் பெறுகின்றன. ஆடு என்னும் வினைச்சொல்லோடு ஆல் எனும் தொழிற்பெயர் விகுதியைச் சேர்க்க ஆடல் என்னும் பெயர்ச்சொல் தோன்றுகிறது. இது விளையாட்டு என்ற பொருளில் ஆளப்படுகிறது.

விளையாட்டு காலந்தோறும் முக்கியத்துவம் பெற்று வருகின்றது. குழந்தைகளுக்கு விளையாட்டு என்பது இன்றியமையாத ஒன்றாகும்.

**''ஓடி விளையாடு பாப்பா – நீ**
**ஓய்ந்திருக்க லாகாது பாப்பா**
**கூடி விளையாடு பாப்பா – ஒரு**
**குழந்தையை வையாதே பாப்பா''[3]**

என்று பாரதியாரும் குழந்தைகளின் விளையாட்டின் முக்கியத்துவத்தை மனதில் கொண்டு இப்பாடலை பாடியுள்ளமையை ஒப்புநோக்கமுடிகின்றது.

### விளையாட்டு – அகராதி தரும் வரையறை

மனிதனின் உடன் பிறப்பாக அமைவது விளையாட்டாகும். அத்தகைய விளையாட்டு குறித்த வரையறைகள் அகராதிகளில் பலவாறு கூறப்பட்டுள்ளன. தமிழ்ப்பேரகராதி ( ) [redacted] பொருள்களைக் குறிப்பிடுகிறது. அவை,

**"1. பொழுதுபோக்கிற்குரிய மகிழ்ச்சிச் செயல்**
**2. சிரமமின்றி இலேசாகச் செய்யுந் தொழில்**
**3. வேடிக்கை**
**4. காம லீலை**
**5. கலைத்தொழில் எட்டனுள் பாட நினைத்த வண்ணத்தில் சத்தத்தை விடுகை"[4]**

*போன்றனவாகும்.*

*நா. கதிரைவேற்பிள்ளையின் தமிழ் மொழியகராதி,*

**"விளையாடுதல் – பொழுதுபோக்கல்**
**விளையாட்டு – பொழுதுபோக்கு"[5]**

*என்று குறிப்பிடுகிறது. விளையாட்டு என்பதற்கு கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி.*

- **"(பெரும்பாலும் வெற்றியை இலக்காக கொண்டு) பொழுது போக்கிற்காகவும் திறமையை வெளிப்படுத்தும் விதமாகவும் நிகழ்த்தப்படும், குறிப்பிட்ட விதிமுறைகளுக்கு உட்பட்ட செயல்பாடு, ஆட்டம்**
- **குழந்தைகள், சிறுவர்கள் போன்றோர் மகிழ்ச்சியுடன் ஈடுபடும் (ஓடுதல், பொம்மைகளுடன் நேரத்தைக் கழித்தல் போன்ற) செயல்கள்**
- **வேடிக்கையாகச் செயல்படுவது**
- **குறும்பு"[6]**

*என நான்கு பொருள்களைச் சுட்டுகிறது.*

### விளையாட்டு குறித்து அறிஞர்களின் விளக்கம்

*அறிஞர்கள் பலர் விளையாட்டு குறித்து பலவிதமாக விளக்கம் தந்துள்ளனர். "விளையாட்டு அதன் செயல்பாட்டிலேயே அமைதி, ஆறுதல், இன்பம் தருவது"[7] என்பர்.*

*விளையாட்டென்பது,* **"***மகிழ்ச்சி உணர்ச்சியோடு தொடங்கி, மகிழ்ச்சி உணர்ச்சியாக நிகழ்ந்து, மகிழ்ச்சி உணர்ச்சியோடு முடிவது"[8] என்று குறிப்பிடுவர்.*

விளையாட்டை வரையறுப்பது கடினம் என்பதை, "விளையாட்டு என்ற சொல்லானது என்ன பொருளைத் தரும் என்றுப் பகுத்துப்பார்க்கக் கூடிய அக்கணத்திலேயே அதை விளக்குவதும் எவ்வளவு கடினமானது என்பதை உணரமுடிகிறது.''[9] என்ற கூற்றிலிருந்து அறியலாம். "இன்பம் விளைவிக்கும் ஆட்டம்''[10] என்றும் குறிப்பிடுவர்.

"விளையாட்டு என்பது ஒரு செயல், அதில் மனநிறைவு என்பது ஒரு பகுதி, தன் ஆற்றலை வெளிப்படுத்தும் ஒரு பகுதியே விளையாட்டு''[11] என்பர்.

"விளையாட்டு என்பது வாழ்க்கைக்கு பயிற்சியளிக்கும் களமெனக் கூறலாம்.''[12] என்பர்.

"உடல்திறன், அறிவுத்திறன் வளர்ச்சிக்கு உணவு முக்கிய இடத்தை வகிக்கிறது. நல்ல ஊட்டச் சத்துள்ள உணவு தேவைக்கேற்ப உண்ணும் பொழுது விளையாட்டுத் துறையிலும் ஒளிவிட முடிகிறது''[13] என்பர். சுவர் இருந்தால் தான் சித்திரம் வரைய முடியும் என்பதற்கேற்ப உடல்திறன் சரியாக இருந்தால் தான் விளையாட்டுத்துறையிலும் சிறப்படைய முடியும் என்பதை அறிய முடிகிறது.

"விளையாட்டென்பது, சிரமமின்றி இலேசாகச் செய்கிற, வேடிக்கையான, மகிழ்ச்சி நிறைந்த செயல்''[14] என்பர். அறிஞர்களின் கூற்றுகளிலிருந்து விளையாட்டுகள் பொழுதுபோக்கிற்கு மட்டுமின்றி உடல்நலம், மனநலம், பேணுபவையாகவும் அமைந்துள்ளன என்பதை அறிய முடிகிறது.

**விளையாட்டு – வகைப்பாடு**

**''கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு''[15]**

என்ற நூற்பாவின் வாயிலாக நீர் விளையாட்டு, நில விளையாட்டு ஆகிய இருவகைப்பட்ட விளையாட்டுகள் இருந்தமையை அறியமுடிகிறது.

"விளையாட்டுகளைப் பொதுவாக அக விளையாட்டுகள் ( ) என்றும் புற விளையாட்டுகள் ( ) என்றும் பிரிக்கலாம்''[16]

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் சிறாரின் விளையாட்டுகள் பொழுது போக்காக அமைவதுடன் அவர்களது மனம், அறிவு, மற்றும் உடல் வளர்ச்சியில் சிறப்பிடம் பெறுகிறது. "சிறுவர் சிறுமியரின் விளையாட்டுகள் அவர்தம் உளப்பாங்கினையும், இயல்பினையும் வெளிப்படுத்துகின்றன''[17] என்பர் ச.சிவகாமி.

*சங்ககாலத் தமிழர் வாழ்வில் விளையாட்டுகள் முக்கிய இடம் பெற்றிருந்தன. குழந்தைகள் விளையாடுவதற்கு விளையாட்டுப் பொருட்களையும் பதுமைகளையும் பயன்படுத்தியுள்ளார்கள் என்பதை அறிய முடிகிறது. பதுமைகள், குழந்தைகளின் விருப்பத்திற்கும் சமுதாயத்தில் அக்குழந்தைகளின் பெற்றோரின் தகுதிக்கும் ஏற்றவாறு வேறுபட்டுள்ளன.*

**குழந்தை விளையாட்டுக்கள்**

*விளையாட்டு என்பது அனைத்து வயதினருக்கும் பொதுவான ஒன்றாகத் திகழ்கின்றது. அந்த வகையில் குழந்தைப் பருவத்தினர் விளையாடிய விளையாட்டாக (சங்க இலக்கியம்) சிலவற்றைக் குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியம் குழந்தைப் பருவத்தினர் விளையாடிய விளையாட்டாக,*

**''மாதர் உண்கண் மகன் விளையாட**
**காதலித் தன்இனிது இருந்தனளே''**[18]

*என்னும் அடிகளில் குழந்தைகள் தெருக்களில் விளையாடியதைச் சுட்டுகிறது. மேலும், இப்பாடல் வரிகள் பதிவு செய்துள்ளன.*

**''அகன்பெரு சிறப்பின் தந்தை பெயரன்**
**முறுவலின் இன்றுகை பயிற்றி**
**சிறுதேர் உருட்டும் தளர்நடை கண்டே''**[19]

*எனும் பாடலில் சிறுவர்கள் தேரை உருட்டி விளையாடியதைக் கண்டு தந்தையும், தாயும் மகிழ்ந்திருந்த செய்தியை அறியமுடிகின்றது. நடை பயிலாத குழந்தைகளும் விளையாடியிருந்த செய்தியை,*

**''மாலை முன்றில் குறுங்காற் கட்டில்**
**மனையோள் துணைவி ஆக, புதல்வன்**
**மார்பின் ஊரும் மகிழ்நகை இன்ப''**[20]

*என்ற அடிகள் மாலை நேரத்தில் முற்றத்தில் கட்டிலைக் கிடத்தி மனைவியோடு தலைவன் படுத்திருந்தான் என்றும், புதல்வன் அவனுடைய மார்பில் நடை ஊர்ந்து விளையாடினான் என்பதையும் குறிப்பிடுகின்றது.*

*சிறுவன் ஒருவன் மங்கைப் பருவ பெண்கள் விளையாடிய பந்தினை எடுத்து ஒளித்து விளையாடினான். அதனால் அச்சிறுவன் மீது மங்கையருக்குக் காதல் வந்தமையை குழவிக்கண் தோன்றிய காமப்பகுதி எனும் துறை விளக்குகின்றது.*

**''வரிப்பந்து கொண்டு ஒளித்தாய் வாள்வேந்தன் மைந்தா**
**அரிக்கண்ணி அஞ்சி அலற – எரிக்கதிர்வேல்**
**செங்கோலன் நும்கோச் சினங்களிற்றின் மேல் வரினும்**
**எம் கோலம் தீண்டல் இனி''**[21]

என்னும் பாடலடிகள் வழி குழவிக்கண் தோன்றிய காமப்பகுதித் துறையில் அமைந்துள்ளது. குழந்தைகள் விளையாடிய ஒருவகை விளையாட்டான 'பந்தினை ஒளித்து விளையாடும் விளையாட்டு' இருந்திருப்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

குறவர்களின் குழந்தைகள் யானையோடு விளையாடிய செய்தியை சங்க இலக்கியத்தில் காணலாம்.

**''முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி**
**நறவுமலி பாக்கத்துக் குறமகள் ஈன்ற**
**குறிஇறைப் புதல்வரொடு மறுவந்து ஓடி''**[22]

குறவர்களின் குழந்தைகள் காட்டில் திரியும் யானைகளோடு அச்சமின்றி விளையாடியதை இப்பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

தலைவி தன் கூந்தலில் இருந்த கோதையைப் பறித்துச் செல்லும் விளையாட்டினைத் தன் குழந்தைக்குக் கற்றுக் கொடுத்தாள். அதைப்போன்றே தலைவனின் மார்பில் உள்ள கோதையையும் அறுத்து விளையாடுமாறு கற்றுக் கொடுத்தமையை,

**''ஐய, எம் காதில் கனங்குழை வாங்கி பெயர்தொறும்**
**போதுஇல் வறுங்கூந்தல், கொள்வதை நின்னையாம்**
**ஏதிலார் கண்சாய நுந்தை வியன் மார்பில்**
**தூது தேர் வண்டின் கிளைபாட, விதஇய**
**கோதை பரவு ஆட், காண்குவம்''**[23]

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

குழந்தைகள் சிறுதேரினை உருட்டியும், பந்தினை எடுத்து ஒளித்தும், தந்தையின் மார்பில் ஏறிக் குதித்தும் தாய் தலையில் சூடிய கோதையைப் பறித்தும், தெருக்களில் மண்ணில் விளையாடுவதும் போன்ற பலவகையான விளையாட்டுக்களை விளையாடினர் என்பதை அறியமுடிகின்றது.

### திணைநிலை மற்றும் பிற குடிக்குழந்தைகளின் விளையாட்டுகள்

*சங்க இலக்கிய மரபில் தலைவன், தலைவி மட்டுமின்றி பிற மாந்தர்களாக அந்தந்த நிலப்பகுதிகளில் தொன்றுதொட்டு வாழ்ந்து வருகிற மக்கள் சிறப்பிடம் பெற்றுள்ளார்கள். அவர்கள் வேட்டுவர், குறவர், பரதவர், உமணர், ஆயர், உழவர் என அழைக்கப்பட்டனர். அவர்கள் அகன் ஐந்திணைகளான பாலை, குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் ஆகிய ஐந்திணை பகுதிகளில் வாழ்ந்தார்கள். அகத்திணை மாந்தர் மற்றும் பிறகுடிக் குழந்தைகளின் விளையாட்டுகளை,*

**அ. குறிஞ்சி நில குழந்தைகள்**
**ஆ. முல்லை நில குழந்தைகள்**
**இ. மருதம் நில குழந்தைகள்**
**ஈ. நெய்தல் நில குழந்தைகள்**
**உ. பாலை நில குழந்தைகள்**
**ஊ. கைவினைக்குடிகள் நில குழந்தைகள்**

*என்ற அறுவகைகளில் பகுத்தறியலாம்.*

### அ) குறிஞ்சித்திணை மாந்தர் குழந்தைகளின் விளையாட்டுகள்

*குறிஞ்சி நிலம் என்பது பண்டைத் தமிழகத்தில் பகுத்து அறியப்பட்ட ஐவகைத் திணைகளில் ஒன்றாகும். மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி என அழைக்கப்பட்டது. குறிஞ்சி நிலத்திற்குச் சேயோன் குல தெய்வமாக பண்டைய மக்கள் வழிபட்டனர். குறிஞ்சி நிலத்து ஊர்கள் சிறுகுடி, பாக்கம் என்று அழைக்கப்பட்டது. குறிஞ்சியை "சேயோன் மேய மைவரை உலகமும்"[24] எனத் தொல்காப்பியமும், அகப்பொருள் விளக்கம் "வரையும் அது சேர்ந்த இடமும்"[25] என வரையறுத்துள்ளது.*

*குறிஞ்சி நிலப்பகுதியில் வாழ்ந்த மக்கள் கானக்குறவர்கள் எனப்பட்டார்கள். இவர்தம் குழந்தைகள் மலைப்பகுதியில் வாழுகின்ற விலங்குகளுடன் விளையாடினர்கள். மேலும் தங்களது பெற்றோர் புரிந்த தொழில்சார்ந்த விளையாட்டுகளையும் விளையாடினர். குறிஞ்சித்திணையைச் சார்ந்த குழந்தைகளின் விளையாட்டுகளை எண் வகைகளில் பிரிக்கலாம். அவை,*

- **யானையுடன் விளையாடல்**
- **குதிரைப் பதுமையுடன் விளையாடல்**
- **கவண் எறிந்து விளையாடல்**

- **பறை முழக்கி விளையாடல்**
- **பந்தாடல்**
- **ஊசலாடல்**
- **சிற்றில் செய்து விளையாடல்**
- **புள் ஓட்டல்**

போன்றனவாகும்.

**யானையுடன் விளையாடல்**

குறவர்களின் வாழிடம் மலைப்பகுதியாகும். அவர்களின் சிறுவர்கள் அச்சமின்றி மலைப்பகுதியில் காணப்படும் விலங்குகளுடன் விளையாடினார்கள். பெண்யானையினுடைய கன்றுடன் மலைப்பக்கத்தில் உள்ள ஊருக்குக் குறத்தி செல்கிறாள். அவள் யானையுடன் சென்றதும் அங்குள்ள புதல்வர்கள் கூடி வந்து விளையாடியதை,

**''முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி**
**நறவுமலி பாக்கத்துக் குறமகள் ஈன்ற**
**குறிஇறைப் புதல்வரொடு மறுவந்து ஓடி**
**முன்நாள் இனியது ஆகி''[26]**

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றது.

**குதிரைப்பதுமையுடன் விளையாடல்**

சிறுவர்கள் பனைமடலால் குதிரை செய்து, அதற்கு மணிக்கட்டி, கச்சு அணிவித்து எருக்கம்பூ கண்ணி சூடி, தெருவில் இழுத்து விளையாடினார்கள் என்பதனை,

**''சிறுமணி தொடர்ந்து பெருங்கச்சு நிறீஇ**
**குறுமுகிழ் எருக்கங் கண்ணி சூடி**
**உண்ணா நல்மாய் பண்ணி எம்முடன்**
**மறுகுடன் திரிதரும் சிறுகுறு மாக்கள்''[27]**

என்ற அடிகள் உணர்த்துகிறது. இதனை, பெரியவர்கள் செய்ததாகக் கூறும் மடலேறுதல் வழக்கத்தைப் போல அமைவது ஒப்பு நோக்கத்தக்கது.

**கவண் எறிந்து விளையாடல்**

கவண் விளையாட்டு என்பது சிறுவர்கள் புள் ஓட்டவும், போர்புரியவும் தற்காப்புக்காகவும், சங்ககால மக்கள் பயன்படுத்தும் ஒரு கருவியாகும். 'கைக்கவண்' எனவும் வழங்கப்பட்டது. இவ்விளையாட்டில் பெண்கள் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தனர்.

**''ஏமாய்ப்பினோர்**
**கல் எறியும் கவண் வெரீஇப்**
**புள் இரியும் புகர்ப் போந்தை''**[28]

எனும் பாடலடியில் பரதவச் சிறுவர்கள் கவணில் வைத்து வீசி எறியும் கற்களுக்கு அஞ்சி, பனை மரத்தில் உறையும் பறவைகள் அம்மரங்களை விட்டு நீங்கின என்பது தெளிவாகிறது.

யானை, மூங்கிலை உண்பதற்காக விரும்பி வளைத்தது, தினைப்புனங் காப்பவர் எழுப்பிய கவண் ஒலிகேட்டு அஞ்சி அதனைக் கைவிட்டது. இதனை,

**''ஏனல் காவலர் கவண்ஒலி, வெரீஇக்**
**கானயானை கைவிடு பசங்கழை''**[29]

எனும் பாடல் வழி சிறுவர்கள் கவண் எறிந்து விளையாடி மகிழ்ந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

கானவர் மலையிடத்தே அமர்ந்திருந்த பரண்மீது ஏறி கடிய வேகங்கொண்ட கவணில் சிறிய கல்லை வைத்து எறிந்தனர். அது அம்பு போல விரைந்து சென்று பக்கத்து மலையில் நின்றிருந்த வேங்கையின் பூக்களைச் சிதறச் செய்து தேனை உகுத்தது. பின்னர் பலாவின் பழாத்துள்ளே சென்று தங்கியதை,

**''கடுவிசைக் கவனின் எறிந்த சிறுகல்**
**உடுஉறு கணையின் போகி, சாரல்**
**வேங்கை விரிஇணர் சிதறி, தேன் சிதையூஉ**
**பலவின் பழத்துள் தங்கும்''**[30]

என்ற பாடலடிகள் சுட்டிக்காட்டுகின்றன. மலைப்பகுதியில் வாழும் சிறார்கள் கவண் எறிந்து விளையாடினர். வேட்டைக்காக கவனைப் பயன்படுத்தினர் என தெளியலாம்.

**பறை முழக்கி விளையாடல்**

குறிஞ்சி நிலச் சிறுவர்கள் பறையை முழக்கி விளையாடுவதை புலவர்கள் தம் பாடல்களில் புனைந்துள்ளனர். இதனை,

> **''குறுக்குறுமாக்கள் புகற்சியின் எறிந்த**
> **தொண்டகச் சிறுபறைப் பாணி''[31]**

என்னும் அடிகள் உணர்த்துகிறது. மேலும், சங்க காலத்தில் ஓசைக்காக குழந்தைகளிடம் பலவகையில் கருவிகளைக் கொண்டு இசையைக் கேட்டு மகிழ்ச்சி அடைய இவ்விளையாட்டை விளையாடியுள்ளனர் என்பதையும் அறிய முடிகிறது.

**பந்தாடல்**

குறிஞ்சி நில மகளிர் பந்து எறிந்து விளையாடினர். இளமை வேகத்தால் பந்தினை எறிந்து விளையாடியமயை,

> **''எறிபந்தோடு இகத்தந்தாய் கேள் இனி''[32]**

என்ற பாடலடி விளக்குகின்றது.

மகளிர் பந்தாடி விளையாடியதையும், அப்பந்தினைச் சிறுவன் எடுத்துக் கொண்டு ஓடியதையும்,

> **''கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி**
> **நோதக்க செய்யும் சிறுபட்டி''[33]**

இப்பாடலின் அடிகள் குறிப்பிடுகின்றன. இளமகளிர் பந்தாடி விளையாடியது பார்ப்பதற்கு, கதிர் கொய்த அரிதாளின்கண் இருந்த குருவிகள் எழுவதும் விழுவதுமாய் இன்பமுறச் சிறகை விரித்தாடுதல் போன்று இருந்ததை,

> **''இருவி யிருந்த குருவி வருந்துறப்**
> **பந்தாடு மகளிரிற் படர்தரும்''[34]**

என்ற பாடலடிகள் சுட்டிக்காட்டுவதை அறியமுடிகின்றது.

**ஊசலாடல்**

குறுமகளிர் விரும்பியாடும் விளையாட்டுகளுள் ஊசல் விளையாட்டும் ஒன்று. மகளிர் ஊசலாடி விளையாடியமயை,

**‘‘ஊசல் ஊர்ந்து ஆட, ஒரு ஞான்று வந்தானை’’**[35]

என்ற பாடலடிகளின் வாயிலாக அறிய முடிகிறது.

அழகிய தளிர்களையுடைய அசோக மரத்தினது ஓங்கி உயர்ந்துள்ள கிளையில் கயிற்றகைக் கட்டி இளமகளிர் ஊசலாடி விளையாடுவதனை,

**‘‘தாழ்வு இல் ஓங்கு சினைத் தொடுத்த வீழ்கயிற்று**
**ஊசல் மாறிய மருங்கும் பாய்யுடன்’’**[36]

**‘‘ஓங்கு சினைத் தொடுத்த ஊசல் பாம்பென’’**[37]

என்னும் பாடலடிகள் சுட்டிக்காட்டுகின்றன. ஓங்கி வளர்ந்த மரக்கிளைகளில் ஊஞ்சல் கட்டி ஆடுகின்ற வழக்கம் சங்ககால மக்களிடம் வழக்கத்திலிருந்தமையை அறிய முடிகின்றது.

**சிற்றில் செய்து விளையாடல்**

மணலில் வீடு கட்டி குறுமகளிர் ஆடும் விளையாட்டை இலக்கியத்தில் சிற்றில் இழைத்தல் என்று கூறுவர். சிறுமியர் மணலில் சிற்றில் இழைத்து விளையாதை சிறுவர்கள் காலால் உதைத்துச் சிதைத்ததை,

**‘‘தெருவில் நாம் ஆடும்**
**மணற் சிற்றில் காலின் சிதையா’’**[38]

என்ற பாடலடிகளால் அறிந்து கொள்ளலாம். ஆண், பெண் ஆகிய இரு பாலினத்தாரின் விளையாட்டுகளும் பண்பாட்டுப் பாங்கான மாறுபட்ட இயல்புகளைக் கொண்டு அமைந்துள்ளன என்பது தெளிவாகிறது.

**புள் ஓட்டல்**

குறிஞ்சி நிலத்தின் முக்கிய விளைபொருள் தினை ஆகும். தினைக்கதிர்கள் முற்றி அறுவடைக்குரிய பருவத்தில் கதிர்களைப் பறவைகள் உண்ண வரும். அங்ஙனம் பறவைகளால் பாதிப்பு ஏற்படாதவாறு குறிஞ்சி நிலத்துக் குறு மகளிர் புள் ஓட்டித் தினைப் புனத்தைக் காவல் காத்தனர். இதனைத் தொழிலாக அல்லாமல் பொழுது போக்காகவும், விளையாட்டாகவும் மேற்கொண்டதை,

**‘‘.......................... வரையகச் சிறுதினைச்**
**செவ்வாய்ப் பாசினங் கடீஇயர் கொடிச்சி**
**அவ்வாய்த் தட்டையொடு அவனையாகென**
**ஏயள்மன் பாயும் நுந்தை வாழியர்**
**அம்மா மேனி நிரைதொடிக் குறுமகள்**
**செல்லாயோ.......................’’[39]**

*என்ற பாடலடிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது.*

*தினையின் கதிர்களைக் கிளிகள் கவர்ந்து சென்றன. அதனால் மூங்கிலை அறுத்துச் செய்த தட்டைக் கொண்டு அக்கிளிகளை ஓட்டி விளையாடியதை,*

**‘‘உருளைக்கிரல் சிறுதிணை கவர்தலின் கிளை அமல்**
**பெருவரை அடுக்கத்துக் குரீஇ ஒப்பி’’[40]**

*என்னும் பாடல்களில் எடுத்துரைக்கின்றன.*

*குறிஞ்சித்திணை மாந்தர் தம் குழந்தைகளின் விளையாட்டுக்கள் அத்திணைக்கேற்ற சூழலில் அமைந்துள்ளன. குழந்தைகளின் உடல் ஆரோக்கியத்திற்கும், வலிமைக்கும் அறிவுத்திறனுக்கும் மனமகிழ்ச்சிக்கும் அடிப்படைக் காரணமாக அவர்தம் விளையாட்டுக்கள் அமைந்துள்ளன.*

**முல்லைத் திணை மாந்தர் குழந்தைகளின் விளையாட்டுகள்**

*முல்லை என்பது பண்டைத் தமிழகத்தில் பகுத்து அறியப்பட்ட ஐவகைத்தமிழர் நிலத்திணைகளில் ஒன்றாகும். காடும் காடு சார்ந்த இடங்களும் முல்லை நிலமாகும். செம்மண் பரந்திருத்தலால் முல்லை நிலமானது ‘செம்புலம்’ எனவும் அழைக்கப்பட்டது. இந்நிலம் முல்லை மலரைத் தழுவிப் பெயரிடப்பட்டது.*

**“மாயோன் மேய காடுறை உலகமும்’’[41]**

**‘‘புறவும் அது சார்ந்த இடமும்’’[42]**

*என்று இலக்கண நூல்கள் குறிப்பிடுகின்றன.*

*முல்லைத் திணையில் வாழ்ந்த மாந்தர்கள் ஆயர், இடையர், கோவலர் என அழைக்கப்பட்டனர். அவர்கள் ஆடு, மாடு மேய்த்தலையும் வரகு வேளாண்மையையும் முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தனர். இவ்வாயர்களின்*

குழந்தை விளையாட்டுகள் அவர்களது வாழ்விடங்களைச் சுற்றியே அமைந்திருந்தன. இக்குழந்தை விளையாட்டுக்களை,

- ❖ **வெள்ளோட்டோடு விளையாடல்**
- ❖ **மலர்சூடி விளையாடல்**
- ❖ **சிறுதேர் உருட்டல்**
- ❖ **சிற்றில் செய்தல்**

என பகுத்தறியலாம்.

### வெள்ளாட்டோடு விளையாடல்

முல்லை நிலச் சிறார்கள் வெள்ளாட்டின் குட்டிகள் மீது பாசம் கொண்டிருந்தனர். ஆட்டுக் குட்டிகளுடன் துள்ளிக்குதித்து விளையாடுவது குழந்தைகளுக்கு மனமகிழ்ச்சியையும் உடல் ஆரோக்கியத்தையும் அளித்திருந்தன. முல்லை நிலச் சிறார்கள் தொழிலோடு சேர்ந்த விளையாட்டை ஆடி மகிழ்ந்ததை,

**''புன்தலைச் சிறாரோடு உகளி, மன்றுழைக்**
**கவை இலை ஆரின் அம்குழை கறிக்கும்''[43]**

எனும் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகின்றது.

### மலர் சூடி விளையாடல்

சிறுவர்கள் விளையாட்டுக்களுள் மலர் கொய்தலும் மலர்ச் சூடி விளையாடுதலும் சிறப்பிடம் பெற்றுள்ளது. மலர்களைக் கொய்வதுடன் அவற்றைப் பல வகைகளில் மாலைகளாகத் தொடுத்தும் விளையாடியுள்ளனர்.

இடையர்களின் சிறுவர்கள் ஆடு, மாடுகளை ஓட்டிக்கொண்டு செல்லுகையில் பல மலர்களைச் சூடிக்கொண்டார்கள். இது அவர்கட்கு ஒரு விளையாட்டாக அமைந்துள்ளதை,

**''கொல்லைக் கோவலர் குறும்புனம் சேர்த்த**
**குறுங்காற் குரவின் குவி இணர் வான் பூ**
**ஆடுடை இடைமகன் சூடப் பூக்கும்**
**அகலுள் ஆங்கண் சீறூரேமே,**
**அதுவே சாலும் காமம், அன்றியும்**

**எம் விட்டு அகறிர் ஆயின், கொன் ஒன்று**
**கூறுவல் – வாழியர், ஐய! – வேறுபட்டு**
**இரீஇய காலை இரியின்**
**பெரிய அல்லவோ, பெரியவர் நிலையே''[44]**

*என்னும் பாடலடிகள் சுட்டிக்காட்டுகின்றன.*

**சிறுதேர் உருட்டல்**

*குழந்தைகள் சிறுதேர் உருட்டி விளையாடுவது விளையாட்டு வகைகளில் ஒன்றாகும். சிறுதேர் உருட்டல் என்பது பிந்தைய பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் ஒரு பருவமாக அமைந்துள்ளது. சங்க கால மக்கள் மனையின் முற்றத்தில் சிறுதேர் உருட்டி புன்னகை புரிந்தனர். சிறுவர்களின் கால்கள் நன்கு ஊன்றாததால் தளர்நடையுடன் அச்சிறு தேரினை உருட்டி விளையாடி பயிற்சி பெற்றதை,*

**''புணர்ந்த காதலியின் புதல்வன் தலையும்**
**அமர்ந்த உள்ளம் பெரிதா கின்றே**
**அகன்பெருஞ் சிறப்பின் தந்தை பெயரன்**
**முறுவலி இன்னகை பயிற்றிச்**
**சிறுதேர் உருட்டும் தளர்நடை கண்டே''[45]**

*என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. விளையாட்டாகவும் குழந்தை இருகால்களால் நன்கு ஊன்றி நடை பழகும் பயிற்சியாகவும் இருந்ததுள்ளமை இன்றளவும் உள்ளதை அறிய முடிகின்றது.*

**சிற்றில் புனைதல்**

*முல்லைத் திணையில் வாழ்ந்த இளமகளிர் சிற்றில் புனைந்து விளையாடிய செய்தியை,*

**''முற்று இழை ஏஎர் மடநல்லாய்! நீ ஆடும்**
**சிற்றில் புனைகோ சிறிது''[46]**

**''வரி மணல் முன்துறைச் சிற்றில் புனைந்த**
**திரு நுதல் ஆயத்தார்''[47]**

*என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாம்.*

### மருதத்திணை மாந்தர் குழந்தைகளின் விளையாட்டுகள்

"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்''[48] என்ற தொல்காப்பிய நூற்பா இந்திரனை மருதநிலக் கடவுளாகக் கூறுகிறது.

**''செருமலை வீரரும் திண்ணியாரும் மருதநில மக்களும் மள்ளர் என்ப''[49]**

பிங்கல நிகண்டு மள்ளரை மருதநில மக்களாகக் கூறுகின்றது. மதுரை என்ற பெயர் மருதை என்பதன் மரூஉச் சொல் எனப் பலர் கருதுகின்றனர். மருதநிலத்தைப் பற்றி முழுமையான தகவல்களை தரும் சிற்றிலக்கியம் பள்ளு நூல்கள் ஆகும்.

மருதநிலத்தில் வாழ்ந்த மக்கள் உழவர்கள் எனப்பட்டார்கள். இவர்கள் உழவுத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்தார்கள். உழுது உண்போர் எனவும் அழைக்கப்பட்டார்கள். எளிய வாழ்க்கை முறையை மேற்கொண்டிருந்தனர். மருதநிலக் குழந்தைகளது விளையாட்டுகள் அவர்களது வாழ்விடங்களைச் சுற்றி விளையாடும் விளையாட்டுகளாக அமைந்திருந்தன. அவைகளாவன,

- **வைக்கோற்போர் மீது விளையாடல்**
- **குளவியின் கூட்டைக் கலைத்து விளையாடல்**
- **மாடுகளை மேய்த்து விளையாடல்**
- **எருமையின் முதுகில் ஏறி விளையாடல்**
- **மலரும் மாலையும் சூடி விளையாடல்**
- **ஊசலாடல்**
- **கழங்கு விளையாடல்**

போன்றவையாகும்.

### வைக்கோற் போர் மீது விளையாடல்

உழவரின் சிறுவர்கள் தென்னங்காய்களைக் கொண்டும் வெறுப்புற்ற போது தம் தந்தையருடன் வைக்கோற்போரின் மீது ஏறியும் துள்ளி எழுந்தும் விளையாடினார்கள். பின் குலைகளுடைய பனம் பழத்தைத் தொட முயற்சி செய்து விளையாடினார்கள் என்பதனை,

**''வன்கை வினைஞர் புன்தலைச் சிறாஅர்**
**தெங்குபடு வியன்பழம் முனையின் தந்தையர்**
**குறைக்கண் நெடும்போர் ஏறி விசைத்து எழுந்து**
**செழுங்கோட் பெண்ணைப் பழம்தொட முயலும்''[50]**

என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

### குளவியின் கூட்டைக் கலைத்து விளையாடல்

*கொடியில் உள்ள குளவிகளின் கூட்டைக் கலைத்து சிறுவர்கள் விளையாடினார்கள் என்பதனை,*

**‘‘கடுந்தேறு உறுகிளை மொசிந்தன துஞ்சும்**
**செழுங்கூடு கிளைந்த இளந்துணை மகாஅரின்’’**[51]

*என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.*

### மாடுகளை மேய்த்து விளையாடல்

*உழவரின் சிறுவர்கள் விடியற்காலையில் தொழுவத்தில் உள்ள காட்டெருமையின் பாலைக் கறந்து உண்பார்கள். பின்னர் மாடுகளை ஒட்டிக் கொண்டு வயல்வெளிகளில் மேய்த்ததுடன் அங்குள்ள செடி கொடிகளுடன் விளையாடுவதை,*

**‘‘மன்ற எருமை மலர்தலைக் காரான்**
**இன்தீம் பால்பயம் கொண்மார் கன்றுவிட்டு**
**ஊர்க்குறுமாக்கள் மேற்கொண்டு கழியும்**
**பெரும் புலம் விடியலின் விரும்பிப் போத்தந்து’’**[52]

*என்ற பாடலடிகள் விளக்குகின்றன.*

### எருமையின் முதுகில் ஏறி விளையாடல்

*மருத நிலத்தின் விலங்கு எருமை ஆகும். மருதநிலத்தைச் சார்ந்த குழந்தைகள் அந்நிலத்தில் வாழ்ந்த எருமை மாடுகளை மேய்க்கும் பொழுது கரிய பெரிய முதுகில், ஏறி உட்கார்ந்து விளையாடினார்கள். இதனை,*

**‘‘நகுவரப் பிணைந்த தீரி மருப்பு எருமை**
**மயிர்க் கவின் கொண்ட மாத்தோல் இரும்புறம்**
**சிறுதொழில் மகாஅர் ஏறி’’**[53]

*என்ற பாடலடிகளின் மூலம் அறியலாம்.*

### மலரும் மாலையும் சூடி விளையாடல்

*உழவரின் அழகிய பிள்ளைகள் முள்ளியின் மலரைப் பறித்து, கோரைப் புல்லில் பல்லால் கிழித்த நாரால் அம்மலரை தொடுத்து மாலையைத் தலையில்*

சூட்டியும் தண்டின் சுண்ணத்தைத் தம் மார்பில் அடித்து அப்பிக் கொண்டும் விளையாடினார்கள் என்பதனை,

**‘‘முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்**
**கொடுங்கால் மாமலர் கொய்து கொண்டு அவண**
**பஞ்சாய்க் கோரை மல்லின் சவட்டிப்**
**புணர்நார்ப் பெய்த புனைவு இன் கண்ணி**
**ஈருடை இருந்தலை ஆரச் சூடி**
**பொன்காண் கட்டளை கடுப்பிக் கண்பின்**
**புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்**
**இரும்பு வடித்தன்ன மடியா மென்தொல்**
**கருங்கை வினைஞர் காதல் அம் சிறாஅர்’’**[54]

என்ற பாடலடிகள் தெளிவுப்படுத்துகின்றன.

### ஊசலாடல்

இளம்பெண் கரிய பனைநாரில் திரித்த கயிற்றைப் பிணித்துத் தொங்கவிட்ட ஊசலில் ஏறி ஊசலாடினாள் என்பதை,

**‘‘…………………சில்வளைக் குறுமகள்**
**ஊசல் ஊறுதொழிற் பூசல் கூட்டா’’**[55]

என்ற பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

### கழங்கு விளையாடல்

மருத நிலத்து இளம்பெண் தன் தோழியருடன் கழங்கு விளையாடினாள் என்பதை,

**“கழங்கு ஆடு ஆயத்து அன்று நம் அருளிய’’**[56]

என்ற பாடலடியால் அறியலாம்.

### கைவினைக்குடிகள்

கைவினைஞர்கள் மரம், இரும்பு, பொன், மண், பருத்தி ஆகிய மூலப்பொருட்களைக் கொண்டு பயன்படும்பொருட்களாகிய கருவிகள், அணிகலன்கள் ஆகியவற்றைக் குடிசைத் தொழில் போலச் செய்தார்கள். கைவினைக் குடிகளில் தச்சர், புலைத்தி குழந்தை விளையாட்டுகள் சிறப்புற அமைந்துள்ளன.

## தச்சர் குழந்தைகளின் விளையாட்டுகள்

*தச்சுத் தொழில் செய்யும் குடியில் பிறந்த சிறுவர்கள் இளமையில் விளையாட்டின் வழி தமது தொழிலினை கற்றறிந்தார்கள். நடை பழகும் சிறுவர்களுக்கு உருட்டி மகிழ்தற்கேற்ற 'ஊரா நல்தேர்' எனும் நடைவண்டியைத் தாங்களே புனையுமளவிற்குத் திறன் பெற்றிருந்தார்கள் இதனை,*

**''தச்சச் சிறாஅர் நச்சுப் புனைந்த**
**ஊரா நற்றேர் உருட்டிய புதல்வர்''[57]**

*எனும் பாடலடிகளால் அறியலாம்.*

## புலைத்தி குழந்தைகளின் விளையாட்டுகள்

*பிறரது ஆடைகளை வெளுக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்த பெண் புலைத்தி எனப்பட்டாள். அப்புலைமகள் தனது கறை படிந்த நகங்கள் உடைய விரல்களினால் பூந்துகில்களை நெடிது பிசைந்து வெளுத்த போது அவளது புன்தலைச் சிறார் கூடவே விளையாடியதனை,*

**''பூக்கண் பறைந்த புன்தலைச் சிறாஅரோடு**
**அவ்வரி கொன்ற கறைசேர் வள்உகிர்ப்**
**பசைவிரல் புலைத்தி நெடிது பிசைந்து ஊட்டிய**
**பூத்துகில் இமைக்கும்''[58]**

*என்ற பாடலடிகளால் அறியலாம்.*

## நெய்தல் திணை மாந்தர் குழந்தைகளின் விளையாட்டுகள்

*கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் திணைக்குரிய இடமாகும். "வருணன் மேய பெருமணல் உலகமும்''[59] எனத் தொல்காப்பியமும் "திரையும் அதுசேரும் இடமும்''[60] என நம்பியகப் பொருளும் நெய்தல் திணையைப் பற்றி குறிப்பிடுகின்றது. நெய்தல் நில மக்கள் கொண்கன், சேர்ப்பன், துறைவன், புலம்பன், பரதவர், நுளையர், உமணர் எனப்பட்டனர். பரதவர்கள், நுளையர்கள் மீன்பிடித்தல் மற்றும் உப்பு விளைவித்தல் தொழில்களையும், உமணர்கள் உப்பு விற்கும் தொழிலையும் மேற்கொண்டிருந்தனர்.*

## பரதவர் மற்றும் உமணர் குழந்தைகளின் விளையாட்டுகள்

- கொக்குப் பிடித்து விளையாடல்
- நுங்கை வைத்து விளையாடல்
- மீன்பிடித்து விளையாடல்
- சிற்றில் புனைந்து விளையாடல்
- கடல் நீராடல்
- வண்டுகளைப் போக்கி விளையாடல்
- நண்டு பிடித்து விளையாடல்
- ஊசல் விளையாடல்
- எண்ணி விளையாடல்
- வண்டல் இழைத்து விளையாடல்
- பாவை விளையாடல்
- சிறு சோறட்டு விளையாடல்
- ஆம்பல் பூச்சூடி விளையாடல்
- மணற்குவியலில் மறைத்தாடல்
- குரங்குகளுடன் விளையாடல்

### கொக்குப் பிடித்து விளையாடல்

*பரதவச் சிறுவர்கள் கொழுமீனுக்காக இட்ட வலையில் சில சமயங்களில் கொக்கு அகப்பட்டுக் கொள்ளும். அவ்வாறு அகப்பட்ட கொக்கினை வைத்துக் கொண்டு விளையாடியதை,*

**''குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை**
**இருசோற் றள்ளல் நாட்புலம் போகிய**
**கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்**
**நுண்ஞான் அவ்வலைச் சேவல் பட்டென''**[61]

*என்னும் பாடலடிகள் தெளிவுப்படுத்துகின்றன.*

### நுங்கை வைத்து விளையாடல்

*மீன்வேட்டைக்குச் செல்லுகின்ற தந்தைகளுடன் சிறார்கள் செல்ல விரும்பினர். ஆனால் அச்சிறுவர்களை உடனழைத்துச் செல்ல விருப்பமின்றி வீட்டிலேயே விட்டுவிட்டுச் சென்றனர். தமது முயற்சி வீண்போயிற்றே எனக் கருதிய சிறுவர்கள் அழுதனர். இனிய கண்ணையுடைய பனை நுங்கை அவர்களிடம் கொடுத்து அவ்வழுகையை மாற்றினர் தாயார், பிள்ளைகள் அந்த நுங்கினை வைத்துக் கொண்டு விளையாடினார்கள் என்பதை,*

**‘‘கொடுஞ்சுறா எறிந்த கொடுத்தாள் தந்தை**
**புள்இமிழ் பெருங்கடல் கொள்ளான் சென்றென**
**மனையழுது ஒழிந்த புன்தலைச் சிறாஅர்**
**வினையதின் முயன்ற தீங்கண் நுங்கின்**
**பனை கொள்’’[62]**

*என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.*

**மீன்பிடித்து விளையாடல்**

*பரதவர்களின் சிறுவர்கள் தந்தையரைப் போலவே தாங்களும் மீன்பிடிக்க வேண்டும் என்ற ஆவலில் கடலில் சென்று மீன்பிடித்து விளையாடினார்கள். இதனை,*

**‘‘அரிவலைப் பரதவர் கருவினைச் சிறாஅர்**
**மரல் மேற்கொண்டு மான்கணம் தகைமார்**
**வெந்திறல் இளையவர் வேட்டு எழுந்தாங்கு**
**திமில் மேற்கொண்டு திரைச்சுரம் நீந்தி**
**வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கென்டி**
**நிணம்பெய் தோணியர் இருமணல் இழிதரும்’’[63]**

*எனும் பாடல் அடிகள் தந்தையர்களின் தொழிலை சிறார்களும் விரும்பி செய்ய முற்படுவதை வெளிக்கொணர முடிகின்றது.*

**சிற்றில் புனைந்து விளையாடல்**

*பரதவர்களின் இளம்பெண்கள் கடற்கரைச் சோலையில் கூடிச்சிற்றில் புனைந்து சிறுசோறு குவித்தும் விளையாடினார்கள் என்பதை,*

**‘‘தொடலை ஆயமொடு கடல் உடன் ஆடியும்,**
**சிற்றில் இழைத்தும், சிறு சோறு குவைஇயும்’’[64]**

*என்ற பாடலடியால் அறியலாம்.*

*மேலும், பரதவர்களின் இளம்பெண்கள் இழைத்து விளையாடிய சிற்றிலை அலைகள் மோதி அழித்ததை,*

**‘‘மூத்தோர் அன்ன வெண்தலைப் புணரி**
**இளையோர் ஆடும் வரிமனை சிதைக்கும்’’[65]**

*என்ற பாடலடிகள் எடுத்துக்காட்டுகின்றன.*

*பரதவர்களின் சிறுமிகள் மணலில் சிற்றில் புனைந்து விளையாடியதை,*

**''அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇ**
**வரி புனை சிற்றில் பரி சிறந்தது ஓடி''[66]**

*எனும் பாடலில் அறியமுடிகிறது.*

*சங்க காலத்தில் பெண்குழந்தைகள் சிற்றில் இழைத்தல், சிறுசோறு அருதல் போன்ற விளையாட்டுக்களை விளையாடியுள்ளனர். இவ்விளையாட்டுகள் பின்னர் மனையுறை வாழ்க்கைக்குத் தேவையாகிறது. தமிழர்தம் பண்பாட்டினைக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.*

**கடல் நீராடல்**

*பரதவர்கள் கடலும் கடல் சார்ந்த இடங்களிலும் வாழ்ந்ததனால் சிறுவர், சிறுமியர்களும் கடலில் விளையாடுவதை பொழுது போக்காகக் கொண்டிருந்தனர். அலைகள் உயர்ந்து வரும் கடலில் துணிச்சலுடன் பரதவர்களுடன் சிறுமியர்கள் விளையாடினார்கள் என்பதனை,*

**''கடலாடு வியலிடைப் பேரணிப் பொலிந்த**
**திதலை அல்குல் நலம் பாராட்டிய''[67]**

*என்ற பாடலடிகள் வழி அறியபடுகின்றது.*

**வண்டுகளைப் போக்கி விளையாடல்**

*கடல் கொணர்ந்து ஒழித்த மணற்பரப்பை அடுத்த கழிக்கரை சூழ்ந்த சோலையிடத்துக் காணப்படும் மலரின் நுண்ணிய தாதுக்களில் படியும் வண்டினங்களைப் போக்கிப் பரதவப் பெண் விளையாடியதற்கு,*

**''நீயும் யானதும் நெருநற் பூவின்**
**நுண்தா துறைக்கும் வண்டினம் ஒப்பி**
**ஒழி திரைவிரித்த வெண்மணல் அடைகரைக்**
**கிழிசூழ் கானலாடிய தன்றி''[68]**

*என்ற அடிகள் சான்றாக அமைகின்றன.*

**நண்டு பிடித்து விளையாடல்**

கடற்கரை ஓரங்களில் நண்டுகள் மேய்ந்து கொண்டிருக்கும். அவற்றைப் பிடித்துப் பரதவப் பெண்கள் விளையாடினார்கள். பரதவப் பெண்கள் புள்ளிகளை உடைய இளைய நண்டுகளுடன் விளையாடும் போது நண்டு ஒட அதனைத் துரத்த முடியாதவளாகிக் களைப்புற்றதை,

**''மாசு போகப் புனல் படிந்தும்**
**அலவன் ஆட்டியும்''[69]**

**''ஆடவரி அலவன் ஒடுவயின் ஆற்றாது**
**அசைஇயுள் ஒழிந்த வசைதீர் குறுமகட்கு''[70]**

**''இன் இணர்ப் புன்னை அம் புகர் நிழல்**
**பொன்வரி அலவன் தூட்டிய ஞான்றே''[71]**

என்ற பாடலடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

பரதவ பெண்பால் குழந்தைகள் கைவளையல்கள் நெகிழ்ந்தோட நண்டுகளை ஆட்டி விளையாடினாள். அதனால் அவளது காற்சிலம்பானது உடைந்து போயிற்று என்பதை,

**''சிலவிளங்கு எல்வளை நெகிழ**
**அலவன் ஆட்டுவோள் சிலம்பு நெமிர்ந்து எனவே''[72]**

என்ற அடிகளால் அறியலாம்.

சிறுமிகள் கடற்கரையின் ஈரமான வளைகளில் மேயும் நண்டுகளைக் கண்டு மகிழ்ந்தும், அவற்றை ஓட்டி விளையாடி உடல் தளர்ந்தும் இளைப்பாறினார்கள் என்பதனை,

**''சேர்ப்பு ஏர்எர் அளை அலவன் பார்க்கும்**
**சிறு விளையாடலும்''[73]**

**''திணிமணல் அடைகரை அலவன் ஆட்டி**
**அசையினள் இருந்த ஆயதொடிக் குறுமகள்''[74]**

எனும் பாடலடிகளில் தெளிவுறுத்துகின்றன.

*பரதவ மகளிர்களும், குழந்தைகளும் தம் சூழலுக்குகேற்ப விளையாட்டை ஆடி மகிழ்ந்தனர் என்பதை உணரமுடிகின்றது. வளையினின்று வெளியே வந்து விளையாடித் திரியும் நண்டுகளை அலைகள் திரண்டு வந்து அலைக் கழிக்கும். அதைப் பார்த்து மகிழ்ந்து பரதப் பெண்கள் விளையாடியதை,*

**''உவறுநீர் உயர் யக்கர அவலன் ஆரி அளைவர்''**[75]

*என்ற பாடலடி எடுத்துரைக்கின்றது.*

### ஊசல் விளையாடல்

*பரதவப் பெண்கள் உப்பங்கழிக் கரையில் உள்ள தாழையின் விழுதால் ஆன கயிற்றால் ஞாழல் மரத்தின் உயர்ந்த கிளையில் கட்டி ஊசல் ஆடினார்கள். தாழை விழுந்தாலும் சுறா மீன் கொம்பைக் கொண்டு பாகை அமைத்தும் ஊசல் ஆடினார்கள் என்பதனை,*

**''ஞாழலோங்கு சினைத்தொடுத்த கொடுங்கழித்**
**தாழைகளில் கயின் தூங்கி''**[76]

**''தாழாது உறைக்கும் நடலைந்த தன்தாழை**
**வீழ் ஊசல் தூங்கப் பெறின்''**[77]

*என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.*

### எண்ணி விளையாடல்

*பரதவர்களின் சிறுமியர்கள் பொருட்களை எண்ணி விளையாடுவதை ஒரு விளையாட்டாக கொண்டிருந்தனர். ஓரிடத்தில் அதிக எண்ணிக்கையிலுள்ள பொருட்களைக் கண்டால் ஒன்று, இரண்டு, மூன்று என்றவாறு எண்ணி வியந்து பொழுது போக்குவது அவர்களின் இயல்பாக அமைகிறது. அவ்வகையில், உப்பு வண்டிகள், படகுகள், யானைகள், குதிரைகள் ஆகியனவற்றை எண்ணி விளையாடுவதை சங்க இலக்கியங்கள் பதிவு செய்கிறது. சான்றாக,*

*மீன்களை உண்ணவரும் பறவைகளை விரட்டும் சிறுமியர் உப்புக்குவியல் மீதேறி என் தந்தையின் பங்கு இது, படகு இது என்று மீன் வேட்டைக்குச் சென்று சுற்றத்தாரின் வலிய படகுகளை எண்ணி விளையாடியதை,*

**''புலவு மீன் உணங்கல் படுபுள் ஒப்பி**
**மடநோக்கு ஆயமொடு உடன் ஊர்பு ஏறி**

**எந்தை திமில்இது, நுந்தை திமில் என**
**வளைநீர் வேட்டம் போகிய கிளைஞர்**
**திண்திமில் எண்ணும் தண்கடற் சேர்ப்ப''[78]**

*எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றது.*

**''பீரை நாறிய கரையிவர் மருங்கின்**
**சத்திலைக் குப்பை ஏறி உமணர்**
**உப்பு ஓய் ஒழுகை எண்ணுப மாதோ''[79]**

*என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. சங்ககால மக்கள் அறிவு சார்ந்த விளையாட்டை விளையாடுவதற்கு பாடல்கள் சான்று பகர்கின்றன.*

**வண்டல் இழைத்து விளையாடல்**

*பரதவர்களின் இளமகளிர் வண்டல் இழைத்தும் வண்டற்பாவை செய்தும் சிறுமியர்கள் விளையாடினர் என்பதனை,*

**''இளையோர் வண்டல் அயரவும்''[80]**

**''வண்டல் ஆயமொடு உண்டுறைத் தலைஇ''[81]**

**''வண்டற்பாவை வரிமணல் அயர்ந்தும்''[82]**

*என்ற பாடலடிகள் மூலம் தெரிந்து கொள்ளமுடிகின்றது.*

**பாவை விளையாடல்**

*பரதவர்களின் வாழ்விடங்கள் கடற்கரை ஓரத்தில் அமைந்திருப்பதால் பரதவச் சிறுமியர்கள் கடற்கரை மணலில் பாவை செய்து விளையாடினார்கள்*

**''மாதர் மடநல்லார் மணலின் எழுதிய**
**பாவை சிதைத்தது எனஅழ, ஒரு சார்''[83]**

**''உறாஅ வறுமுலை படாஅ**
**உண்ணாப் பாவையை ஊட்டு வோளே''[84]**

**''நடுங்கு அயிர் போழ்ந்த கொடுஞ்சி நெடுந்தேர்**
**வண்டற் பாவை சிதைய வந்து''[85]**

**''வாலிழை மடங்கையர் வரிமணற்**
**புனை பாவைக்கு''[86]**

**''இது என் பாவைக்கு இனிய நன் பாவை''[87]**

**''நெய்தல் பரப்பில் பாவை கிடப்பி**
**நின்குறி வந்தனென், இயல்தேர்க் கொண்க!**
**செல்கம், செல வியங்கொண்மோ – அல்கலும்,**
**ஆரல் அருந்த வயிற்ற**
**நாரை, மிதக்கும், என் மகள் நுதலே''[88]**

*போன்ற பாடல்கள் மூலம் பாவை விளையாட்டு நெய்தல் நில மக்கள் தொன்று தொட்டு மகிழ்ந்து விளையாடியதை உணர முடிகின்றது.*

### சிறு சோறாட்டு விளையாடல்

*சிறுவர் சிறுமியர்கள் ஒன்றுகூடி அவரவர் வீட்டில் இருக்கும் பொருளை எடுத்து வந்து கூட்டாக ஒன்று சேர்த்து சமைத்து உண்டு மகிழ்வதை கூட்டாஞ்சோறு ஆக்கல் என்பர். சிறுமியர்கள் சிறுசோறாட்டி விளையாடி மகிழ்ந்தனர். அவர்கள் தாம் அட்ட சிற்றடிசிலை பிறர்க்கு இட்டும் விளையாடினார்கள் என்பதை,*

**''மென் பாவையர்**
**செய்த பூஞ் சிற்றிடிசில் இட்டு உண்ண ஏற்பார்''[89]**

**''தொடலை ஆயமொடு கடல் உடன் ஆடியும்**
**சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும்''[90]**

*எனும் பாடல் மூலம் சிறு வயதிலேயே உணவு சமைத்து விளையாடி மகிழ்ந்ததை அறியமுடிகின்றது.*

### ஆம்பல் பூச்சூடி விளையாடல்

*பரதவருடைய குழந்தைகள் ஆம்பல் பூக்களையும், தழைகளையும் உடைபோலத் வைத்து உடுத்தியும், பூக்களைச் சூடியும் விளையாடினார்கள் என்பதை,*

**''கருந்தொழில் கலிமாக்கள்**
**கடல் இறவின் தூடு தின்றும்,**
**வயில் ஆமைப் புழுக்கு உண்டும்**
**வறள் அடும்பின் மலர் மலைந்தும்**
**புனல் ஆம்பல் பூச்சூடினர்''[91]**

*எனும் பாடல் மூலம் அறியமுடிகின்றது.*

**மணற்குவியலில் மறைத்தாடல்**

*மணற்குவியலில் ஒரு பொருளை மறைத்து வைப்பதும் அதனைக் கண்டெடுக்குமாறு தன்னுடன் விளையாடுபவர்களைக் கேட்பதும் மிகப் பழமையான விளையாட்டு நிகழ்ச்சியாகும்.*

*அவ்வகையில் புன்னை விதையை மணலில் மறைத்து விளையாடிய நிகழ்ச்சியை,*

**''விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி**
**மறந்தனம் துறந்த காழ்முளை அகைய''**[92]

*எனும் பாடல் வழி மணலை குவித்து அதில் ஏதேனும் ஒருபொருளை மறைத்து சீண்டி விளையாடும் பழக்கம் இருந்துள்ளமை புலனாகிறது.*

**குரங்குகளோடு விளையாடல்**

*உமணர்கள் உப்புவிற்கச் செல்லும் போது குரங்குகளையும் உடன் கூட்டிச் சென்றார்கள். குழந்தைகள் விளையாடக் குரங்குக் குட்டிகளை வைத்திருக்கிறார்கள். அக்குரங்குகள் கிளிஞ்சலின் வயிற்றில் முத்துக்களை இட்டு மூடி, உமட்டியர் ஈன்ற குழந்தைகளுடன் கிலுகிலுப்பை காட்டி விளையாடின.*

**''நோன்கட்டு உமணர் ஒழுகையொடு வந்த**
**மகாஅர் அன்ன மந்தி மடவோர்**
**நகாஅர் அன்ன நறிநீர் முத்தம்**
**வாள்வாய் எருத்தின் வயிற்றகத் தடக்கித்**
**தோள்புறம் மறைக்கு நல்கூர் நுசுப்பின்**
**உளரியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற**
**கிளர்ப்பூண்ட புதல்வரொடு கிலுகிலி ஆடும்''**[93]

*எனும் பாடல்வழி வீட்டில் வளர்க்கப்படும் விலங்குகளிடத்தில், குழந்தைகள் விளையாடும் பழக்கம் இருந்தமையை அறியமுடிகின்றது.*

*பெண் குழந்தைகளின் விளையாட்டுகள் பெற்றோர்களின் தொழில் சார்ந்ததாக இன்றி நீராடல், ஊஞ்சலாடல், பதுமை செய்து விளையாடல், சிற்றில் இழைதல், சிறுசோறு அடுதல், நண்டுப்பிடித்தல், போன்ற விளையாட்டுகளை மேற்கொண்டிருந்தனர். ஆண் குழந்தைகள் சமுதாய வளர்ச்சி மற்றும் பொழுது போக்குதல் முதலான வீடு சார்ந்த இல்லறச் செயல்பாட்டுக்குரியவர்களாக இருந்துள்ளனர்.*

**பாலைத்திணை மாந்தர் குழந்தைகளின் விளையாட்டுகள்**

*பாலை என்பது பண்டைத் தமிழகத்தில் பண்பின் அடிப்படையில் பகுத்து அறியப்பட்ட குறிஞ்சி, முல்லை நிலத்திணைகளுக்கு இடையிலமைந்த பாழ் நிலப்பகுதி பாலையாகும். அதாவது காடாகவுமில்லாமல் மலையாகவும் இல்லாமல் இரண்டும் கலந்து மயங்கி வெப்ப மிகுதியால் திரிந்த சுரமும் சுரம் சார்ந்த இடமும் பாலை நிலமாகும். பாலை நிலத்தலைவர் காளை, விடலை என அழைக்கப்பட்டனர். பாலை நிலமக்கள் மறவர் மற்றும் எயினர் எனப்பட்டனர்.*

**''முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்.''[94]**

*என்று சிலம்பு குறிப்பிடுகிறது.*

*அகன் ஐந்திணைகளுள் பாலை நிலத்திற்குத் தொல்காப்பியம் நிலப்பாகுபாட்டைக் கூறவில்லை. ஆனால் அகப்பொருள் விளக்கம் சுரமும் சுரம் சார்ந்த இடமும் பாலை நிலம் என்று பாகுபாடு செய்துள்ளதை,*

**''வரையே சுரமே புறவே பழனம்**
**திரையே அவையவை சேர்தரும் இடனே**
**என ஈரைவகைத்து அனையியல் நிலமே''[95]**

*எனும் நூற்பா கூறுகிறது. பாலை நிலத்தைச் சேர்ந்த திணைநிலை மாந்தர்கள் வேட்டுவர்கள் ஆவர். அவர்கள் வேட்டையாடுதலைத் தங்கள் தொழிலாகக் கொண்டிருந்தார்கள். எயினார், மறவர், வேடர், எனப்பல பெயர்களில் அழைக்கப்பட்டார்கள். அவர்கள் வேட்டையாடுதலின்றி வழிப்பறி செய்தலையும் தொழிலாகக் கொண்டிருந்தார்கள். அவர்களது குழந்தைகளின் விளையாட்டுகளும் வேட்டையாடுதலும் வாழ்க்கையோடு தொடர்புடையதாக அமைந்திருந்தன.*

*உணவிற்குத் தேவையான உடும்பு, எலி, போன்றவற்றை வேட்டுவச் சிறுவர்கள் வேட்டையாடிப் பிடித்தனர். வேட்டைக்கும் விளையாட்டுக்கும் இடையில் வேறுபாடு காணப்படவில்லை. வேட்டுவர்கள் இயற்கையாக மறப்பண்பு படைத்தவர்களாக விளங்கினார்கள். எனவே குழந்தைகளின் விளையாட்டுகளும் மறப்பண்பு நிறைந்ததாக அமைந்திருந்தன. சங்க கால வேட்டுவக் குழந்தைகளின் விளையாட்டுகளாக,*

- **உடும்பு வேட்டை**
- **எலி வேட்டை**
- **கணை விளையாடல்**
- **சேற்றில் விளையாடல்**
- **யானையின் கொம்பைப் பிடித்து விளையாடல்**
- **வட்டாடுதல்**
- **கழங்காடுதல்**
- **பந்து விளையாடல்**
- **செடிகொடி வளர்ப்பு**

*போன்றவற்றைக் குறிப்பிடலாம்.*

### உடும்பு வேட்டை

*வேட்டுவச்சிறார்கள் வேட்டையை விளையாட்டாக மேற்கொண்டிருந்தனர். நெடுந்தொலைவு செல்லாமல், குடிசையிலிருந்த படப்பைக்குச் சென்று உடும்பை வேட்டையாடிப் பிடித்தார்கள். சிறார்கள் விளையாட்டாக வேட்டையாடி கொண்டு வந்த உடும்பினை அவர்களுக்குச் சமைத்து விருந்து கொடுத்தாள் என்பதை,*

**''வேட்டச் சிறாஅர் சேண்டிபுலம் படராது**
**படப்பைக் கொண்டே குறுந்தாள் உடும்பின்**
**விழுக்கு நிணம் பெய்த தயிர்க்கண் மிதவை''**[96]

*எனும் பாடல் வழி அறியமுடிகிறது.*

### எலி வேட்டை

*சங்க கால சிறார்கள் எலியை விளையாட்டாக வேட்டையாடினர். வேட்டை என்ற சொல் பொதுவாகக் காட்டில் விலங்குகளை வீழ்த்துவதைக் குறிக்கும். விலங்குகளை அடக்கிப்பிடிக்கும் செயலைக் குறிப்பிடவும் இச்சொல் பயன்படுத்தப் பட்டுள்ளதை காண முடிகின்றது.*

*வேட்டுவச் சிறுவர்கள் ஒன்றுகூடி, சிறிய இலையையுடைய வேல மரத்தின் முள்ளை, ஊகம் புல் கோலால் செய்த அம்பில் செருகினார்கள். அதனை வாளால் செய்யப்பட்ட வில்லில் வைத்து விளையாட்டுக்குத் தயாரானார்கள். பின் வேலியடியில் உறையும் காட்டெலியைக் குறிபார்த்து வேட்டையாடியதை,*

**''வெருக்கு விடை அன்ன வெகுள் நோக்குக் கயத்தலை**
**புள்ஊன் தின்ற புலவுராறு கயவாய்**
**வெள்வாய் வேட்டுவர் வீழ்துணை மகாஅர்**
**சிறியிலை உடையின் சுரையுடை வால்முள்**
**ஊக நுண்கோல் செறித்த அம்பின்**
**வலாஅர் வல்வில் குலாவரக் கோலி**
**பருத்தி வேலிக் கரும்பைப் பார்க்கும்**
**புண்புலம் தழீஇய அம்குடிச் சிறூர்''**[97]

*எனும் பாடலின் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன.*

### கணை விளையாடல்

*வேட்டையாடுவதற்குரிய கருவியான கணையை எய்திச் சிறுவர்கள் விளையாடினார்கள். வலிய ஊர் மன்றத்தில் நிற்கும் உலர்ந்த தலையையுடைய இரத்தி மரத்தின் அசைகின்ற நிழலில் மெல்லிய தலையையுடைய சிறுவர்கள் கணை விளையாடியதை,*

**''மறுகுடன் கமழும் மதுகை மன்றத்து**
**அலந்தலை இரத்தி அலங்குபடு நீழல்**
**கயந்தலைச் சிறாஅர் கணை விளையாடும்''**[98]

*என்ற பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. வேட்டுவச்சிறாரின் இத்தகைய விளையாட்டு அவர்களுக்கு வேட்டை வாழ்க்கைக்குரிய பயிற்சியையும், திறனையும் தொழில்நுட்ப அறிவையும் வளர்க்கிறது என்பது புலனாகிறது.*

### சேற்றில் விளையாடல்

*வன்புலச் சிற்றூரில் உள்ள சிறுசிறு குட்டைகளில் இறங்கி குதித்து நீரைக் கலக்கி ஆடுவதை விளையாட்டாகக் கொண்டிருந்ததை,*

**''ஊர்க்குறு மாக்கள் ஆடக் கலங்கும்**
**தாள்படு சில்நீர்க் களிறு அட்டு வீழ்க்கும்''**[99]

*என்ற பாடல் அடிகளின் வாயிலாக அறிய முடிகிறது.*

### யானையின் கொம்பைப் பிடித்து விளையாடல்

*வேட்டுவச் சிறார்கள் மறப்பண்பு மிக்கவராகத் திகழ்ந்தார்கள். அதனால் அச்சமின்றி விலங்குகளுடன் விளையாடினார்கள். பெரிய யானை நீர்நிலையில் விளையாடிக் களித்தது. அப்பொழுது பாலை நிலச் சிறுவர்கள் அச்சமின்றி யானைகளின் கொம்புகளைப் பிடித்து விளையாடி மகிழ்ந்ததை,*

**''ஊர்க் குறுமாக்கள் வெண்கோடு கழாஅலின்**
**நீர்த்துறை படியும் பெருங்களிறு**
**இனியை, பெரும! எமக்கே, மற்று அதன்**
**துன் அருங் கடாஅம் போல**
**இன்னாய் பெரும! நின் ஒன்னாதோர்க்கே''[100]**

என்னும் பாடல் கூறுகிறது. இவ்விளையாட்டு இன்று கோவில்களிலும் திருவிழாக்களிலும் யானையிடத்தில் காசு கொடுத்து ஆசீர்வாதம் வாங்குவதும், யானையின் மேல் அமர்வதும் குழந்தைகளுக்கு விளையாட்டாகவும் பொழுது போக்காகவும் மாற்று வடிவம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது.

**வட்டாடுதல்**

'வட்டு' என்ற உருளை வடிவமான கருவியை வைத்துக்கொண்டு சிறுவர்கள் விளையாடியுள்ளார்கள். வட்டு விளையாடுவதற்குப் பயன்படும் வகையில் சிறுவர்கள் தரையில் அரங்கு அமைத்துக் கொள்வர்.. "வட்டு உருட்டுதல் அக்காலத்தில் சூது விளையாட்டாகவும் விளையாடப்பட்டது. ஆனால் சிறுவர் வட்டாட்டத்தில் பந்தயம் கட்டுதலோ, பொருள் இழப்போ, பொருள் அடைதலோ சான்று இல்லை.''[101] என்பது குறிப்பிடத்தக்கது. சிறுவர்கள் ஒன்றுகூடி வேப்பமர நிழலில் நெல்லிக்காய்களை வட்டமாகக் கொண்டு விளையாடியதை,

**''பொரி அரை வேம்பின் புள்ளி நீழல்**
**கட்டளை அன்னஇட்டு அரங்கு இழைத்து**
**கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டு ஆடும்''[102]**

எனும் அடிகளின் வாயிலாக அறியமுடிகின்றது.

**கழங்கு விளையாடல்**

கழற்சிக்காய்களைக் கொண்டு விளையாடுவதைக் கழங்கு விளையாட்டு என்பர். பிற்காலப் பெண்பாற் பிள்ளைத்தமிழ்க்குரிய பருவங்களுள் கழங்கு ஒன்றாகும். தற்காலத்தில் இவ்விளையாட்டினைப் பாடிக்கொண்டே விளையாடுகின்றனர்.

கழங்கு விளையாட்டினை சங்ககாலத்தில் சிறுமியர்கள் விளையாடினார்கள். பெரும்பாலும் இவ்விளையாட்டைக் குழுவாகச் சேர்ந்து அல்லது ஒரு சில நபர்கள் கூடி விளையாடுவர். சிறுமிகள் தங்களை ஒத்த தோழியருடன் சேர்ந்து கழங்கு விளையாடியமையை,

**''இலாந்துணை ஆயமொடு கழங்கு உடன் ஆடினும்''**[103]

**''கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்''**[104]

**''கழங்கு ஆடு ஆயத்து அன்று நம் அருளிய''**[105]

என்னும் பாடல் அடிகள் தெளிவுபடுத்துகின்றன.

வீட்டின் முற்றத்தில் சிறுமியர் மணற்பரப்பில் அமர்ந்து கழங்கு விளையாடியமையை,

**''கூரை நல்மனைக் குறுந்தொடி மகளிர்**
**மணல் ஆடு கழங்கின்''**[106]

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன.

பெண் குழந்தைகளின் விளையாட்டு குழுவிளையாட்டாக, வீட்டின் அருகாமையிலும் நிகழ்ந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இருபால் குழந்தை விளையாட்டுகளும் அவர்களுக்குரிய வெவ்வேறு சமூகப் பொறுப்புக்களை உருவாக்கின என்று கூறலாம்.

**பந்து விளையாடல்**

தமிழ்ப் பேரகராதி அம்மானை ஆடுவதற்குரிய கருவி பந்து என்பதைத் தெளிவுப்படுத்துகிறது. அம்மானை என்பது பெண்பாற் பிள்ளைத் தமிழின் பத்துப் பருவங்களுள் ஒன்று. இதனைச் சங்க இலக்கியம் அம்மானை என்று சொல்லால் குறிப்பிடாமல் பந்து என்று குறிப்பிட்டுள்ளது.

சங்க காலத்தில் சிறுமியரும், பெண்களும் பந்து விளையாட்டில் ஈடுபட்டுள்ளார்கள். ஆனால் தற்காலத்தில் ஆண்களும் இவ்விளையாட்டில் ஈடுபட்டுள்ளார்கள். சிறுமியர் பந்து விளையாட்டில் ஈடுபட்டதை,

**''வளம் கெழு திருநகர்ப் பந்து சிறிது எறியினும்**
**பந்து நிலத்து எறித்து பாவை நீக்கி**
**அவ்வயிறு அலைத்த என் செய் விளைக் குறுமகள்''**[107]

என்ற பாடலடிகள் எடுத்துக்காட்டுகின்றன.

### செடிகொடி வளர்ப்பு

சங்ககாலத்தில் செடிகொடிகளை வளர்ப்பது என்பது பெண்களின் பொழுது போக்காக விளங்கியுள்ளது. சிறுமியர்கள் விளையாட்டாகச் செடி கொடிகளை வளர்த்து வந்துள்ளனர். பீளை, குவளை, தெற்றி, நொச்சி, போன்ற செடிகளை வளர்த்து அதன் அழகினைக்கண்டு மகிழ்ந்துள்ளனர்.

ஓங்கி உயர்ந்த தாழியில் பனங்குடையால் முகந்தெடுத்த நீரினை ஊற்றி வயலைக் கொடியை சிறுமியர்கள் வளர்த்தார்கள் என்பதை,

**''ஓங்குநிலைத் தாழி மல்மகச் சார்த்திக்**
**குடையடை நீரின் மடையினன் எடுத்த**
**பந்தர் வயலைப் பந்தெறித்தாடி''**[108]

என்ற பாடலடிகள் தெளிவுப்படுத்துகின்றன.

பனிக்காலம் கழித்து இளவேனில் வந்தவுடன் சிறுமிகள் விருப்பத்துடன் ஆசையோடு மேடையில் வைக்கப்பெற்ற தொட்டிகளில் பூஞ்செடிகளை வளர்த்து வந்தனர். வயலைக்கொடி வாடிப் போயிற்று. நொச்சியின் மென்மையான கிளைகளில் உள்ள களைந்த கதிர்கள் வாடிச் சாய்ந்தன என்பதனை,

**''தெற்றி உலறினும் வயலை வாடினும்**
**நொச்சி மென்சினை அணர்குரல் சாயினும்**
**நின்னினும் மடவள்''**[109]

என்ற பாடலடிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது.

சிறுமி ஒருத்தித் தன் இல்லத்தில் வயலைக் கொடியை வளர்த்து வந்தாள் அதனைக் கன்றினை ஈன்ற பசு தின்று விட்டது. அதனைக் கண்டவுடன் தான் விளையாடிக் கொண்டிருந்த பந்தை நிலத்தில் எறிந்து விட்டு, பாவையையும் நீக்கிவிட்டு தனது அழகிய வயிற்றில் அடித்துக்கொண்டு அழுதனள் என்பதை,

**''இல் எழு வயலை ஈற்று ஆ தின்றெனப்**
**பந்து நிலத்து எறிந்து, பாவை நீக்கி**
**அவ்வயிறு அலைத்த என் செய்வினைக் குறுமகள்''**[110]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் காட்சிப்படுத்தப்படுகின்றன. ஆண் குழந்தைகளை விட பெண்குழந்தைகள் மிகுதியாக செடிகொடிகளை இல்லத்தில் வளர்த்துள்ளனர். ஆண் குழந்தைகளின் விளையாட்டுகள் காடு சார்ந்தும் பெண் குழந்தைகளின் விளையாட்டுகள் வீடு சார்ந்தும் காணப்படுகின்றன என்பது தெளிவுறக் காண முடிகின்றது.

**ஏனைய திணைக்கும் பொதுவான விளையாட்டுக்கள்**

திணைநிலைக் குடி, கைவினைஞர் குடிகளைச் சேர்ந்த குழந்தைகளின் விளையாட்டுகளிலிருந்து உடைப்பெருஞ் செல்வக்குடிக் குழந்தைகளின் விளையாட்டுகள் வேறுபட்டு அமைந்திருந்தன.

மருத நிலமும், நிலத்தின் விளைச்சலும் உடைமைகள் ஆகின. உடைமைக்கு உரிமை பெற்றவர்கள் உழுவித்துண்போர் எனவும் உடைமையை உற்பத்தி செய்வதவர்கள் உழுதுண்போர் எனவும் பாகுபடுத்தப்பட்டார்கள். உழுவித் துண்போர் உழவுத் தொழிலை மேற்கொள்ளவில்லை. பிறரை உழுவித்து அதன்மூலம் கிடைக்கும் பொருளைக் கொண்டு செழிப்புடன் வாழ்ந்தார்கள். உழவர்களை அடுத்து மேம்பட்ட நிலையில் இவர்கள் வாழ்ந்தார்கள். இவர்கள் செல்வர்களாகத் திகழ்ந்தார்கள்.

செல்வந்தர்களின் குழந்தைகள் பெரும்பாலும் தனியாக விளையாடுபவர்களாக இருந்தார்கள். விளையாட்டுகள் இல்லத்தின் அகத்தும், இல்லத்தின் புறத்தும் விளையாடுவதாக அமைந்திருந்தன. குழந்தைகளுடைய செல்வச் செழிப்புக்கு ஏற்ப அவர்களது விளையாட்டுப் பொருட்கள் அமைந்திருந்தன. செல்வர் குழந்தைகளின் விளையாட்டுகளாவன,

- **சிறுதேர் உருட்டல்**
- **சிறுதேரினை அணி செய்து விளையாடல்**
- **நீரில் விளையாடல்**
- **பறையடித்து விளையாடல்**
- **அம்புலி கட்டுதல்**
- **பதுமைகளோடு விளையாடல்**
- **பந்து விளையாடல்**
- **கழங்கு விளையாடல்**
- **வட்டு உருட்டி விளையாடல்**
- **எண்ணி விளையாடல்**
- **செடிகொடி வளர்ப்பு**

**சிறுதேர் உருட்டல்**

பெரும்பாலும் செல்வர்களின் குழந்தைகள் சிறுதேர் உருட்டலையே தங்கள் விளையாட்டாகக் கொண்டிருந்தார்கள். அச்சிறுவர்கள் நடை பயில்வதற்காக சிறுதேர் செய்து கொடுக்கப்பட்டது. எனினும் சிறுவர்கள் சிறுதேர் உருட்டுவதை ஒரு விளையாட்டாகவே மேற்கொண்டார்கள் என்பதைச் சங்க இலக்கிய பாடல் வழி அறிய முடிகிறது.

குழந்தைகள் பால் உண்பதைக் கூட மறந்து முற்றத்திலே தேரை உருட்டி விளையாடினார்கள் என்பதை,

**‘‘பாலொடு அலர்ந்த முலை மறந்து, முற்றத்துக்**
**கால்வெல் தேர் கையின் இயக்கி, நடைபயிற்றா**
**ஆல் அமர் செல்வன்’’**[111]

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம்.

மேலும் உலருகின்ற நெல்லைத் தின்னும் கோழியை விரட்ட பெண்கள் பொன்னாற் செய்த மகரக்குழையை வீசி எறிந்தார்கள். அது சிறுவர்கள் சிறுதேரினை உருட்டிச்செல்லும் வழியில் கிடந்தது. அதனால் சிறுவர்களால் மேற்கொண்டு சிறுதேரினை உருட்டிச் செல்ல முயலவில்லை. இந்தச் செய்தியை,

**‘‘கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை**
**பொற்காற் புதல்வர் புரவியின்று உருட்டு**
**முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்’’**[112]

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இதனால் செல்வர்களின் குழந்தைகள் வீட்டை விட்டு வெளியே சென்று தெருவில் விளையாடினார்கள் என்பது தெளிவாகிறது.

சிறுகுழந்தைகள் நடை பயில்வதற்காக நடை வண்டிகள் செய்து கொடுக்கப்பட்டன. இதனை,

**‘‘தச்சன் செய்த சிறு மாவையம்**
**ஊர்ந்தின் புறாஅ ராயினும் கையின்**
**ஈர்ந்தின் புறூஉம் இளையோர்’’**[113]

என்ற பாடலடிகள் இயம்புகின்றன. மேலும்,

**''பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்**
**முக்காற் சிறுதேர்''[114]**

*என்ற பாடலடியாலும் செல்வர்களின் சிறுவர்கள் சிறுதேரினை உருட்டி விளையாடியதை அறியலாம்.*

**சிறுதேரினை அணி செய்து விளையாடல்**

*சிறுவர்கள் தங்கள் செல்வச் செழிப்புக்கு ஏற்ப சிறுதேரினை அணி செய்து விளையாடினார்கள். சிறுவர்கள் முத்துக்களைப் பதித்து, பவளத்தால் செய்யப்பட்ட சக்கரங்களைக் கொண்ட சிறுதேரில் கவனம் கொள்ளுதல் அறியாமையால் செய்த யானையை பூங்கயிற்றினால் கட்டி பையப்பைய இழுத்து விளையாடினார்கள். இதனை,*

**''திகழ் ஒளி முத்து அங்கு அரும்பாகத் தைஇப்**
**பவழம் புனைந்த பருதி சுமப்ப,**
**கவழம் அறியா நின்கை புனை வேழம்**
**பரிபுனை பூங்கயிற்றின் பைய வாங்கி**
**அரிபுனை புட்டிலின் ஆங்கண் ஈர்த்து, ஈங்கே**
**வருக ! எம்பாக மகன்''[115]**

*என்ற பாடல்வழி அறியமுடிகிறது. மேலும் சிறுவர்கள் நம்முடைய சிறுநோக்கு, வரைத்த கொடியையுடைய அமைகின்ற தன்மையுடைய இளங்கன்றைக் கட்டி விளையாடினார்கள் என்பதை,*

**''கொடுங் கோட்டு ஆமான் நடுங்கு தலைக்குழவி**
**புன்தலைச் சிறாஅர் கன்று எனப்பூட்டும்''[116]**

*எனும் பாடலடி புலப்படுத்துகின்றது.*

**நீர் விளையாடல்**

*நீராட்டு என்பது ஒரு விளையாட்டாகும். குழந்தைகள் பொழுது போக்கிற்காக விளையாடுவது. உடல் உறுப்புகளின் இயக்கத்திற்கு நீர் விளையாட்டுப் பயனுள்ளதாக அமைகிறது. நீரில் நீச்சலடித்து பலரும் வேடிக்கைப் பார்க்க விளையாடிய விளையாட்டு ஒரு விழாவாகவும் நடைபெற்றுள்ளது. நீர் விளையாட்டை,*

**‘‘இறு வரை புரையுமாறு  இருகரை ஏமத்து,**
**வரை புரை உருவின் நுரை பல சுமந்து,**
**பூ வேய்ந்து, பொழில் பரந்து,**
**துனைந்து ஆடுவார் ஆய் கோதையர்’’[117]**

**‘‘தளிர்  செரீஇ கண்ணி பறித்து’’[118]**

*இப்பாடலடிகளின் வாயிலாக அறியமுடிகிறது. வையையில் நீர் பாய்ந்து வருகிறது. அதில் நீரோடும் மலர் மாலையணிந்த மகளிர் செவிகளில் தளிரைக் செருகியது. நீராடும் மைந்தரது தலையில் சூடிய மாலைகளைப் பறித்துச் சென்றதை உணர முடிகின்றது.*

### பறையடித்து விளையாடல்

*செல்வர்களின் குழந்தைகள் விளையாட்டாகப் பறையடித்து விளையாடினார்கள். குருவியின் உருவம் பொறித்த பறையைத் தோளில் மாட்டிக் கொண்டு அதனை அடித்து விளையாடினார்கள் சிறுவர்கள் ஆனால் அது தொழில் நோக்கில் அல்ல என்பதனை,*

**‘‘பொழுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்**
**சிறுதோட்  கோத்தசெவ் அரிப் பறையின்**
**கண்ணகத்து  எழுதிய குரீஇப் போல**
**கோல் கொண்டு அலைப்பப் படீஇயர் மாதோ’’[119]**

*என்ற பாடலடிகள் எடுத்தியம்புகின்றன.*

### அம்புலி காட்டுதல்

*அம்புலி அழைத்தல் அல்லது அம்புலி காட்டுதல் என்ற விளையாட்டைச் செய்யுமாறு ஆண் - பெண் என்ற இருபால் குழந்தைகளிடமும் பெரியவர்கள் கூறியுள்ளார்கள். பிற்காலப் பிள்ளைத் தமிழ்ப் பருவங்களுள் அம்புலிப் பருவமும் ஒன்றாகும். தாய் தன் குழந்தைக்கு அம்புலி காட்டி விளையாட்டுக் காட்டினாள் என்பதை,*

**‘‘ஐய,  ‘திங்கட்  குழவி வருக!’ என , யான் நின்னை**
**அம்புலி காட்டல் இனிது;  மாற்று  இன்னாதே’’[120]**

*என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.*

*தாய் தன் குழந்தைக்குப் பாலூட்டும் போது நிலவினைக் காட்டிப் பாலூட்டினாள் என்பதை,*

**''முகிழ் நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்**
**பொன்னுடைத் தாலி என் மகன் ஒற்றி**
**வருகுவை ஆயின், தகுவென் பால் என''**[121]

*எனும் பாடலடிகள் பதிவு செய்கின்றன. இதனால், குழந்தைகளை உண்ண வைப்பதற்காக நிலவினைக் காட்டித் தாய் விளையாட்டு காட்டினாள் என்பதை அறிய முடிகிறது.*

### பதுமைகளோடு விளையாடல்

*செல்வர்களின் குழந்தைகள் தங்கள் செல்வச் செழிப்புக்கு ஏற்ப பதுமைகளை வைத்து விளையாடினார்கள். செல்வர்களின் குழந்தைகள் பொன்னால் செய்த யானையை வைத்து விளையாடினார்கள். இதனை,*

**''கடியரணம் பாயா நின் கைபுனை வேழம்**
**தொடியோர் மணலின் உழக்கி''**[122]

**''திகழ் ஒளி முத்து அரும்பாகத் தைஇப்**
**பவழம் புனைந்த பருதி சுமப்பக்**
**கவழம் அறியா நின்கை புனை வேழம்''**[123]

*என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது. பூந்தாது முதலிய கொடிகளால் செய்யப்பட்டு மிக்க குளிர்ச்சியுடைய விளையாட்டுப் பாவையை வைத்துச் செல்வந்தர்களின் சிறுமிகள் விளையாடினார்கள் என்பதனை, .*

**''தாதின் செய்த தண்பனிப்பாவை**
**காலை வருந்தும் கையாறு ஓம்பு என**
**ஓரை ஆயம் கூறக் கேட்டும்''**[124]

*இப்பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன.*

### பந்து விளையாடல்

*பெரும்பாலும் சிறுமியரே பந்து விளையாட்டில் ஈடுபட்டனர். காற்சிலம்பு ஒலிக்கும் வண்ணம் பந்தினை ஆடுவர் செல்வம் சிறந்த மகளிர் பந்து விளையாடுவர் என்பர்.*

*பொற்சிலம்பு ஒலிக்க, செல்வ மிக்க மகளிர் வான்தோய் மாடத்தில் வரிப்பந்து விளையாடினர் என்பதை,*

**''தமனியப் பொற்சிலம்பு ஒலிப்ப உயர்நிலை**
**வான்தோய் மாடத்து வரிப்பந்து அசைஇ''[125]**

**''கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்''[126]**

*என்ற பாடலடிகளால் அறியலாம்.*

*சிறுமி, பந்தினைத் தனித்து விளையாடமல் தோழியருடன் சேர்ந்து விளையாடினாள். இதனை,*

**''பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்**
**விளையாடு ஆயமொடு''[127]**

*என்ற பாடலடிகள் கூறுகின்றன.*

*நெடிய தேர் செல்லும் வெண்மணல் பரவிய முற்றத்தில் செல்வர்களின் சிறுமியர்கள் பந்தாடினார்கள். இதனை,*

**''நெடுந்தேர் வழங்கும் நிலவுமணல் முற்றுத்துப்**
**பந்தொடு பெயரும் பரவி லாட்டி''[128]**

*என்ற பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன.*

*செல்வம் மிக்க அழகிய வீட்டின்கண் சிறுமி, சிறிதுநேரம் பந்து எறிந்து விளையாடினாள் என்பதனை,*

**''வளங்கெழு திருநகர்ப் பந்து சிறிது ஏறியினும்**
**இளத்துணை ஆயமொடு கழங்கு உடன் ஆடினும்''[129]**

*என்ற பாடலடிகள் இயம்புகின்றன.*

**கழங்கு விளையாடல்**

*செல்வர்களின் சிறுமிகள் பொழுதுபோக்கிற்காகத் திண்ணைகளில் பொன்னாலான காய்களை வைத்து விளையாடியதை,*

**''செறியரிச் சிலம்பின் குறுந்தொடி மகளிர்**
**பொலஞ்செய் கழங்கின் றெற்றி யாடும்''[130]**

*எனும் பாடல் வழி உணரலாம். சிறிய இடையினை உடைய இளமகளிர் பந்து விளையாடியதை,*

**''சிறுகு இடையார்**
**பந்தும் பழங்கும்''[131]**

என்ற பாடலடிகள் வழி தெரிந்து கொள்ளலாம்.

முத்துக்களைப் போன்ற மணலில், பொன்னால் அழகிய கழங்கினை வைத்து ஆடினார்கள். இதனை,

**''முத்துவார் மணற் பொற்கழங் காடும்''[132]**

என்னும் பாடலடி கூறுகிறது.

பெண்களின் விளையாட்டுகளைப் பற்றிக் குறிப்பிடுகையில் "கைவளை அசையும்படி மணலில் கழங்காடுவர்''[133] என்ற கருத்து குறிப்பிடத்தக்கது.

யானையின் தந்தத்தினால் கடைந்து செய்த கழற்சிக்காய்களைக் கொண்டு கழங்காடினார்கள் என்பதை,

**''கோடுடை கழங்கின், அறமிசைத் தாஅம்''[134]**

என்ற பாடலடியால் அறிந்து கொள்ளலாம்.

### வட்டு உருட்டி விளையாடல்

இளமகளிர் கையில் வட்டினை வைத்துக் கொண்டு விளையாடினார்கள். இதனை,

**''கைஆடு வட்டின் தோன்றும்''[135]**

என்ற பாடலடியால் தெரிந்துகொள்ளலாம். மேலும், இது சிறுவர்கள் விளையாடும் ஒரு வகை விளையாட்டாகும். வட்டு உருண்டையான விளையாட்டுக்காய், இக்காலத்தில் தடகள விளையாட்டுகளில் ஒன்றான வட்டு எறிதல் விளையாட்டுக்குப் பயன்படுத்தப்படும் தட்டையான பந்தை வட்டு எனக் குறிப்பிடுகிறோம்.

### எண்ணி விளையாடல்

ஊசல் விளையாடுதலையுடைய சிறுமகளிர், உரல் போன்ற பெரிய காளையும் கொம்பையும் பெரிய துதிக்கையையும் மதத்தையும் உடைய யானைகளுடன் வரும், தமக்கு விருப்பமான பிடிகளை எண்ணி விளையாடினார். இதனை,

**''ஊசல் மேவல், சேயிழை மகளிர்**
**உரல் போல் பெருங்கால், இலங்கு வாள் மருப்பின்**
**பெருங்கை, மதமாப் புகுதரின், அவற்றுள்**
**விருந்தின் வீடி பிடி எண்ணு முறை பெறாஅ''[136]**

*என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.*

*பறம்பு மலையின் உயர்ந்த சிகரத்தில் ஏறிநின்று பாரிமகளிர் தம் தந்தையின் போரில் ஈடுபடும் பொன்னாற் செய்யப்பட்ட அணிகலன்கள் அணிந்த குதிரைகளை எண்ணி விளையாடினார்கள். இதனை,*

**''வலம்படு தானை வேந்தர்**
**பொலம்படைக்கலிமா எண்ணு வோரே''[137]**

*என்ற பாடல் அடிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.*

**செடிகொடி வளர்ப்பு**

*செடி கொடிகளை இளமகளிர் ஆசையோடு வளர்த்து விளையாடினர். புன்னை விதையை வெள்ளிய மணலில் அழுத்தி விளையாடிய பின் அதனை மறந்து போனார்கள். அவ்விதை வேரூன்றி முளைத்து முளை தோன்றியது. அதனைக் கண்டு மகிழ்ந்து நெய்யோடு கலந்த இனிய பாலை நீராக ஊற்றி வளர்த்தார்கள் என்ற செய்தியை,*

**''விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி**
**மறந்தனம் துறந்த காழ் முளை அகைய,**
**நெய் பெய் தீம்பால் பெய்து இனிது வளர்த்தது,**
**நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகும்''[138]**

*என்று பாடலடிகள் புலப்படுத்துகின்றன.*

## தொகுப்புரை

- விளையாட்டு எல்லா உயிர்களுக்கும் பொதுவானதாக இருக்கிறது. குழந்தைகள் இருக்கும் இடத்திற்கும் வாழும் சூழ்நிலைக்கு ஏற்றாற்போல விளையாட்டுகள் மாற்றம் பெறுகின்றன. குழந்தைகளின் மூதாதையர்கள் செய்யும் தொழிலுக்கு ஏற்றாற் போலவும் விளையாட்டுகள் அமைந்துள்ளதை அறிய முடிகின்றது.

- குறிஞ்சி நில மக்கள் யானையை விரட்டுதல், தினைப்புனப் பறவைகளை ஓட்டுதல், பறையடித்து மிருகங்களை ஓட்டுதல், கவன் கல்லெறிதல் போன்ற குறிஞ்சி நில மக்களின் செயல்களை ஒட்டி யானை விளையாட்டு, குதிரை விளையாட்டு, எலி வேட்டை, பறை முழங்குதல், சிற்றில் கட்டி விளையாடுதல் முதலியவை குறிஞ்சி நில மக்களின் விளையாட்டுகளாக இருந்துள்ளது புலனாகிறது.

- முல்லை நில குழந்தைகளின் மூதாதையர்களின் தொழிலுக்கும் சுற்று சூழலுக்கும் ஏற்றாற்போல் அங்குள்ள குழந்தைகளின் விளையாட்டுகள் அமைந்துள்ளன. வெள்ளாட்டோடு விளையாடல், மலர் சூடி விளையாடல், சிறுதேர் உருட்டல், சிற்றில் செய்து விளையாடல் போன்ற விளையாட்டுகள் முல்லை நில குழந்தைகளின் விளையாட்டுகளாகத் திகழ்ந்துள்ளதை காண முடிகிறது.

- மருதநில மக்கள் குழந்தைகள் வைக்கோல்போர் மேல் ஏறி விளையாடல், எருமை மாடுகள் மேல் விளையாடல், ஊசலாடல், கழங்கு விளையாடல் முதலிய விளையாட்டுகளை விளையாடிய நிலையை உணரமுடிகின்றது.

- நெய்தல் நில மக்களின் குழந்தைகள் வலைகளில் சிக்கிய கொக்குகளுடன் விளையாடல், நண்டு பிடித்து விளையாடல், மீன்பிடித்து விளையாடல், பெரியவர்கள் மீன்களை எண்ணி விற்பதை போல எண்ணி விளையாடுதல், பறவைகளை ஓட்டி விளையாடல், ஆம்பல் பூச்சூடி விளையாடல், கடல் நீரில் குளித்து விளையாடல் முதலிய விளையாட்டுகளை நெய்தல் நில குழந்தைகள் விளையாடி மகிழ்ந்துள்ளனர் என்பதை தெளிவுப் படுத்தியுள்ளது.

- பாலை நில மக்கள் வேட்டையாடுதல் வழிபறி செய்தல் போன்ற தொழில்களை செய்து வந்துள்ளனர். அவர்களின் குழந்தைகளின் விளையாட்டுகளும் அத்தன்மையிலே வெளிப்பட்டுள்ளதை காண முடிகின்றது. உடும்பு வேட்டை, எலிவேட்டை, கணை விளையாட்டு, சேற்றில் விளையாடல், யானை விளையாட்டு முதலிய விளையாட்டுகளை விளையாடியுள்ளனர் என்பது புலப்படுத்தப்பட்டுள்ளது.

- ஒவ்வொரு திணைக்கும், இடத்திற்கும் அமைய பெற்ற சுற்று சூழலுக்கும், ஏற்ற வகையில் விளையாட்டுகள் அமைந்துள்ளன. ஐந்திணைகளிலும் பொதுவான விளையாட்டுகளும் குழந்தைகள் விளையாடியுள்ளனர். பொது விளையாட்டாக சிற்றில், சிறுதேர், கழங்கு, செடி வளர்ப்பு, ஊசலாடல், நீர் விளையாட்டு, பாவை விளையாட்டு, முதலிய விளையாட்டுகள் ஐந்து திணைகளுக்கும் பொதுவானதாக அமைந்துள்ளது என்பதனையும் இந்த இயல் எடுத்தியம்புகிறது.

# சான்றெண் விளக்கம்

1. சு. சிவகாமசுந்தரி, சங்க இலக்கிய விளையாட்டுக்களஞ்சியம், பக்.6-2
2. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.255
3. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.240
4. 
5. நா. காதிரைவேற்பிள்ளையின் தமிழ் மொழியகராதி, (திருத்தியது, காஞ்சி நாகலிங்க முதலியார், ப.1298
6. க்ரியாவின் தற்காலத்தமிழ் அகராதி, (விரிவாகத் திருத்தி புதிய பதிப்பு), டிசம்பர் 2009, ப.1279
7. சிவகுருநாதன் (ப.ஆ) சிறுமகளிர் விளையாட்டு, ப.125
8. க. பெருமாள் (ப.ஆ), விளையாட்டுக்கலை, ப.9
9. கோ. சுப்ரமணியப்பிள்ளை (ப.ஆ), பண்ணை விளையாட்டுகள், ப.12
10. மு. இராகவையங்கார் (ப.ஆ), விலங்குப்போர் விளையாட்டு, ப.297
11. வ. பெருமாள் (ப.ஆ), மகளிர் விளையாட்டுகள், ப.116
12. இரா. பாலசுப்ரமணியம் (ப.ஆ), தமிழர் நாட்டு விளையாட்டுகள், ப.4
13. சு. சிவகாம சுந்தரி (ப.ஆ), மனையியல், ப.21
14. சு. சிவகாமசுந்தரி (ப.ஆ), சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், ப.4
15. தொல்காப்பியம், சொல்லதிகாரம் உயிரியல், நூ.319
16. இரா. பாலசுப்ரமணியன் (ப.ஆ), தமிழர்நாட்டு விளையாட்டுகள், ப.4
17. ச. சிவகாமி (ப.ஆ), சங்கத்தமிழியல், ப.9
18. ஐங்குறுநூறு, பா.406, வரிகள் 1-2
19. மேலது., பா.403, வரிகள் 3-5
20. மேலது., பா.410, வரிகள் 1-3
21. மேலது., பா.89, வரிகள் 1-5
22. குறுந்தொகை, பா.394, வரிகள் 1-3
23. கலித்தொகை, பா.80, வரிகள் 22-26
24. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.5
25. நம்பியகப்பொருள்
26. குறுந்தொகை, பா.394, வரிகள் 1-4
27. நற்றிணை.பா.220, வரிகள் 1-4
28. பட்டினப்பாலை, பா.72-74
29. குறுந்தொகை. பா.54, வரிகள் 2-3

30. அகநானூறு, பா.292, வரிகள் 11-14
31. நற்றிணை, பா.104, வரிகள் 4-5
32. கலித்தொகை, பா. 57, அடி.7
33. மேலது., பா.51, வரிகள் 3-4
34. ஐங்குறுநூறு. பா.294, வரிகள்.4-5
35. கலித்தொகை, பா.37, அடி.14
36. அகநானூறு, பா.38, வரிகள் 7-8
37. மேலது., பா.,68. அடி.6
38. கலித்தொகை, பா.51, வரிகள் 1-2
39. நற்றிணை, பா.135, வரிகள் 3-8
40. அகநானூறு, பா.388, வரிகள் 4-5
41. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.5
42. நம்பியகப்பொருள் விளக்கம், நூ.9
43. அகநானூறு, பா.104, வரிகள் 11-12
44. நற்றிணை, பா.266.வரிகள் 1-9
45. ஐங்குறுநூறு, பா.403, வரிகள் 1-5
46. கலித்தொகை, பா.111, வரிகள் 8-9
47. மேலது., பா.114, வரிகள் 15-16
48. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.5
49. பிங்கல நிகண்டு
50. புறநானூறு, பா.61, வரிகள் 8-11
51. பதிற்றுப்பத்து, பா.71, வரிகள், 6-7
52. நற்றிணை, பா.80, வரிகள் 1-4
53. அகநானூறு, பா.206, வரிகள் 3-5
54. பெரும்பாணாற்றுப்படை, பா.213-241
55. நற்றிணை, பா.90, வரிகள் ப.10-11
56. அகநானூறு, பா.66, அடி.24
57. பெரும்பாணாற்றுப்படை, பா.248-249
58. அகநானூறு, பா.387, வரிகள் 4-7
59. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.5
60. அகப்பொருள் விளக்கம், அகத்திணையியல், நூ.9
61. அகநானூறு, பா.290, வரிகள் 1-4
62. நற்றிணை, பா.392, வரிகள் 1-5

63. மேலது.,111, வரிகள் 3-8
64. அகநானூறு, பா.110, வரிகள் 6-7
65. மேலது., பா.90, வரிகள் 1-2
66. நற்றிணை, பா.123, வரிகள் 7-8
67. மேலது., 307, வரிகள் 3-4
68. மேலது., 27, வரிகள் 1-4
69. பட்டினப்பாலை, 100-104
70. நற்றிணை, 106, வரிகள் 3-4
71. குறுந்தொகை, பா.303, வரிகள் 6-7
72. நற்றிணை, பா.363, வரிகள் 9-10
73. மேலது., பா.123, வரிகள் 10-11
74. அகநானூறு, பா. 280, வரிகள் 3-4
75. கலித்தொகை, பா. 20, வரிகள் அடி.2
76. அகநானூறு, பா.20, வரிகள் 5-6
77. கலித்தொகை, பா.131, வரிகள் 10-11
78. நூற்பா, 331, வரிகள் 4-8
79. புறநானூறு, பா. 116,வரிகள் 6-8
80. பொருநற்றுப்படை. பா.187
81. மேலது., பா.311
82. அகநானூறு, பா.330, அடி.2
83. பரிபாடல், பா.7, வரி.25-26
84. ஐங்குறுநூறு, பா.128, வரிகள் 2-3
85. அகநானூறு, பா.320, வரிகள் 11-12
86. புறநானூறு, பா.11 வரிகள், 3-4
87. ஐங்குறுநூறு, பா. 375, அடி.1
88. குறுந்தொகை, பா.114, வரி.1-5
89. பரிபாடல், பா.10, வரிகள் 104-105
90. அகநானூறு, பா.110, வரிகள் 6-7
91. பரிபாடல், பா.62, 66
92. நற்றிணை, பா.172, வரிகள் 1-3
93. சிறும்பாணற்றுப்படை, பா.55, வரி.55-61
94. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், காடுகாண் காதை, 64-66

95. அகப்பொருள் விளக்கம், அகத்திணையியல், நூ.9

96. புறநானூறு, பா.326, வரிகள். 8-10

97. மேலது., பா.324, வரிகள் 1-8

98. மேலது., பா.325, வரிகள் 10-12

99. மேலது., பா.104, வரிகள் 2-

100.மேலது., பா.94, வரிகள் 1-5

101. தொ. இரா. நஞ்சுண்டன், காப்பியங்களில் விளையாட்டுக்கள், ப.34

102.புறநானூறு, பா.3, வரிகள் 2-4

103.அகநானூறு, பா.17. அடி.2

104.மேலது., பா.49. அடி.1

105.மேலது., பா.66, அடி.24

106.நற்றிணை, பா.79, வரிகள் 2-3

107. மதுரை தமிழ்ப்பேரகராதி, ப.389

108.அகநானூறு, பா.275, வரிகள் 1-3

109.மேலது., பா.259, வரிகள் 13-15

110. மேலது., பா.269, வரிகள் 3-5

111. நற்றிணை, பா.179, வரிகள். 1-3

112. கலித்தொகை, பா.81, வரிகள் 7-9

113. பரிபாடல், பா. 23-25

114. குறுந்தொகை, பா.61, வரிகள் 1-3

115. பரிபாடல், பா.24-25

116. கலித்தொகை, பா. வரிகள் 4-9

117. புறநானூறு, பா. 319, வரிகள் 10-11

118. பரிபாடல், பா.7

119. மேலது., பா.40

120.நற்றிணை பா.58, வரிகள் 1-4

121. கலித்தொகை, பா.79, வரிகள் 18-19

122.அகநானூறு, பா. 54, வரிகள் 17-19

123.கலித்தொகை, பா.86, வரிகள்.7-8

124.மேலது., பா.80, வரிகள் 4-9

125.குறுந்தொகை, பா.48, வரிகள் 1-3

126.பெரும்பாணாற்றுப்படை, 322-323

127.அகநானூறு. பா. 49, அடி. 1

128. குறுந்தொகை. பா.396, வரிகள் 1-2

129. நற்றிணை, பா.140, வரிகள் 6-7

130. அகநானூறு, பா. 17, வரிகள். 1-2

131. புறநானூறு, பா.36, வரிகள் 3- 4

132. பரிபாடல், பா. 8, வரிகள் , 106-107

133. பெரும்பாணாற்றுப்படை, பா.335

134. மு.ரா. கந்தசாமி கவிராயர் (க.ஆ), பெரும்பாணாற்றுப்படை (க.த), ப.31

135. புறநானூறு, பா.43, வரிகள் 2-5

136. பதிற்றுப்பத்து, பா.43, வரிகள் 2-5

137. புறநானூறு, பா.116, வரிகள் 18-19

138. நற்றிணை, பா.172, வரிகள் 1-3

# இயல் - 4

## குழந்தை உளவியலின் கூறுகள்

இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள கருத்தும் பாட்டமைப்பும் அதன் உத்திகளும் உளவியலின்படி அமைதல் வேண்டும். இல்லையெனில் அப்பாட்டுக் காலம் கடந்தும் நிலைபெறுதல் இயலாது. மனித இனத்தின் வாழ்வியலில் உளநலக் கூறுகளுக்கு முக்கிய இடமுண்டு. அவ்வகையில் உலக மனித இனத்தின் உளவியல் இயல்புகள் அனைத்தும் ஒரு தன்மைத்தே. எனவே, அதன்படி அமைந்த படைப்புகள் அனைத்தும் சுவைப்பயப்பனவாய் விளங்குகிறது. இலக்கியங்கள் கூறும் வாழ்க்கை அனுபவங்கள் அனைத்தும் உளவியலின் வெளிப்பாடுகளாகும். அவற்றினின்று வெளிப்படும் உணர்வுகளும் படிப்போரின் உளவியல் உணர்வுகளும் ஒத்திசைந்து, அதே அனுபவத்தை தர முயல்கின்றன. அவ்வகையில் சங்க கால மக்களின் வாழ்வியல் ஒன்றாக விளங்கும். குழந்தை இன்பத்தின் கருத்தமைவுகள் குழந்தைப் பற்றியச் சிந்தனைகள் செம்மையாகக் கையாளப்பட்டுள்ளன. அவற்றில் தற்காலத்தில் அமைந்த நவீன உளவியலுடன் ஒப்பிட்டு ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

### தொல்காப்பியம்

தமிழின் தொன்மை நூலான தொல்காப்பியத்தில் உளவியல் கூறுகள் பல இடம் பெற்றுள்ளன. அவற்றுள் மனம் பற்றிய செய்தியும் காணக்கிடைப்பதால் தொல்காப்பியரின் திறம் போற்றப்படுகிறது. மனித மனத்தின் இயல்புகள் மிகவும் மாறுபட்டவை. மனம், அகப்புறச் சூழல்கள் வழி, மனிதனை இட்டுச்செல்லும் ஆற்றலுடையன. மனம், அறிவு, உணர்வு ஆகிய வழிகளில் செயல்படுவதால், மனித இனம் சிறப்புறுகிறது. விலங்கிலிருந்து மனிதனை வேறுபடுத்திக் காட்டக்கூடியது. மனம் என்பதையும், அதன் பண்புகளையும் தமிழர்கள் நன்கு அறிந்திருந்தனர். தொல்காப்பியர் மனதை ஆறாவது அறிவு என்று சுட்டுகிறார்.

**''ஆறறிவதுவே அவற்றோடு மனனே''**[1]

என்றும்,

**''மக்கள்தாமே ஆறறிவுயிரே**
**பிறவும் உளவே அக்கிளைப்பிறப்பே''**[2]

என்றும் மனம் குறித்துக் கூறுவார்.

இந்நூற்பாவிற்கு, "பிறப்பு என்றதனால் குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன எனப்படும் மனவுணர்வு உடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கும் என்பது. 'தாமே எனப் பிரித்துக் கூறினமையான் நல்லறிவு உடையார் என்பதற்குச் சிறந்தார் என்பதும் கொள்க''[3] என்றும் பேராசிரியரின் விளக்கம் ஏற்கத்தக்கதாகும்.

மனத்தின் நுன்மையான செயல்பாடுகளைக் கூர்ந்து நோக்கி மெய்ப்பாட்டியல் வகுத்த தொல்காப்பியரின் திறம், பழந்தமிழரின் அறிவு நுட்பத்தினை விளக்குகிறது.

களவு, கற்பு, ஒழுக்க நிலைக்கலங்களில் தலைவன், தலைவியின் மனநிலைகளையும், அடையும் மாறுபாடுகளையும் சங்கப் புலவர்கள் செம்மையாக விளக்கியுள்ளமையால், மிகப் பழங்காலத்திலேயே தமிழகத்தில் முறைமை சார்ந்த உளவியல் அணுகுமுறை நிலவியுள்ளமையை அறிய முடிகிறது.

இலக்கியத்தைப் படைத்தற்கு உளவியல் பின்புலமும் ஓர் இன்றியமையாத் தேவை எனத் தொல்காப்பியர் உணர்ந்திருந்தமையால், பொருளதிகாரத்தில் 'மெய்ப்பாட்டியல்' என ஓர் இயல் வகுத்தார். எண்வகை மெய்ப்பாடுகளையும், அதன் நிலைக்களன்களையும், அகத்திணைக்குரிய மெய்ப்பாடுகளையும், பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளையும் மிக விரிவாகத் தொல்காப்பியர் விளக்கியிருப்பதால் அவரது காலத்திற்கு முன்பே முறைப்படுத்தப்பட்ட உளவியல் அணுகுமுறை, உளவியல் ஆய்வு இருந்திருக்கக்கூடும் என்பதை அறியமுடிகிறது.

**பால்**

தொல்காப்பியம் பாலுணர்வு பற்றிய செய்தியை வெளிப்படுத்துகிறது. ஆடவன் ஒருவன் பெண்ணொருத்தியைக் காண்கிறான். அவள் மொழியைக் கேட்கிறான். அவள் மனத்தைக் மோகிக்கின்றான், அவள் மெய்யைத் தீண்டுகிறான். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து உற்று அறியும் போது, உள்ளம் காமத்தின் கொள்கலம் ஆகின்றது. உடம்பில் சில மாற்றங்கள் நிகழ்கின்றன.இவையெல்லாம் புணர்ச்சியில் முடிவடையும். காதல் புறநிலைகளைக் கண்டு கூறுமளவே அறிவியல் செய்யக் கூடியது. ஒத்த வயதுடையோர் விருப்பப்பட்டு காதலில் ஆட்படுவர் என்பதனை ஒத்த உளவியல் செயல்பாடு எனலாம். இதனை தொல்காப்பியர்,

**''ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பாலதானையின்**
**ஒத்த கிழவனும், கிழத்தியும் காண்ப''[4]**

*எனும் நூற்பாவில் உயர்ந்த பாலின் ஆணையால் என்பது – நல்லூழின் ஏவலால்-காதற்காட்சி நிகழும் என்பார் தொல்காப்பியர். மேலும், இன்பம் குறித்த தம் சிந்தனையை,*

**''எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்''[5]**

*என்பார். எனின் தொல்காப்பியர் உளம் குறித்த சிந்தனை உடையவராக விளங்குகிறார்.*

## சங்க இலக்கியங்கள்

*சங்க இலக்கியங்களுள், உளவியல் கூறுகளைப் பெரிதும் உடையதாக அகத்திணைப் பாடல்கள் காணப்படுகின்றன. "தமிழினத்தின் நெஞ்சியல் அல்லது உள்ளியல் அகத்திணைக்குக் கருவை வழங்கிற்று. அகத்திணைத் தோற்றம், சமுதாயவியல், மானிட நிலவியல், தொல் தமிழினத்தின் உளவியல் என்னும் முக்கூற்றுத்தன்மைகளைச் சார்ந்து நிற்பது, தமிழினத்தின் தனி நெஞ்சியல் காண அகத்திணை எண்ணத்தையே உண்டாக்குகிறது.''[6] எனும் வ.சுப.மாணிக்கனார் கூற்று இங்கு எண்ணத்தக்கதாகும். தமிழில் நிலையான, விரிவான இலக்கிய உளவியல் நூலொன்றை எழுதுவதற்குப் பெரும்பான்மையான மேற்கோள்களைச் சங்க இலக்கியத்திலிருந்துதான் எடுத்துக்காட்ட வேண்டியுள்ளது.*

*"சங்க இலக்கியத்திற்குப் பிறிதொரு பெயர் சுட்டுக என்று கேட்டால் தயங்காமல் 'உளவியல் இலக்கியம்' எனக் குறிப்பிடலாம். அகத்திணைப் பாடல்கள் நூற்றுக்கு நூறும், புறத்திணைப் பாடல்கள் நூற்றுக்கு எழுபத்தைந்தும் 'உளவியல்' பற்றியனவே ஆகும்''[7] என்பார் தமிழண்ணல்.*

*அகப்பாடல்கள் பாலியல் செய்திகளை அறிவியல் முறையில் விளக்குகின்றன. 'பாலியல் முறையாக அறிந்துகொள்ள வேண்டிய ஓர் அறிவியல் பாடமாகும்' என்பதை அகப்பாடல்கள் உணர்த்துகின்றன.*

*"அகத்திணை ஒரு பாலிலக்கியம். பெயரில்லாதார் வாழ்க்கையிலிருந்து காம நுணுக்கங்களைக் கற்றுக்கொள்கிறோம். காமம் பற்றிய ஆணுடல், பெண்ணுடலின் கூறுகளையும், இயற்கை, செயற்கை, திரிபு ஆகிய மனக்கூறுகளையும், கரவின்றிப் பட்டாங்குச் சொல்வது பாலிலக்கண நூல்''*[8] *என்பர் வ.சுப.மாணிக்கம். சங்க இலக்கியத்தில் உளவியல் கூறுகள் பல இடம்பெற்றுள்ளன.*

*பால் குறித்த சிந்தனைகள் சங்க இலக்கியங்களில் வெளிப்படுத்தப் பட்டுள்ளன.*

**''பால்வரைந்தமைத்தல் அல்லது அவர்வயின்**
**கால்பளந்தறிதற்கு யாஅம்யாரோ''**[9]

*எனும் குறுந்தொகைப் பாடலும்,*

**''பிறிதொன்றாகக் கூறம்**
**அங்கும் ஆக்குமோ வாழிய பாலே''**[10]

*எனும் ஐங்குறுநூற்றுப் பாடலில் 'பால்' குறித்து விளக்குவதை காணலாம்.*

**உளவியல்**

*தற்போதைய இயந்திர வாழ்க்கையில் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை பாதிக்கப்படும் ஒரே காரணம் மன உளைச்சல். அதற்கான காரணங்களைக் கண்டறிதல், குணமாக்குதல் பற்றிய படிப்புதான் உளவியல் (Psychology) எனப்படும். உளவியல் என்பது மனிதனின் மனதையும், நடத்தையையும் பற்றி விளக்குவது. தனிமனிதனின் புலன் உணர்வு, அறிவாற்றல், செயல்திறன், மன அழுத்தம், ஆளுமை, நடத்தை ஆகிய அனைத்தையும் ஆராய்வது உளவியலாளர்களின் பணி ஆகும்.*

**உளவியல் – விளக்கம்**

*மனோதத்துவம், உளவியல் எனத்தமிழிலும், சைக்கலாஜி (Psychology) என ஆங்கில மொழியிலும் கூறப்படும் சொல்லானது 'ஆன்மா' அல்லது 'ஆவி' (Soul) எனும் நேரடிப் பொருளைத் தருவதாகும்.''*[11] *என்பர்*

*முதன்முதலில், உளவியலை 'ஆன்மாவைப் பற்றிய அறிவியல்' என்று வரையறுத்தனர். சைக்கலாஜி (Psychology) எனும் சொல், 'சைக்கி' (Psyche) லோகஸ் (Logos) எனும் கிரேக்கச் சொற்களை மூலமாகக் கொண்டதாகும்.*

‘சைக்கி’ என்றால் ‘ஆன்மா’ அல்லது ‘ஆவி’ என்று பொருள் ‘லோகஸ்’ என்றால் ‘அறிவியல்’ அல்லது அறிவுத்துறை, அல்லது ஒருவனுடைய குணம், அல்லது செயல் என்று பொருள்தரும்’’[12] என்பர்.

“மனிதனுடைய வெளிப்படையான செயற்பாடு மட்டுமல்லாது அவனுடைய சிந்தனை வளம், உணர்ச்சி வயப்படும் பாங்கு, மகிழ்ச்சி, அச்சம் அல்லது துணிச்சல் போன்ற உணர்வுகள் அனைத்தையும் ஒட்டுமொத்தமாக ஆய்வதை மனோதத்துவம் அல்லது உளவியல்’’[13] என்பர். இக்கூற்றுகளிலிருந்து உளவியலுக்கான அடிப்படைக் காரணத்தை ஒருவாறு உணரலாம்.

**உளவியல் குறித்த அறிஞர்களின் விளக்கம்**

உளவியல் குறித்த பல்வேறு விளக்கங்களை அறிஞர்கள் பலர் காலந்தோறும் விளக்கியுள்ளனர். “உள்ளத்தின் வாழ்க்கையைப் பற்றியதோர் அறிவியலே உளவியல்’’[14] என்பர். வில்லியம் ஜேம்ஸ். ஆனால், “மனிதனின் இயற்கையைப் பற்றி ஆராய்வதே உளவியல் எனக் கூறியவர் போரிங்’’[15] ஆவார். பின்னர், அறிவியல் போக்கில் ஆராயும் துறையாகக் கொள்ளப்பட்டது. ஆதலின், “மனிதனைப் பற்றிய உண்மைகளை விளக்கும் அறிவியற் துறைகளுள் ஒன்றே உளவியல்’’[16] என வரையறை செய்கிறார் ஜான் டீயி *(John Deway).* “தனிமனித நடத்தை உளவியல் எனக் கொள்ளப்பட்டதால் சூழ்நிலை சம்பந்தப்பட்ட தனியவனின் நடவடிக்கைகள் பற்றியதோர் அறிவியல்’’[17] என்கிறார் ஆர்.எஸ். உட்வொர்த்.

எனவே “உளவியல் என்பது ஓர் அறிவியல். ஓர் உயிரியைப் பற்றி நன்கு அறிந்து கொள்வதும், உயிரியின் எல்லா நடத்தைகளையும் கட்டுப்படுத்துவதும் இதன் நோக்கமாகும்.’’[18] எனும் அறிஞர் மக்டூகலின் *(Madougall)* கருத்து ஏற்புடையதாகும். இவ்வாறாக அறிஞர்கள் பலரும் உளவியலுக்குரிய விளக்கங்களை பலவாறு அளித்துள்ளனர்.

**உளவியலின் வகைகள்**

உளவியல் பலதுறைகளைக் கொண்டதாக விளங்குகிறது. அது, பல்வேறு பிரிவுகளை உள்ளடக்கியதாகும். அவை,

1. உடலியல் உளவியல் – *Physiological Psychology*
2. குழந்தை உளவியல் – *Child Psychology*
3. விலங்கு உளவியல் – *Animal Psychology*

4. *பிறழ்நடத்தை உளவியல் – Abnormal Psychology*
5. *உள மருந்தகம் - Psychopharmacology*
6. *சமூக உளவியல் – Social Psychology*
7. *கல்வி உளவியல் – Educational Psychology*
8. *பொறித்துறை உளவியல் - Industrial Psychology*
9. *இராணுவத்துறை உளவியல் - Military Psychology*

*என்பனவாகும்.*

### உளவியல் அணுகுமுறைகள்

*உளவியல் நோக்கில் இலக்கியத்தைப் பல கோணங்களில் அணுகலாம். இயல்புநிலை, உணர்ச்சி நிலை, மயக்கநிலை, தனிநிலை, ஐயநிலை, சுட்டுநிலை, கால வளர்ச்சி நிலை, சமூக நிலை, சுற்றுச் சார்புநிலை, உறவுநிலை போன்ற பலவித நிலைகளை அடிப்படையாகக் கொண்டு உளவியல் சிந்தனையால் இலக்கியத்தை அணுகலாம் என்பர் அறிஞர்.*

### அணுகுமுறைப் பயன்கள்

*இலக்கியத்தில் காட்டப்படும் வாழ்க்கை இயல்புகளின் உண்மைகளைச் சரியாக அறிய உளவியல் அணுகுமுறை மிகவும் உதவுகிறது. இதன்வழி, மனித மனத்தில் ஏற்படும் சிக்கல்களையும், குழப்பங்களையும் அறிய வாய்ப்பு கிடைக்கிறது.*

*“வாழ்வின் துன்பங்களை உரிய காரணங்களால் தெரிந்து, அவை தீர வழிகாண்பதற்கு இத்தகு அணுகுமுறை ஆய்வு உதவும். சமுதாயத்தை நல்லமுறையாக மாற்றி அமைக்கவும் உளவியல் சிந்தனை பயன்படும்.’’*[19] *என்கிறார் அ.நா. பெருமாள். உளவியல் சிந்தனைகளின் பல கூறுகளையும் நன்குணர்ந்து ஆய்வு மேற்கொண்டால், அது இலக்கிய ஆய்வின் மேன்மைக்குப் பேருதவிபுரியும். நுட்பமான சிந்தனை, உளவியல் அணுகுமுறைக்குத் தேவை. இலக்கியச் சிந்தனையை உளவியல் அணுகுமுறையில் நோக்கிடின் பயன்மிக்க பல கருத்துக்கள் கிடைக்கும் என்று அறிஞர்கள் உரைப்பர்.*

### தற்கால உளவியல் அறிஞர்களின் கருத்து

*தற்கால உளவியலாளர்கள், கீழ்நிலை நாட்டமும், உயர்வான செயலூக்கம், (Motivation) அச்சம், சினம் போன்ற மெய்ப்பாடுகளும் மனிதனிடத்து உள்ளன என்று கருதுகின்றனர். “செயலூக்கத்திற்கு (Motivation) அடிப்படையாகப்பசி,*

தாகம், தூக்கம், கழிவு, அல்லது பால் எனப்படும் பல விடாய்கள் அமைந்துள்ளன. இவை உடல் சார் விடாய்கள் *(Physiological Needs)* ஆகும்.[20] இவை அனைத்தும் பிறப்பால் அமைகின்றன. குழந்தைகள் வளர, வளர, உடல் சார் விடாய்கள் பூர்த்தி செய்வதற்குத்தக்க உளச்சார் விடாய்கள் தோன்றுகின்றன. மதிப்புப் பெறல் *(Recognition),* கூடி வாழ்தல் *(Belongings),* அன்பு *(Affection)* வெற்றி பெறல் *(Achievement)* போன்ற உடல்சார் விடாய்கள் மனிதனிடத்து மிகவும் முக்கியமாக அமைகின்றன. இவை பூர்த்தி அடையாத நிலையில் ஒருவனுக்கு உடல் சேதம் ஏற்பட்டு, முடிவில் மரணம் ஏற்படும். சில வேளைகளில் உள்ளக்கோளாறுகள் *(Psychosomatic Disorders)* ஏற்பபடுகின்றன''[21] என்பர்.

உளக்கோளாறுகளினால், உள நோய்கள், சமூக விரோதச் செயல்களில் ஈடுபடும் போக்கு போன்றவை ஏற்படுகின்றன. செல்வ வளமுடைய மேலை நாடுகளில் உளச்சார் விடாய்கள் நிறைவு பெறாத நிலையில் உளக்கோளாறுகள் மிகுதியாக ஏற்படுவதை அறியலாம்.

**உளவியலின் வளர்ச்சி**

உள்ளத்தின் இயல்புகளையும், அவற்றின் செயல்பாடுகளையும் பகுத்து விளக்கும் அறிவியல் துறையினை, 1960 ஆம் ஆண்டு வரையில் 'உளவியல்' எனும் பெயரிட்டு அழைத்தனர். பின்னர், அதன் முதன்மையையும் இன்றியமையாமையையும் கருதி, "நடத்தையைப் பற்றிய அறிவியலே உளவியல்''[22] எனப் போற்றும் வழக்கம் உண்டாயிற்று. உளவியல் துறை நாளுக்கு நாள் விரிந்தும், பரந்தும், வளர்ந்தும், வருகிறது. அதன் துறைகள் பெருகியுள்ளன. பொதுநிலையில், உளவியலின் அடிப்படைக் கூறுகளைக் கொண்டு இலக்கியத்தை ஆராயும் முயற்சி வளர்ந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

"உளவியலில் சிறப்பிடம் பெறும் உளநிலைப் பகுப்பாய்வு *(Psycho Analysis),* பிறழ்நிலை உளவியலும் (Abnormal Psychology) சமூக உளவியலும் *(Social Psychology)* இலக்கியத் திறனாய்வின் வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்து வருகின்றன.''[23]

"இலக்கியத் திறனாய்விற்கு உளவியல் கொள்கைகளை வகுத்துக் கொடுத்த அறிஞர்கள் சிக்மண்ட் பிராய்ட் *(Sigment Freud 1856-1936)* கார்ல் யூங் *(Carl Jung 1875-1961),* ஆல்பிரட் ஆட்லர் *(Alfred Adler 1870-1937)* எனும் மும்மூர்த்தியாளாவர். பிராய்டின் கொள்கை அடிப்படையில் பல புதிய விளக்கங்களையும் மாறுபட்ட எண்ணங்களையும் யூங், ஆட்லர் ஆகியோர்

*வழங்கினர்.''[24] இவர்கள் பிராய்டின் சீடர்கள் அல்லர். ஜோகன்னஸ் முல்லர், இ.எச். வீபர், எச்.ஹெல்ம் ஹோட்ஸ், ஜி.டி.பெக்னர் வில்ஹெம் உண்ட், பிரான்சிஸ் கால்டன் போன்றோர் உளவியல் துறையில் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவார்.''[25] இவர்களின் கண்டுபிடிப்புகளிலும் எழுத்துகளிலும், பிராய்டின் தாக்கம் காணப்படுவதால் பிராய்டு இத்துறையின் தந்தையாகக் கருதப்படுகிறார்.*

**குழந்தை உளவியல்**

*குழந்தையின் பிறப்பு முதல் பருவம் அடைவதற்கு முந்திய நிலை வரையிலான ஒவ்வொரு கால கட்டத்திலும் அதன் உடல் வளர்ச்சி, மன வளர்ச்சி, அறிவுத்திறன், சமூகச் சார்பு வளர்ச்சி ஆகியவற்றின் செயல்பாட்டினை ஆராய்வதற்கு முற்படுதலே குழந்தை உளவியல் ஆகும்.*

**குழந்தை உளவியல் – விளக்கம்**

*இளங்குழந்தையின் உடல் வளர்ச்சி முதலாக, ஐம்புலனுணர்ச்சி, மனவளர்ச்சி, இயல்பான நடத்தை வெளிப்பாடு, பேசுந்திறன், முதிர்ச்சி எனப் பல்வேறுபட்ட நிலைகளையும் குழந்தை உளவியல் ஆராய்கிறது. குழந்தையின் நடத்தையில் புலப்படும் ஆளுமை வெளிப்பாட்டினை உணர்த்தும் விதமாகவும், சமூகத் தொடர்பு வளர்ச்சியில் குழந்தையின் பெற்றோர், ஆசிரியர் மற்றும் சமூக உறவுகள் ஆகியவற்றை உள்ளடக்கியதாகவும் குழந்தை உளவியல் அமைகிறது.*

**தாய் – குழந்தை உறவு**

*நாம் வாழும் உலகில் குழந்தைப்பேறு என்பது மிகச் சிறந்த ஒன்றாகும். உலகெங்கிலும் பெண்மையின் முழுமையாகத் தாய்மையைக் கருதுகின்றனர். புத்திரப்பேறு என்ற தத்துவம் அனைத்து இன்பத்துக்கும் ஊற்றாய் இருந்து வந்திருக்கிறது.*

*"பெண்ணின் தனித்தன்மையாகக் கருதப்படும் ஆக்கிரமிப்புப் பண்பும் பாலுறவு நாட்டமும் அழுத்தப்பட்டுத் தாய்மை என்னும் ஓர் இடம் நோக்கித் திருப்பிவிடப்படுகின்றன''[26] என்பர் உளவியலாளர் தன்னிகரற்ற தாய்மையின் விளைவினால் குழந்தைக்கும், தாய்க்கும் இடையே காணப்படும் உறவு நெருக்கம் மிகுந்ததாகக் காணப்படுகிறது.*

*பிள்ளையை ஈன்ற தாய்க்குத் தன் பிள்ளையின் பசியைப் போக்கவேண்டும் என்ற எண்ண வெளிப்பாட்டின் காரணமாகத் தாய்ப்பாலானது இயல்பாகச் சுரக்கின்றது. இந்நிலையைக் கோவூர்கிழார் என்னும் புலவர்*

**''உடும்பு உரித்தன்ன என்பு எழு மருங்கின்**
**கடும்பின் கடும்பசி களையுநீர்க் காணாது,**
**சில் செவித்து ஆகிய கேள்வி நொந்து நொந்து,**
**ஈங்கு எவன் செய்தியோ? – பாண! 'பூண் சுமந்து'**
**அம் பகட்டு எழிலிய செம் பொறி ஆசத்து**
**மென்மையின் மகளிர்க்கு வணங்கி, வன்மையின்**
**ஆடவர்ப் பிணிக்கும் பீடு கெழு நெடுந்தகை**
**புனிறு தீர் குழவிக்கு இலிற்று முலை போல''**[27]

*என்னும் அடிகளில் பதிவு செய்துள்ளார்.*

*குழந்தையை வளர்ப்பது தாய்க்கு ஓர் ஆனந்தமான அனுபவமாகும். ஒவ்வொரு கணமும் தாய் அந்த ஆனந்தத்தை அனுபவித்துத் தன் குழந்தையை வளர்க்கிறாள். இதனை மெய்ப்பிப்பதைப்போல,*

**''புதல்வற் கவைஇய தாய்''**[28]

*என்ற ஐங்குறு நூற்றுப் பாடல் அடிகள் அமைந்துள்ளதைக் காணலாம்.*

*தாயுடன் வெளியிடங்களுக்குச் செல்லும்போததெல்லாம் குழந்தை பல காட்சிகளைக் கண்டு மகிழவும், பல சத்தங்களைக் கேட்டுப் பழகிக் கொள்ளவும், சில புதிய நபர்களைக் காண்பதற்கு வாய்ப்புகளும் ஏற்படுகின்றன. தாயின் மூலமாகக் குழந்தைக்கு கிடைக்கின்ற அனுபவங்கள் அனைத்தும் அவற்றின் உள்ளத்தில் நீங்கா இடம்பெற்று உள்ளத்தை ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது. உள்ள ஆரோக்கியம் குழந்தை வளர்ந்த பின்னர் சிறந்த மனிதனாக மாறுவதற்குத் துணைபுரிகிறது. இதனை அரண் செய்யும் வகையில், "தாயுடன் கொண்டுள்ள உள்நிறைவு அனுபவங்கள் குழந்தையுடைய முதல் அன்புத் தொடர்புக்கு ஆதாரமாகின்றன. இது குழந்தை மனத்தில் ஆழமாகப் பதிகிறது. பின் பிறரோடு கொள்ளும் அன்புத் தொடர்புக்கும் இது ஆதாரமாகின்றது''*[29] *என்னும் கருத்து அமைந்துள்ளது.*

**குழந்தையும் சமூக உறவும்**

*புதிதாக ஒருவரைக் காணுகின்ற குழந்தை முதலில் பயப்படுகிறது. அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று சந்தேகிக்கிறது. ஆனால் நிறையக் குழந்தைகளுடனும் பெரியவர்களுடனும் பழகவேண்டும் என்ற ஆசை தொடர்ந்து ஏற்படும்போது, தன் வாழ்க்கையில் மிகுந்த அன்பும் நட்பும் கொண்டபெரிய மனிதர்களிடம் நெருங்கிய உறவும் ஆழ்ந்த பற்றும் ஏற்படுகிறது. "எதார்த்தத்தின் பாலான*

குழந்தையின் உறவு ஆண்டு முதலே சமூக உறவாகும்''[30] என்பர். அன்பு கலந்த அரவணைப்பும் கவனமும் பாதுகாப்பும் தொடர்ந்து பெறும் குழந்தைகள் திடத்தினையும் பாதுகாப்பு உணர்வும் பெற்றவர்களாகத் திகழ்வர் என்பது உண்மை.

குடும்பத்தில் பெற்றோரிடமும் தன் சகோதர சகோதரிகளிடமும் குழந்தை கொண்டுள்ள இணக்கமான உறவுமுறையே சமூகத் தொடர்பில் தனது வயதினையுடைய மற்ற குழந்தைகளுடன் சுமுகமாகப் பழகும் விதத்தை ஏற்படுத்தும் "குழவிப் பருவத்திலும் குழந்தைப் பருவத்திலும் குடும்பம்தான் மிக முக்கியமான சமூகக் குழுவாக இருக்கின்றது''[31] எனக் குறிப்பிடுவர் பெற்றோரும் மற்றோரும் தன் மீது செலுத்தும் அன்புக்கு மட்டுமல்லாது அதிகாரத்திற்கும் கட்டுப்பட்டுப் போகும் நிலை ஏற்படுவதைக் குழந்தை கொஞ்சம் கொஞ்சமாக அறிந்துகொள்கிறது எனலாம்.

சமூகம் ஒழுக்கநெறிகள், விதிமுறைகள் ஆகியவற்றிக்கு உட்பட்டது இச்சமூகத்தின் உறுப்புகளான குடும்பங்களும் இந்நெறிமுறைகள், கட்டுப்பாடுகள் ஆகியவற்றுக்கு உட்பட்டவையே. ஒழுக்கமும் கட்டுப்பாடும் நிறைந்த குடும்பத்தில் பிறக்கும் குழந்தை இவ்விதிகளுக்கு உட்படுத்தப்பட்டு நடத்தப்படுகிறது. குடும்பத்தில் நெருக்கமான கட்டுப்பாட்டிற்குள் வளர்க்கப்பட்ட குழந்தை, தந்தை நிலையில் தன்னுடைய குழந்தையைச் சுதந்திரமாகப் பேசுவதற்கு அனுமதிக்கப்படுவதை அறியமுடிகின்றது. இதன்படியாக குழந்தை பருவத்திலேயே அடிப்படை சமூக அமைப்பின் மாதிரித்தோற்றம் (Basic Social Pattern) அதன் அடிமனத்தில் ஆழப் பதிந்துவிடுகிறது''[32] என்று குறிப்பிடுவர் அ. அகமது பஷீர்.

**குழந்தை பிறரைச் சார்ந்திருத்தல்**

குழந்தை தன்னுடைய அடிப்படைத் தேவைகளின் நிறைவேற்றத்திற்காகவும், பாதுகாப்பிற்காகவும் பிறரைச் சார்ந்திருக்கும் நிலை ஏற்படுகிறது. "இச்சமூகம் தன்னிடம் என்ன எதிர்ப்பார்க்கின்றதோ அதைச் செய்யக் கற்றுக்கொள்கிறான். அதன் விளைவாக உடனுறைவு (Compass) சார்பு (Belonging) ஏற்பு (acceptance), பாட்டு (approval) முதலிய உளவியல் தேவைகள் பிறக்கின்றன''[33] என்பர் உளவியலார். சமூகச் சூழல்கள் குழந்தையின் மனவளர்ச்சியைத் திசை திருப்பிவிடாத வண்ணம் பெரியோர்கள் அவர்களைக் கண்காணித்தல் அவசியமாகும். குழந்தைகளின் உடல் வளர்ச்சியினைப் போன்று உள்ள வளர்ச்சியும் வளருவதற்கு தக்க சூழல்கள் அமைத்துத் தரும்படி முயல வேண்டும்.

*அறிவார்ந்த கருத்துக்களைக் குழந்தையின் இளம் உள்ளத்தில் விதைத்துவிட்டால் பின்னாளில் அவர்கள் திசைமாறிச் செல்லாமல் நற்பயனை விளையச் செய்வதற்கு ஏதுவாகும்.*

*சங்ககால மக்கள் குழந்தைப் பேணுதலை கண்ணும் கருத்துமாகச் செய்து வந்தனர். இதனை,*

**''குழவி கொள்பவரின் ஓம்புமதி**
**அளிதோ தானே, அதுபெறல் அருங்குரைத்தே''**[34]

*இதனை, புறநானூற்றுப் பாடல்களின் வழியாக அறியமுடிகின்றது.*

**''பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி,**
**ஒரு மகன் அல்லது இல்லோள்,**
**செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே''**[35]

*என்ற பாடல் அடிகளின் மூலமாகக் குழந்தை தான் வளரும் பருவத்தில் தனது அடிப்படைத் தேவைகளை நிறை வேற்றிக்கொள்ளவும் தன்னை ஒரு வீரனாக ஆக்கிக் கொள்வதற்கும் பிறரைச் சார்ந்திருத்தலை அறியமுடிகிறது.*

*பெற்ற தாய் தன் குழந்தையை அன்பிலும் வீரத்திலும் மட்டுமல்லாமல், அற ஒழுக்கங்களிலும் சிறந்தவன் என்று கேட்கத்தக்க நிலையிலே குழந்தையை வள்ளுவர்,*

**''ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்''**[36]

*என்ற குறட்பாவில் சிறப்பிக்கின்றார். குழந்தைப்பேறு இல்லாத மாந்தர் புறவாழ்க்கையிலும், அகவாழ்க்கையிலும் இன்பம் இன்றித் தவித்த நிலையினைத் தோலாமொழித்தேவர் சூளாமணியில் விளக்கும்போது,*

**''தொக்கின மலர்துதை விலாத சோலையும்**
**புக்கிளந் தாமரை நகாத பொய்கையும்**
**மிக்கிளம் மறைவிரி விலாத வந்தியும்**
**மக்களை யிலாததோர் மனையு மொக்குமோ''**[37]

*என்று குறிப்பிடுகிறார்.*

## தாலாட்டு

*வாழ்க்கையின் அணிகலன்களாய் இருப்பவர்கள் குழந்தைகள். குழந்தையின் வாழ்க்கையை இலக்கிய வடிவில் வெளிப்படுத்தத் தாலாட்டு உதவுகின்றது. இசையின் மூலம் குழந்தையின் அயர்வைப் போக்கி உறங்கச் செய்வது தாலாட்டாகும்.*

*குழந்தையின் அழுகை தாயின் இளமைப்பருவ வாழ்க்கைப் பற்றிய கற்பனையைத் தூண்டிவிடுகிறது. குழந்தை பிறக்கும்போது தாயின் உள்ளத்தில் தாலாட்டும் பிறந்துவிடுகிறது. தொட்டிலில் படுத்து உறக்கங்கொள்ளாமல் அழுது அடம் பிடிக்கின்ற குழந்தையைக் காண்கிற தாயின் உள்ளத்தில் கற்பனை ஊற்றெடுக்கின்றது. குறும்பு செய்யும் குழந்தையாக அதன் வளர்ந்த நிலையினை எண்ணி கற்பனையில் பாடுகின்றாள் தாய்.*

*தாய் தன் குழந்தையைப் பற்றிய விருப்பப் புனைவுகளையும் (Fantasies), பொய்த் தோற்றங்களையும் (illusions) இயற்கையில் காண்பது போன்று தாலாட்டுப் பாடுகின்றாள். தாலாட்டு என்கிற இனிமையான தமிழ்ப்பாட்டு, தமிழ் இனத்துக்குப் பெருமை சேர்க்கின்ற அற்புதமான இசைப்பாட்டாகும். பிறந்த நாளிலிருந்தே தாலாட்டினைக் கேட்டுப் பழகும் குழந்தைக்குப் பாட்டு மிகவும் பிடித்தமானதாக மாறிவிடுகின்றது.*

*உளவியல் அறிஞரான சிக்மண்ட் ஃபிராய்டு “அடக்கப்பட்டு அடிமனத்தில் தங்கிய நிறைவேறாத ஆசைகள் தாயின் தாலாட்டுப் பாடலாக வெளிப்படுகிறது.’’[38] என்பர். தாலாட்டு என்பது தாயின் குழந்தைப் பருவ வாழ்வோடு நெருங்கிய தொடர்புடையதாக அமைந்துள்ளது. இதனை, சமூக வாழ்வோடுத் தொடர்புபடுத்தி, “மக்கள் மனத்தில் உள்ள எண்ணங்கள், ஏக்கங்கள், இலட்சியங்கள், நம்பிக்கைகள், இன்பதுன்பங்கள் ஆகிய அனைத்திலும் தாலாட்டுப்பாடல்கள் பிரதிபலிக்கின்றன’’[39] என்று குறிப்பிடுவர்.*

*தாலாட்டின் வழியாகத் தாயின் உணர்ச்சி, சிந்தனை, அக அனுபவம், கற்பனை, வாழ்க்கை அனுபவம் ஆகியவற்றின் வெளிப்பாட்டினை உணர்ந்து கொள்ளலாம். இத்தகைய சிறப்புமிக்க தாலாட்டுப் பாடல்கள் குழந்தைகளுக்குத் தூண்டல் உணர்வையும் (Motivation) மொழி கற்கும் திறனையும் (Language Learning) புலன்களின் வழியாக (Perception) பெறும் தன்மையினையும் அளிக்கின்றன.*

### ஐம்புலன் உணர்வு

*பிறந்த குழந்தை அழுகையின் வழியாகத் தனது இருப்பை உலகிற்குத் தெரியப்படுத்துகிறது. பிறந்த சில மாதங்கள் வரையில் குழந்தை பசியையும், தாகத்தையும் அழுகையின் வழியாகவே வெளிப்படுத்துகிறது. அழுகையின் வழியாகத் தனது தேவைகளை நிறைவேற்றிக்கொள்கிறது. அறிந்த குழந்தை தொடர்ந்து அழுதே தனது கோபத்தையும், வருத்தத்தையும் நெற்றிப் புருவங்களைச் சுருக்கியும், வாயின்கீழ் உதட்டினை அளைத்தும் தெரியப்படுத்துகிறது. "தேவையை முன்னிட்டுக் குழந்தைகள் அழுகின்றபோது எதிரேயுள்ள மனிதர்களுக்கு ஏற்ப அழுகையொலிகளை எழுப்புகின்றனர்''[40] என இராசமாணிக்கம் என்ற உளவியல் அறிஞர் குறிப்பிடுகிறார்.*

*குழந்தைகள் செரிமானக் கோளாறு, களைப்பு, பசி, சோர்வு போன்ற உடல் காரணங்களுக்காகவும், விரும்பத்தகாத ஒலிகள், பயம், தூக்கத்தில் ஏற்படும் இடையூறுகள் போன்ற உளக்காரணங்களுக்காவும் அழுகின்றனர். குழந்தை அழுகையைப் போக்குவதற்காகத் தாய்மை உணர்வுடன் தாலாட்டுப் பாடுதல், உணவூட்டுதல், இயற்கைக் காட்சிகளைக் காண்பித்தல், அம்புலி காட்டுதல், வீட்டு வளர்ப்பு விலங்குகளின் மூலமாக விளையாட்டுக் காட்டுதல் போன்ற விருப்பமான செயல்களில் குழந்தையை ஈடுபடச் செய்பவள் தாய்.*

*குழந்தை பிறந்தவுடனே அதற்குத் தொட்டறியும் உணர்வும், சுவையறியும் உணர்வும் நன்கு அமையும். தொடக்கத்தில் பாலின் சுவையை மட்டும் குடித்து அறிந்ததால் குழந்தை இனிப்புச் சுவையை நன்கு உணர்ந்திருக்கின்றது.*

**''பால் இல் குழவி அலறவும், மகளிர்**
**பூ இல் வறுந் தலை முடிப்பவும், நீ இல்''[41]**

*பின்பு வளர்ச்சிப் பருவத்தில் அனைத்துச் சுவைகளையும் அறியும் வாய்ப்பு இயல்பாக அதற்குக் கிடைக்கிறது.*

*தொடக்க ஆண்டுகளில் குழந்தை புலன் உலகிலேயே வாழ்கின்றது. எதையும் பார்த்து அறியும் ஆவல் ஏற்படுகிறது. பின்னர் ஏதாவது ஒரு பொருளின்மேல் தன் கண்களைச் செலுத்தினால், ஆரம்பத்தில் அதன் கவனம் விரைவில் மாறக் கூடியதாகக் காணப்படும் குழந்தை வளர வளரத்தான் இந்தக் கவனம் சிறிது சிறிதாக நிலைக்கத் தொடங்குகிறது. ஆக்கத்திற்கான வேலை செய்ய உண்டாகும் தூண்டுதல்களினால் பெரியோர்கள் செய்யும் செயல்களைப்*

*பார்த்துக் குழந்தை தானும் அதைப்போல் செய்யத் தயாராகிறது. பிறந்து சில தினங்கள் சென்ற பின் வளர்ந்து வரும் அதன் அறிவு, காணும் பொருளை இனங்கண்டு கொள்கிறது. குழந்தைக்கு வயது பெருகப்பெருக புலன்களிடையே உணர்வு பெற்று வருகின்ற ஆற்றலும் தொடர்ந்து வளர்ந்து வருகிறது. பொருட்களின் உண்மைத் தோற்றத்தினைக் கண்களை விட கைகளுக்கு புலப்படும் பருப்பொருள்களைத் தான் அதனால் அறிந்து கொள்ளமுடியும். நுண்மையானவை அதற்கு விளங்காது. ஆதலால் புலன்களுக்கு எட்டாத பொருள் அதற்குப் புலப்படாது. குழந்தை வளர்ந்து வரும் சூழலில், அறிவுத்தொடர்புள்ள பேச்சினைச் சற்று நேரம் கவனித்துக் கேட்கும் ஆற்றல் உண்டு. ஐம்புலன்களில் மூலமாகக் குழந்தை உலக அறிவையும் மன அறிவையும் பெற்று வளர்ச்சியடைகிறது.*

*குழந்தைகளுக்கு ஏற்படும் ஐம்பொறிகளின் குறைபாடுகளைக் கண்டுபிடிப்பது கடினமாகும். பொதுவாகப் பிறவியிலேயே ஐம்பொறிகளில் ஏதேனும் ஓரிரு பொறிக் குறைபாடுகள் ஏற்படுதலும் உண்டு. பார்த்தல், கேட்டல், பேசுதல், உணர்தல் புலனுணர்ச்சிகளின் குறைபாடுகளான போன்றவற்றில் ஏற்படும் குழந்தைகளின் பள்ளிப்பருவ நிலையில் மிகுந்த துன்பத்தினை உண்டாக்குகின்றன. காலப்போக்கில் இக்குறைபாடுகள் வளர்ந்த மனிதர்களுடைய வாழ்வில் திறமைகளைக் குன்றச் செய்கின்றன.*

*பிறந்து ஓரிரு மாதங்களில் கண்களை விரித்து, முகம் பளிச்சிடச் சிரிக்கும் குழந்தையின் சிரிப்பு இன்பமானது. பெற்றோரின் முகமறிந்து சிரிக்கும் சிரிப்பானது உள்ளத்தைக் கொள்ளைச் செய்வதாகும். குழந்தையின் பொக்கை வாய்ச்சிரிப்பில் மயங்காத உள்ளமும் இருக்க முடியாது. சிரிப்பு, அழுகை, அசைவுகள் மூலமாகக் குழந்தைத் தன் உணர்வுகளை, தேவைகளைப் பரிமாறிக்கொள்கிறது. இந்த மொழிப் பரிமாற்றம், குழந்தையின் பேச்சைவிட இனிமையானதாகும்.*

**குழந்தைப் பருவத்தின் படிநிலை வளர்ச்சி**

*சைவத்திருமுறைகள் இயற்றிய சிவனடியார்களுள் குறிப்பிடத்தக்கவர் மாணிக்கவாசகர் குழந்தை திங்கள்தோறும் அடையும் வளர்ச்சிப்படி நிலைகளைப் பற்றி அவர் கூறும்போது,*

**‘‘மானிடப் பிறப்பினுள் மாதா உதரத்து**
**ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்**

**ஒருமதி தான்றியின் இருமையில் பிழைத்தும்**
**இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும்**
**மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்**
**ஈருஇரு திங்களில் பேர்இருள் பிழைத்தும்''[42]**

*என எடுத்துரைப்பது ஒப்புநோக்கத்தக்கதாகும்.*

*தாய் குழந்தையின் நடையழகினைக் காணும்போது, தன்னுடைய கடந்த கால எண்ணங்கள் நினைவு கூர்ந்து உள்ளம் உருக, ஊன் வருக என அழைத்து முத்தமிட்டுக் குழைவாள். "கலைஞன் ஒருவன் குழந்தையின் நடையில் விளங்கும் ஆடல், பாடல், துள்ளல் முதலியவற்றைக் கண்டு ஆடுவான், துள்ளுவான், பூரிப்பான், தன் உள்ளத்தை அதன் பின்னே ஆடித் துள்ளிவிட்டு தானும் குழைந்தையாவான்''[43] என்று கூறுவர்.*

*மழலைப் பருவம் வளர்ச்சி நிலைகளின் மிக முக்கியமான காலகட்டமாகும். அறிவு, உடல், உள்ளம் மற்றும் உணர்வுகளின் வழியாக மிக வேகமான வளர்ச்சியினை இக்காலக் கட்டத்தில் காணமுடியும் மூன்று வயது முதல் ஏழு வயது வரை குழந்தையின் உடல், மன வளர்ச்சி தீவிரமாக நடைபெறும் போது வளர்ச்சியோடு திசுக்களும், உறுப்புகளும் உடற்கூறு முறையில் உருவாகி இவ்வயதினில் செயலாக்கம் பெறுகின்றன.*

**தாயின் உளவியல் தன்மை**

*குழந்தையின் உடல் வளர்ச்சிக்கு உணவானது இன்றியமையாத ஒன்றாகும். வளரிளம் சிறார்கள் உடல் தேவையின் காரணமாகப் பசி உணர்வால் உந்தப்படுகின்றனர். புறநானூற்றில் பெருஞ்சித்திரனார் பாடிய,*

**''புள் உளை குடுமிப் புதல்வன் பல்மானர்**
**பாலில் வருமுலை சுவைத்தனன் பெறாஅன்**
**கூழும் சோறும் கடையீஇ ஊழின்**
**உள்ளில் வருங்கலந்த திறந்து அழக்கண்டு**
**மறப்புலி உரைத்தும் மதியம் காட்டியும்**
**நொந்தனளாகி, நுந்தையை உள்ளி**
**பொடிந்த நின் செல்வி காட்டு எனப் பலவும்''[44]**

*என்ற பாடலடியில் தன் தாய்முலையில் பால் வராதது கண்ட இளஞ்சிறான் ஒருவன் வீட்டிலுள்ள உணவு வைக்கும் பாத்திரங்களைத் திறந்து பார்க்கிறான்.*

அவையும் காலியாக இருப்பது கண்டு ஏமாற்றமடைகிறான். பசியால் அழுவதைக் கண்ட தாய் ‘புலி வருகிறது’ எனஅச்சமூட்டியும் ‘நிலவைப் பார்’ என வேடிக்கைக் காட்டியும் அவன் அழுகையை நிறுத்த முயல்வதைக் காட்டியுள்ளார்.

குழந்தைகள் ஆரம்பத்தில் தன் தேவைகளை அறிவிக்கும் வகையில் சில ஒலிகளை மட்டும் எழுப்புவர் இந்நிலை மாறி தன்னைவிட அதிகமான வயதுக் குழந்தைகளுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு ஏற்படும் பொழுது அவர்கள் சீக்கிரமாகவே குரல்களை எழுப்ப ஆரம்பித்துவிடுவர்.

“குழந்தையின் ஒவ்வொரு நிலையிலும் வளர்ச்சியானது உடல், உள்ளம், உள்ளக்கிளர்ச்சி, அறநெறி அழகுணர்வு என்ற ஐந்து செயற்பாடுகள் வழியாக ஏற்படுகின்றது. ஒவ்வொரு குழந்தையும் ஒரு குறிபிட்ட இடம், சமூகம், உளவியல் ஆகியவற்றின் சூழலில் வாழ்கிறது. இந்தச் சூழல்கள் குழந்தையின் நடத்தைமுறை, வளர்ச்சிவேகம் ஆகியவற்றைப் பாதிக்கின்றன.’’[45] ஒவ்வொரு குழந்தைக்கும் உடல் பலம் தேவையானது. அதற்குச் சரியான நேரத்தில் முறையான ஊட்டச்சத்து நிறைந்த உணவுப்பழக்கம் அவசியமாகிறது அப்பொழுதுதான் குழந்தை அதன் வயதுக்கு ஏற்ப அறிவைப் பெறமுடியும்.

“மூன்று வயது அல்லது நான்கு வயதிற்குள் குழந்தையின் மூளை வளர்ச்சி அதன் மொத்த வளர்ச்சியில் மூன்றில் இரண்டு பங்கு வளர்ந்து விடுகிறது. அதன் பிறகு வளரும் வேகமானது, முந்திய வேகத்தை விடக் குறைவாகவே வளர்கிறது’’[46] என்பர் உளவியலாளர், வாழ்க்கையில் மிகவும் முக்கியமான வளர்ச்சிப் பருவமாக குழந்தைப் பருவம் அமைகிறது.

“சமூக உலகில் நுழைந்தவன் வாழ்க்கையின் எல்லாப் பருவத்திலும் அவன் கவனப் பொருளாகவே அமைகிறான். அவன் பிறரைத் தூண்டுகிறான் அதற்கேற்ப பிறர் துலங்குகின்றனர் அப்படியே பிறர் அவனைத் தூண்ட அவன் அதற்கேற்ப துலங்குகிறான். இப்பாதிப்பு பணிகள் ஒரு கொடுக்கல் வாங்கல் நிலையாகும்’’[47] என்று குறிப்பிடுவர். குழந்தை வளர்ந்த நிலையில் அவனுடைய ஒவ்வோர் அசைவும் புதுப்பரிமாணத்தை ஏற்படுத்தும் நிலையாகக் காணப்படுகிறது எனவே குழந்தையின் வளர்ச்சியானது ஒரு சுறுசுறுப்பான இயக்கச் செயல்முறையாகவும், மாற்றத்தை உள்ளடக்கியதாகவும் அமைகிறது.

**குழந்தையின் பருவச் செயற்பாடுகள்**

*ஆண் குழந்தைகள் தங்கள் தந்தையையும் மூத்த சகோதரர்களையும் கூர்ந்து கவனிக்கின்றனர். அவர்கள் செய்வதுபோல தாங்களும் எல்லாக் காரியங்களையும் செய்ய ஆரம்பிக்கின்றனர். அதைப் போன்றே பெண்குழந்தைகள் தங்கள் தாயையும் மூத்த சகோதரிகளையும் போல நடை, உடை, பாவனைகளில் தாங்களும் நடந்துகொள்ள முற்படுகின்றனர். ஒரு குழந்தையின் செயற்பாடுகளைப் போலவே பிற குழந்தையின் செயற்பாடுகளும் உள்ளன என்பது தெளிவு.*

*குழந்தையினுடைய உள்ளார்ந்த தேவைகளும் கவர்ச்சிகளும், உந்துதல்களும் அதன் கவனத்தை ஆளும்போது, புலன்காட்சிகளையும் பாதிக்கின்றன. இதன் காரணமாக குழந்தை 'போலச் செய்தல்' என்னும் நிலைக்கு நேராக உந்தப்படுகிறது. குழந்தையைப் புரிந்துகொள்ள வேண்டுமானால் அதன் வளர்ச்சியில் உள்ள அகப்புறச் செயல்பாடுகளை வைத்து அறிந்து கொள்ளலாம். குழந்தையின் செயற்பாடுகள் பிரச்சனைகளுக்கு உரியனவாகக் காணப்படுமானால் பின்னாளில் அதன் ஆளுமை வளர்ச்சியில் பெரிய மாற்றங்களை ஏற்படுத்திவிடும்.*

**விரல் சப்புதல் (Thumb Sucking)**

*குழந்தை தாயிடம் பால் குடிக்கும் காலங்களில் அல்லது புட்டியில் பால் அருந்தும் காலங்களில் ஆசை தீரச் சுவைத்துக் கொண்டிருக்கப் போதிய அவகாசம் கிடைப்பதில்லை இதன் காரணமாகக் குழந்தை விரல் சப்புவதற்கு ஆரம்பிக்கும். தாய்ப்பால் குடிக்கும் குழந்தைகளைவிடப் புட்டிப்பால் குடிக்கும் குழந்தைகளிடையே இப்பழக்கம் அதிகமாகக் காணப்படுகிறது. தொடக்கக் காலத்தில் குழந்தைகளுக்குப் பல் முளைக்கும் போது ஏற்படும் உறுத்தலினாலும் அதற்கு விரல் சப்பும் பழக்கம் ஏற்படுகிறது.*

*கோபம், மகிழ்ச்சியின்மை, அவசரம், பரபரப்பு, கவலை, பயம், திகில், பசி, தாகம் போன்ற உணர்ச்சிகளில் இருந்து குழந்தையை மறக்கடிப்பதற்கு விரல்சப்பும் பழக்கம் காரணமாக அமைகிறது. குழந்தை விளையாடுவதற்குப் போதிய அவகாசம் கிடைக்காத போதும், தூக்கத்தை விரும்பும் போதும், விரல் சப்புதலைத் தொடர்ந்து செய்கிறது. இதற்காகப் பெற்றோர் குழந்தையைக் கண்டிப்பதும், திட்டுவதும், அடிப்பதும் சரியான வழியில்லை இதனால் குழந்தை வெட்கபட்டுத், தன்னம்பிக்கையை இழந்து, தன்னைக் குற்றவாளியாகக் கருதும் எண்ணமும் தோன்றுகிறது.*

இதைப் போக்குவதற்கு முக்கியமான வழி, மன நிறைவான வாழ்க்கைச் சூழ்நிலையினை உண்டாக்கிக் கொடுப்பதுதான் குழந்தையைப் பள்ளிக்கு அழைத்துச் சென்று மற்றக் குழந்தைகளோடு பழக விடுதல் வேண்டும். ஆழ்ந்த விளையாட்டில் ஈடுபடுத்துதல், அதன் விருப்பம் அறிந்து நிறைவேற்றுதல், தேவையான பாதுகாப்பு அளித்தல் போன்றவற்றால் விரல் சப்புதலை உடனடியாக நிறுத்த முடியாவிடினும் தொடர்ந்து இச்செயல் நடைபெறாமல் குறைக்கச் செய்யலாம்.

**குழந்தையின் மனவளர்ச்சி அமைதல்**

மனிதனுடைய மன வளர்ச்சி வெவ்வேறு கட்டங்களில் வெவ்வேறு வேகங்களில் நடைபெறும். பிறந்த உடனே குழந்தையின் உடலமைப்பு முழுவளர்ச்சி அடைந்திருக்கும் ஆனால் மன வளர்ச்சி அப்போதுதான் ஆரம்பமாகும். "குழந்தை கருவாகத் தோன்றிய காலத்திலேயே, பின்னாளில் அவன் எப்படி ஆகப் போகிறான் என்பதன் பெரும்பகுதி, அவனுடைய மரபு நிலைத் **(Heredity)** தன்மையால் தீர்மானிக்கப்படுகிறது. அவன் மரபுநிலை தானாகவே அவனை வந்து அடைந்த ஒன்றாகும்''[48] என்பர் ஜெகீல்டு.

ஆனால் மரபுநிலை மட்டும் ஒரு மனிதனின் முழுவாழ்க்கையையும் தீர்மானித்து விடுவதில்லை. சூழ்நிலையும், மரபும் இணைந்தே ஒருவனுடைய வாழ்க்கைத் தரத்தை நிர்ணயிக்கின்றன என்பதே உண்மை.

குழந்தை உள்ளத்தின் செயற்பாடு முதன்முதலில் தானாகத் தோன்றுவதில்லை. சுற்றுப் புறங்களிலிருந்து பாய்கின்றதூண்டுதல்களை அடக்கி ஆள முயலும்போது, அவன் செயலுற வேண்டிய நிலை ஏற்படுகிறது. "குழந்தைப் பருவத்தில் அடக்கி வைக்கப்பட்ட பல ஆசைகளும் உணர்ச்சிகளும் மறைமனத்தில் பதிந்து பிற்காலத்தில் பல வகையான செய்கைகளுக்குக் காரணமாகின்றன''[49] என்கிறார் உளவியல் அறிஞர் சிக்மண்ட் ஃபிராய்டு இதனை அடிப்படையாகக் கொண்டே குழந்தைப் பருவத்தில் ஒருவனுடைய பிற்கால வாழ்க்கை அமைப்பின் மாதிரித் தோற்றம் புலப்படுகிறது. குழந்தையின் மனம் புலன்களை இயங்கச் செய்வதால், உடல் இயங்குகிறது. அதன் கண்கள் வெளியுலகக் காட்சிகளைப் புதுமையாகக்காண்பதால், கண்களின் வழியே மூளை கற்கத் தொடங்குகிறது.

குழந்தைக்கு முன்னே தூண்டலின்போது நிகழ்ந்த செயற்பாட்டினால் இன்ப, துன்பங்கள் முதலியன விளைந்தன. ஆனால் படிப்படியான மனவளர்ச்சியில் எண்ணத்தில் விளங்கி, படிப்படியான உள்ள உணர்ச்சியாக வெளிப்படுகிறது.

வளரும் குழந்தை முதியோரைக் கவனித்து அவர்களிடமிருந்து பலவற்றைக் கற்கத் தொடங்குகிறது. அப்பொழுது குழந்தை அவர்களோடு நெருங்கிய உடல் தொடர்பு கொள்வதால் உள்ளுணர்வோடு அறியவும், புரிந்துகொள்ளவும் முடிகிறது.

"குழந்தையின் உள்ளத்தை அப்படியே படம்பிடித்துக் காட்ட இயலாது. ஆனால் குழந்தையின் முயற்சிகள், எண்ணங்கள், உணர்ச்சிகள் இவற்றின் தன்மையை நம்முடைய அனுபவங்களுடன் ஒப்பிட்டுத் தீர்மானிக்கலாம்''[50] என்கிறார் டி. ஜெர்சீல்டு. குழந்தையின் வளர்ச்சி நிலையில் அதன் மனம் ஓர் ஒளிப்படக் கருவியைப் போன்று (Camera) செயல்படுகிறது. குழந்தை காண்பதும், கேட்பதும் அதன் உள்ளத்தில் தழும்பு போல ஆழமாகப் பதித்துக்கொள்கிறது.

ஒவ்வொரு குழந்தையின் மனமும் வெவ்வேறானது. அதை கட்டுப்படுத்துவது தான் மிக முக்கியமான வேலை. குழந்தை நேரில் கண்டு அறிந்ததையும் மனத்தில் பதியவைத்துக் கொண்டதையும் பின்னாளில் தனக்கு வேண்[illegible]பயோகப்படுத்தும் ஆற்றலைப் பெறுகிறது.

**ஆளுமை (Personality)**

[illegible]வியல் வரலாறு போன்று ஆளுமை வரலாறும் கிரேக்கத் தத்துவ வாதிகளி[illegible]ருந்து [illegible]டங்குகிறது.

"*Personare'* எனும் இலத்தீன் சொல்லானது 'குரல்வழி நடிப்பு' வெளிப்பாட்டைக் குறிக்கும். அது நாளடைவில் நடத்தைகளோடு, ஆளுமைக்கும் (Personality) பொருத்தப்பட்டது.''[51] ஒவ்வொரு மனிதரிடத்திலும் குறிப்பிட்ட ஆளுமை உள்ளது. வெகுளி, பயந்தாங்கொள்ளி, திமிர், அமுங்குணி போன்ற சொற்களால் ஆளப்படுவதை இன்றும் நடைமுறையில் காணாலம்.

மனித ஆளுமையில், "வேட்கை (Desire) நம்பிக்கை (Belief), அமுக்க விசை (Repressing Force) ஆகிய மூன்றும் நரம்பு நோய்க் கட்டமைப்பில் (Construction of Neurosis) பங்கு கொள்கின்றன. இறந்த காலத்தை எண்ணிப் பார்க்கும் போக்கு

*இதன் முக்கியப் பண்பாகும். அவ்வாறு பின்னோக்கிப் பழைய நினைவுகளை, காட்சிகளை மீண்டும் நினைவுபடுத்திப் பார்ப்பதில் ஒருவித மனநிறைவு ஏற்படுகிறது''[52] என்பர் உளவியலாளர்.*

**ஆளுமை வளர்ச்சி**

*'Personality' என்னும் ஆங்கிலச் சொல் 'முகமூடி' என்று பொருள்படும். அது Persono என்னும் சொல்லிலிருந்து தோன்றியது. ஆளுமை என்பது ஒருவர் பூணும் 'வேடம்' அவர் வசிக்கும் 'அங்கம்' பிறர் அவரைப் பற்றி என்ன எண்ணுகிறார்கள் என்பதேயாகும் இதன் அடிப்படையில், "ஒருவர் எப்படித் தோன்றுகிறார். எப்படிப் பிறரைப் பாதுகாக்கிறார் பிறரை எப்படி தூண்டுகிறார் என்னும் சமூகத் தூண்டல் மதிப்பே (Social Value) ஆளுமையாகும்''[53] என்று குறிப்பிடுவர் அகோல்கர்.*

*ஒரு மனிதன் வாழ்ந்து வரும் பண்பாட்டுடன் அவனுடைய ஆளுமை நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. ஆளுமை என்பது ஒருவனை ஆற்றல் வாய்ந்தவனாக மாற்றுகிறது. அவரை மற்றவர்களின் மீது செல்வாக்கு உடையனவாகவும் மாற்றுகிறது. சமூகச் சட்டத்திட்டங்களுக் கேற்ப மனிதன் தன்னை மாற்றியும் அடக்கியும் கொள்கிறான். இதற்கு அவன் வாழும் சூழ்நிலை பெரிதும் உதவுகிறது. குழந்தை பிறந்து வளரும் குடும்பம், பழகும் தோழர்கள், கல்விக் கூடம், வாழும் ஊர் முதலியவற்றிற்கேற்ப அதன் ஆளுமை வளர்ச்சியடைகிறது.*

*மனிதன் தன்னுடைய நடத்தை மாற்றங்களுக்காக மட்டும் சமூகத்தோடு தொடர்புகொள்ளாமல், ஆளுமை வளர்ச்சிக்காகவும், அறிவுத்திறன் பெருக்கத்திற்காகவும் சமூக பயனாகின்றான். இதன் விளைவாகப் பண்பு நலன்கள், பழக்கவழக்கங்கள், உளப்போக்குகள் போன்ற ஆளுமைத் தன்மைகள் உருவாகின்றன.*

**ஆளுமையின் படிநிலைகள்**

*"பிறப்பில் தோன்றும் ஆளுமையின் நிலைகள் மூன்றாகும். கருத்தரித்தல், பிறத்தல், 'நான்' அல்லது 'தான்' என்ற தன்மயத்தின் வளர்ச்சி''[54] என்ற நிலைகளில் தோன்றுகிறது. குழந்தை உளவியல், குழந்தை பிறந்த சில வாரங்களிலேயே அதன் இயங்கும் நிலையிலும், மனப்பாங்கிலும் சில தனிப் பண்புகளைக் காணலாம். இப்பண்புகளின் அடிப்படையில் அதன் எதிர்கால வாழ்க்கையைப் பற்றிச் சில பண்புகளை ஆளுமையின் அறிகுறிகளாகக் கொள்ளலாம்.*

குழந்தை தன்னைச் சுற்றி இருப்பவர்களிடமிருந்துதான் எல்லாவற்றையும் கற்றுக்கொள்கிறது. இளம் குழவிப் பருவத்தில் இருந்தே தொடங்கிவிடும் இந்தத் 'தான்' உயிரோடு இருக்கும் காலம் முழுவதும் ஆக்கம் பெற்றுக்கொண்டே செல்கிறது. இதனைப் பற்றி ஃபிராய்டு குறிப்பிடும்போது "பொதுவாகக் குழந்தைப் பருவத்து அனுபவங்கள் அனைத்தும் தங்கிப் பின் பெரியவனாகும் பொழுது, அவனது ஆளுமைத் தன்மை உருவாகக் காரணம் ஆகின்றன''[55] என்பர்.

### ஆளுமை வளர்ச்சியில் பெற்றோரின் பங்களிப்பு

குழந்தைகளின் பிற்கால ஆளுமை வளர்ச்சி சிறப்பாக அமைவதற்கு இளம் பருவத்திலிருந்தே அவர்களது உடல், உள்ளம், அறிவு, சமூகம் சார்ந்த வளர்ச்சிக்கான தேவையினை நிறைவு செய்தல் அவசியமாகும். இளஞ்செடியினைப் போல் குழந்தை இயற்கையாக வளர முடிவதில்லை.

குழந்தை சிறந்த முறையில் ஆளுமை வளர்ச்சியடைவதற்குத் தாயின் பங்களிப்பு (Normal personality development) மிகவும் இன்றியமையாதது. பெற்றோர் உள்ள குடும்பத்தில் வளரும் குழந்தையின் ஆளுமை வளர்ச்சி சற்று வளர்ந்த நிலையில் காணப்படுகிறது. ஆனால் தாயோ அல்லது தந்தையோ அல்லது இருவருமோ இல்லாத நிலையிலுள்ள குடும்பத்தில் வளரும் குழந்தையின் ஆளுமை வளர்ச்சி குறைந்த நிலையிலே காணப்படுகிறது. இந்நிலையை கீழ்வரும் பாடலடிகள் விளக்குகின்றன.

**''அறம் நிலைபெற்றோர் அனையேன்; அதன்தலை,**
**பொலந்தொடிப் புதல்வனும் பொய்தல் கற்றனன்,**
**வினையும் வேறு புலந்து இலனே, நினையின்,**
**யாதெனின் பிரிகோ? – மடந்தை !**
**காதல்தானும் கடலினும் பெரிதே !''**[56]

தலைவியின் மெய்ந்நலனும் பண்பு நலனும் வியந்து போற்றிய தலைமகன், நின்னைக் காண்தோறும் அறம் நிலைப்பெற்றேன் என்றாள். அறம் நிலை பெறுதலாவது செய்த அறத்தின் பலனைத் தப்பாது அடைதலாகும். சான்றோர் அறநெறி வழாது வாழ்ந்து அதன் பயனை இயல்பாகத் துய்க்குமாறு தலைவன் தானும் துய்ப்பதாகக் கூறினான். மனைவியும் புதல்வனும் சிறந்த கிடைத்தற்கரிய பேறுகளாக இருப்ப இனி எதற்காகப் பிரிவேன் என்றான் தலைவன். குழந்தையின் ஆளுமை வளர்ச்சியின் பெற்றோர்கள் பங்கு இருக்க வேண்டும். பெற்றோர்கள்

*தான் குழந்தைகளுக்கு முன் உதாரணமாக இருக்கவேண்டும் என்பதை இப்பாடல் எடுத்துரைக்கிறது. மேலும், குழந்தையின் ஆளுமை வளர்ச்சியில் பழமொழி நானூறு கூறும் கருத்தும் ஒப்புநோக்கத்தக்கது.*

**''எந்நெறியானும் இறைவன்றன் மக்களைச்**
**செந்நெறிமேல் நிற்பச் செயல்வேண்டும் – அந்நெறி**
**மான்சேர்ந்த நோக்கினாய்! ஆங்க வணங்காகும்**
**தான்செய்த பாவை தனக்கு''**[57]

*மானின் கண்ணையொத்த நோக்கினையுடைய தந்தை தன் புதல்வரை எல்லா விதத்திலும் நல்வழியில் நிற்கும் வகை அறிவு உண்டாகச் செய்தல் வேண்டும். தந்தையானவன் குழந்தை பிறந்த நாள் முதலே அவனை நல்ல நெறியில் ஆளுமைப் பண்புகள் வளரும் விதம் வளர்க்க எண்ணி தன் குழந்தையைப் பார்த்து பார்த்து வளர்க்கின்றான். தாயானவளும் குழந்தைகளின் ஆளுமை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும் வகையில் நற்பண்புகளை வளரும் பருவத்திலிருந்தே அருகில் இருந்து தனது குழந்தையைச் சமூகத்தில் நல்ல மனிதராக ஆக்கவேண்டும் என்று விருப்பப்படுகிறாள்.*

*ஒரு குழந்தையின் ஆளுமை வளர்ச்சியானது ஓர் இடத்தில் மட்டும் நடைபெறுவதில்லை. அவ்வளர்ச்சிக்கு உதவுபவரும் ஒருவராக இருப்பதில்லை. குழந்தையின் இவ்வளர்ச்சியானது பல்வேறு இடங்களில் வெவ்வேறு சூழ்நிலைகளில் பலதரப்பட்ட மனிதர்களால் ஏற்படுகிறது. குழந்தையின் வளர்ச்சியில் பெரும்பங்கு வகிக்கும் இடங்கள் வீடும், பள்ளிக்கூடமுமே, அதுபோலப் பெரும்பங்கு வசிப்பவர்களும் பெற்றோரும் ஆசிரியர்களும் ஆவர்.*

*ஒரு குழந்தையின் ஆளுமையிலும் வளர்ச்சியிலும் அதன் குடும்ப உறுப்பினர்கள், அருகில் உள்ளோர், அயலார், விளையாடும் இடம், படிக்கும் கல்வி நிலையங்கள் ஆகிய அனைத்தும் பெரும்பங்கு வகிக்கூடியன சின்னஞ்சிறு குழந்தையின் உள்ளம் மலரினும் மென்மையானது, அதில் அழகு, உண்மை, நேர்மை போன்றவற்றை வளர்க்கவே நாம் தொடர்ந்து முயற்சி செய்யவேண்டும்.*

*குழந்தைகள் மற்ற குழந்தைகளையும், பெரியோரையும் பார்த்து பின்பற்றுகின்றனர். பிறருடைய செய்கை, உடை, இயக்கம், பேச்சு வளர்ச்சி முதலியவற்றைப் பார்த்து அப்படியே பின்பற்றவும் ஆரம்பிக்கின்றனர். ஆளுமையின் பல தன்மைகள் அடிப்படையான ஆரம்பப்பள்ளி வயதில் தான் உருவாகி வளருகின்றன. "குழந்தைப் பருவத்தில் (சுமார் ஆறு வயது முதல் எட்டு*

வயதிற்குள்) ஆளுமை கட்டமைந்து விடுகின்றது. அதன் பிறகு ஏற்படுகின்ற உளச்செயல்கள் குழந்தைப் பருவ அனுபவங்களின் அடிப்படையிலானவை. குழந்தையின் உடல் வளர்ச்சியடைந்து ஒரு கட்டத்தில் முழுவடிவம் பெற்று நின்று விடுவது போல் உள்ளமும் வளர்ச்சியடைந்து (சுமார் ஏழு வயதில்) நின்று விடுகிறது. குழந்தைப் பருவத்தில் கட்டமைந்த எண்ணங்கள், உணர்வுகள் தான் ஆளுமையாகின்றன''[58] என்று குறிப்பிடுவர் சிக்மண்ட் ஃபிராய்டு.

பெற்றோர்களின் தன்மையும் நடத்தையும் குழந்தைகளின் ஆளுமையை உருவாக்குவதில் பெரும்பங்கு கொள்கின்றன. பெற்றோர்கள் குழந்தைகளை அடிக்கடி இடித்துக் கூறுவதும், பழித்துப் பேசுவதும், கடுமையான கட்டுப்பாட்டிற்குள் நடத்துவதுமாகக் காணப்படுகின்றனர். அதன் காரணமாகக் குழந்தைகள் வீட்டிலும், பள்ளியிலும் பிற பொது இடங்களிலும் தொல்லை கொடுக்கக் கூடியவர்களாகத் திகழ்கின்றனர்.

“சிறு வயதில் மனத்தில் பதியும் எண்ணங்களும் உணர்ச்சிகளும் மாற்றியமைவது சிரமம்''[59] என்பர் க. அருணாசலம் குழந்தை நிற்பது, நடப்பது ஓடுவது ஆகியவற்றை விட நினைப்பது பேசுவது வாழ்வது ஆகியவை தான் மிகவும் முக்கியமானவை. மன இயக்கமே பெரும்பாலும் *(Charactensation)* பாத்திர ஆக்கமாக வடிவடுக்கும் குழந்தையின் உள்ளம் அதனுடைய செயல்களின் வழி வெளிப்படுத்தப்படும். எனவே, குழந்தையின் செயலை நன்கு ஆராய்ந்து அறிவதன் மூலமாக அதன் உள்ளத்தை அறியமுடிகிறது.

பெற்றோரின் அதிகாரத்திற்கு உட்பட்டு நடக்கும் குழந்தையை விட அவர்களின் அன்புக்கு உட்பட்டு நடக்கும் குழந்தை மற்றவர்களிடம் இயல்பாகவும், அன்பாகவும், மரியாதையாகவும் நடந்து பழகிக்கொள்கிறது. இத்தகைய குழந்தைபிற்காலத்தில் தன்னடக்கமும், பொறுமையையும் விடாமுயற்சியும் உள்ளதாக நடந்து கொள்கிறது.

குடும்ப உறவுகளில் விரிசல் ஏற்படும்போது, அக்குடும்பத்தில் உள்ள குழந்தைகள் பெரிதும் பாதிக்கப்படுவர் பெற்றோர் அடிக்கடி குழந்தையின் முன்னிலையில் சண்டையிடும்போது அக்குழந்தையின் மனம் பெரிதும் பாதிக்கப்படும். தன்னை ஒருவரும் விரும்பவில்லை. தனக்குச் சரியான பாதுகாப்பு இல்லை. தன்னைப் பெற்றோர் ஒதுக்குகின்றனர். மேலும் புறக்கணிக்கவும், வெறுக்கவும் செய்கின்றனர் என்றெல்லாம் நினைக்கும் போது அதன் உள்ளம் மடிகிறது. குழந்தைகளின் வளர்ச்சி பல்வேறு நிலைகளில் வேறுபடுவதை நம்மால்

*காணமுடிகின்றது. குழந்தையானது தனது, மனம், செயல், ஆளுமை ஆகியவற்றில் தனது குடும்பச் சூழல்களுக்கேற்ப அமைந்துள்ளதை,*

**‘‘அருவி தாழ்ந்த பெரு வரை போல**
**ஆரமொடு பொலிந்த மார்பில் தண்டா**
**கடவுள் சான்ற கற்பின், சேயிழை**
**மடவாள் பயந்த மணி மருள் அவ் வாய்க்**
**கிண்கிணிப் புதல்வர் பொலிக என்று ஏத்தி,**
**திண் தேர் அண்ணல் நிற் பாராட்டி’’**[60]

*எனும் பாடலடிகள் விளக்கியுரைக்கின்றது.*

*அருவி வீழும் பெரிய மலை போல முத்தாரம் பொலிந்த மார்பின்கண் வேட்கை தனியாத தெய்வத்தன்மை பொருந்திய கற்பினையும், சிவந்த அணிகளையும் உடையவள் நின் மனைவி, நின் கற்புடைய மனைவி பெற்ற பவழமணி போன்ற வாயையும் கிண்கிணியையும் உடைய புதல்வரைப் பொலிக என்று வாழ்த்தினேன், திண்ணிய தேரையுடைய வேந்தே! நின்னைப் புகழ்ந்து பரிசில் மேல் உள்ள அன்பு பெரிதாகளின் கனவினும் நின் புகழையே கூறும் விருப்பத்தை உடையவன். வளமையுடைய நின் புதல்வரும் நின்னை ஒப்பர், நின் புதல்வர் எந்நாளும் பகைவர் வருந்த, அவருடைய பெறுதற்கரிய அணிகலத்தைக் கொணர்ந்து, நும் பொன்னுடைய நொடிய நகரில் தொடுத்துப் பொலிய வைத்து பாராட்டினான் என்று குழந்தையின் வளர்ச்சி நிலைகள் பற்றி புலவர் குறிப்பிடுவதை அறியமுடிகின்றது.*

*தந்தையின் அறிவுரையைத் தட்டிவிட்டு வெளியில் சென்று, நீண்டநேரத்தைக் கழித்து வீணாகச் சுற்றித்திரியும் குழந்தையின் மனத்தில் குற்ற உணர்வு நிறைந்திருக்கும். குழந்தை வீடு திரும்பும்போது தந்தை கோபத்தோடு வீட்டினுள் இருப்பதை அறிந்தவுடன் வெளியில் இருந்தவாறே அதன் உடல் நடுக்க உணர்வையும் தொடர்ந்து இது போன்ற நிகழ்ச்சிகள் குழந்தையின் வாழ்க்கையில் நடைபெறுமானால், அதுவே ஆளுமையின் ஒரு பழக்கமாக மாறிவிடும். நாள்தோறும் நடுக்க உணர்வுடன் வாழும் குழந்தையின் வாழ்வு ஒரு போராட்டமாக அமைந்துவிடும். தன்னைச் சுற்றியும் போராட்டத்திற்கான தூண்டல்களைக் கூடவே பெற்றுக்கொண்டு செல்லும் குழந்தை தனக்கு உரிய பாதுகாப்பையும் மன அமைதியையும் பெற்றிருக்கவில்லை என்பதை அறியமுடிகிறது.*

குழந்தை சிறு வயதிலேயே தன் தவறுகளுக்காக அடியும் உதையும் பெற்றால், அதன் ஆளுமை வளர்ச்சி தடைபடுகிறது. இதனால், வலிமை உணர்ச்சியும், காழ்ப்புணர்ச்சியும் இழந்து, குழந்தையின் வளர்ச்சியில் உளக்கோளாறு ஏற்படும் நிலை தோன்றுகிறது. எனவே குழந்தையைக் கையாளும்போது கடுமையாக நடந்துகொள்ளாமல் அதனிடம் அன்பாகவும் இயல்பாகவும் நடந்து வளைந்து கொடுக்கவேண்டும்.

பெரும்பான்மையான பெற்றோர் தங்களின் இலட்சியங்களைக் குழந்தைகள் மூலம் நிறைவேற்றிக்கொள்ள நினைக்கின்றனர். இதனால் அவர்களின் இயற்கை குணங்களை அறிந்துகொள்ளாமல் தவறு செய்துவிடும் சூழ்நிலையும் ஏற்படுகிறது.

எல்லாக் குழந்தைகளும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. சிலர் பிறவியிலேயே புத்திசாலிகளாக இருப்பதும் உண்டு. சிலர் உடல் நிலையில் வலிமை கொண்டவர்களாகத் திகழ்கின்றனர். சிலர் வலிமை குறைந்தும் இருப்பர் எனவே குழந்தைகளின் வலிமையையும் பலவீனத்தையும் பெற்றோர் புரிந்துகொள்ள வேண்டும். அவர்களுக்குச் சரியான நேரத்தில் வாய்ப்புகளையும் சமயங்களையும் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும். அவர்களது நம்பிக்கையை வளர்க்கவும் பெருக்கவும் வேண்டும். பெற்றோர் போதுமான தூண்டுதல்களைத் தொடர்ந்து அளித்து குழந்தைகள் சுயமாக வளர அனுமதிக்கவேண்டும். குழந்தைக்கு ஆர்வம் இருக்கிறதா என்பதைப் பார்க்கவேண்டும். ஒவ்வொரு குழந்தையும் ஒவ்வொரு மாதிரியாக இருக்கும். எனவே பெற்றோர் ஒவ்வொவரும் தங்களின் குழந்தைக்கேற்ப சரியான வளர்ப்பு முறையினை அறிந்து வளர்க்க வேண்டியது மிகவும் அவசியமாகும்.

குழந்தை முற்றிலும் ஒரே குடும்பச் சூழ்நிலையில் மட்டும் உருவாக்கப் படுவதில்லை. அதற்கும் நண்பர்கள் உண்டு. பள்ளிக்கூடத்திற்கும் நாள்தோறும் சென்றுவர வேண்டும். எனவே, இவற்றினாலும் மற்றச் சமூக நிறுவனங்களாலும் தொடர்ந்து குழந்தை ஊக்குவிக்கப்படவேண்டும்.

குழந்தைகளுக்கு நல்லதொரு துவக்கத்தைத் தர முயற்சி செய்து வரும் இன்றைய தலைமுறைப் பெற்றோர் ஏகப்பட்ட தகவல்கள், வாய்ப்புகள், போட்டிகளில் சிக்கித் தத்தளிக்கின்றனர். காலம், பணம், சக்தி ஆகியவற்றைக் குழந்தைகளுக்கென்றே செலவு செய்துவிட்டு அதிக பலனை எதிர்பார்க்கின்றனர். ஆனால் குழந்தைகளின் திறனைப் புரிந்துகொண்டு அதன் வளர்ச்சிக்கேற்ப

நடந்துகொள்வது தான் குழந்தை வளர்ப்பில் முக்கியமானதாகும் என்ற கருத்து குறிப்பிடத்தக்கது. மேலும், குழந்தையின் ஆளுமை தன் தொடக்க காலத்திலிருந்து அதாவது மழலைப் பருவத்திலிருந்தே நன்முறையில் சங்ககால பெற்றோர்கள் குழந்தைகளை ஆளுமை வளர்ச்சியில் பெரிதும் பெங்கெடுத்து வளர்த்துள்ளதை,

**''பல்சோற்றோன், இன் சுவைய –**
**நல்குரவின் பசித்துன்பின் நின்**
**முன்னாள் விட்டமூதுஅறி சிறாஅரும்**
**யானும், ஏழ்மணி, அம்கேழ், அணி உத்தி''**[61]

எனது பாடலடிகள் மூலம் தெளிவுப்படுத்தியுள்ளமையை அறிய முடிகின்றது.

நெய்யால் தாளிதம் செய்யப்பட்ட ஊன் கலந்த பலவகைச் சோற்றுடனே, இனிய சுவையைடைய பிற பொருள்களையும், வறுமையால் பசித் துன்பமுடன் பசி நீக்க, பரிசுகளுடன் முன்னாள் விடப்பட்ட தொன்முறை அறிந்த சிறுவனும் யானும், எழுச்சிகளையுடைய மணி, நிறம் பொருந்திய அழகிய பிடப்பொறி கொண்ட, கண்ணாற் கேட்டும் தியன்பெற்ற, பிரிவுபட்ட நாக்கினை உடைய, நிறம் பொருந்திய பாம்பு தன் தோலை உரித்து நீக்கினாற்போல, தோலை உரித்து வறுமையை நீக்கி, பிறர்க்கு யாம் கொடுத்தல் கைகூடும்படி, குழந்தை இவ்வாறெல்லாம் வளர்ந்துள்ளதை அறியமுடிகின்றது.

எனவே, பெற்றோர் குழந்தைகளுக்கு நல்ல வாழ்க்கைக்கான அடித்தளத்தை ஏற்படுத்தித்தர வேண்டும். பெற்றோர் தங்களுடைய குழந்தைகளை வலுக்கட்டாயம் செய்யாமல் அவர்களுடைய முயற்சிகளுக்கு ஊக்கம் கொடுத்து மதிப்பளிக்க வேண்டும். அப்பொழுதுதான் குழந்தைகளும் பெற்றோரை இனிமையுடன் ஏற்று அவர்களுடைய ஆளுமைகளுக்கேற்ப மரியாதையுடனும் நடந்துகொள்வர்.

குழந்தைகளின் அறிவு முறையாக வளர்வதற்கு வசதியாக அவர்கள் விரும்புவதைத் தேர்ந்தெடுக்கப்பெற்றோர் சுதந்திரமாக அனுமதிக்க வேண்டும் அவர்களின் தேர்ந்தெடுத்தலில் ஈடுபடும்போது பரவாயில்லை என்று கூறி பெற்றோர் தொடர்ந்து அனுமதிக்க வேண்டும். குழந்தைகள் தாங்கள் செய்யும் தவறுகளை உணரும் வண்ணம் அவர்களுக்குப் போதிக்கவேண்டும். பொறுமையான முறையில் கையாண்டு அவர்களை நல்வழிக்குக் கொண்டுவர வேண்டும்.

*புதிய சமுதாயம், புதிய மானிடம் அமைக்க விரும்புபவர்கள், கனவு காண்பவர்கள் அதைக் குழந்தைகளிடம் தொடங்கவேண்டும். இதனை விவிலியம், "பிள்ளையானவன் நடக்க வேண்டிய வழியிலே அவனை நடத்து, அவன் முதிர் வயதிலும் அதை விடாதிருப்பான்''[62] என்ற கருத்து ஒப்புநோக்கத்தக்கது.*

**பிறழ்நிலை**

*சமூகத்தின் மீதுள்ள அச்ச உணர்வே மனிதன் நெறியுடன் வாழக் காரணமாகும். அச்ச உணர்வு அவனை விட்டு நீங்கும்போது இயல்பை மீறி நெறி பிறழும் நடத்தை ஏற்படுகிறது. மனிதன் விரும்பியதை அடைய முயலும்போது, இச்சை உணர்வின் தீவிரத்தால் உந்தப்பட்டு இயல்பு நடத்தையை மீறுகிறான். மனிதனுடைய செயல்கள் அறிவினால் வழிகாட்டப்படுவதைவிட மனவெழுச்சித் துடிப்புகளினால் வழிகாட்டப்படும் நிலையே பெரும்பான்மையாகக் காணப்படுகின்றது. அவ்வித நடத்தை மனநிறைவேற்ற செயல்பாடுகளையே மிகுதியாக விளைவிக்கிறது.*

*குடும்பத்தில் ஏற்படும் முக்கிய மாற்றங்கள் குழந்தையின் பாதுகாப்பு உணர்ச்சியைக் குறைக்கலாம். தந்தையோ அல்லது தாயோ இறந்துவிடும் போதும், குடும்பத்தின் பொருளாதார நிலை சிதறும் போதும், வேறு குடும்பத்தினைச் சேர்ந்த நபர்கள் புதிதாக அக்குடும்பத்தில் வந்து உறுப்பினராகச் சேருதல் முதலிய காரணங்களினாலும் குழந்தையின் மனப்பான்மையும் அதன் நடத்தையும் வெகுவாகப் பாதிக்கப்படுகின்றன. வேலை செய்வதில் பழக்கமின்மை, ஒழுங்காகப் பள்ளிக்கூடத்திற்குச் செல்லாதிருத்தல், அடிக்கடி பள்ளிக்கூடத்தை மாற்றிக்கொண்டிருத்தல் போன்ற காரணங்கள் பள்ளிக்கூடத்திற்கு எதிரான தூண்டல்களை உண்டாக்குவதால் குழந்தையின் உள்ளத்தில் பின்தங்கும் நிலையை ஏற்படுத்துகிறது.*

*"நனவிலி மனத்தின் இச்சை உணர்வினால் (Id) தூண்டப்படும் நெறிபிறழ் நடத்தையானது (Abnormal behavior) பல்வேறு சந்தர்ப்பங்களில் மனச்சான்று என்னும் பண்பாட்டு உணர்ச்சியால் (Super ego) கட்டுப்படுத்தி வைக்கப்படுகிறது. சிற்சில நேரங்களில் அக்கட்டுப்பாட்டை மீறத்துடிக்கும் இச்சையே பாதகச் செயலாக வெளிப்படுகிறது''[63] என்பர். குழந்தையானது, தனது நன்னெறியிலிருந்து தவறாமல் நின்று குடும்பத்தினரின் செயல்களிலிருந்து மாறாமல் செயல்படுவதை கீழ்வரும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.*

**''இரப்போர் வாட்டல் அன்றியும், புரப்போர்**
**புகழ் குறைபடூஉம் வாயில் அத்தை,**
**அனைத்து ஆகியர், இனி, இதுவே எனைத்தும்**
**சேய்த்துக் காணாது கண்டனம், அதனால்,**
**நோய் இலராக நின் புதல்வர், யானும்**
**வெயில் என முனியேன், பனி என மடியேன்''**[64]

*எம் குடியில் உள்ளார் முன்பு காணாதது, இப்பொழுது யாம் காண்போம் யானும் வெயில் என்று நினைத்து செல்லுதலை வெறுக்காமலும், பனியென்று கருதிச் சோம்பியிராமலும் செல்கின்றேன். என்னை விட்டு நீங்காது, கல்லால் செய்தாற்போன்று வறுமையின் மிகுதியால் வளிமறையாகிய மனையிடத்து உறைவார் என் மனைவி, அவள் நாணைத் தவிர வேறில்லாத கற்பினையும், ஒளியுடைய நூலினையும், மெல்லிய சாயலினையும் உடையவள். அவளை நினைத்து போகின்றேன், நீ எமக்குச் செய்த அத்தீங்கினால் நின் பிள்ளைகள் நோயின்றி இருப்பாராக, என்று தன் குழந்தை சமூகத்தில் நல்ல நெறியினின்று தவறி வேறு வழியில் நடக்கக் கூடாது என அஞ்சப்படுகிறார். குழந்தையானவன் சமூகத்தில் நன்மதிப்பைப் பெற்று எவ்விதமான தவறான நடைமுறையிலும் செயல்களிலும் ஈடுபடக்கூடாது என்று சங்ககால மக்கள் தங்கள் குழந்தையை வளர்த்திருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.*

*குழந்தை தன்னுடைய அன்றாடத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்குப் போதிய திறமை காணப்படவில்லை. "போதிய அளவு பாடத்தைக் கற்காமை, ஊக்கமின்மை, ஆளுமையில் சீர்குலைவு, சமூகப் பொருத்தப்பாடுகள் சரியாக அமையாதிருத்தல் ஆகியவை கல்வி சார்ந்த நடவடிக்கையில் பின் தங்கிய விளைவுகளை உண்டாக்கலாம் என்பர்''*[65] *மு. இராசமாணிக்கனார்.*

*குழந்தைகளிடம் சண்டை மூட்டுதல், கீழ்ப்படியாது நடத்தல், அமைதியற்றிருத்தல் ஆகிய தன்மைகள் காணப்படுகின்றன. இதற்குக் காரணம் வீட்டில் கடினமான கட்டுப்பாட்டினாலும், பயத்தினாலும், அடக்கி ஒடுக்கப்பட்டிருப்பதாலும் இவர்களிடம் இப்படிப்பட்ட செயல்கள் காணப்படுகின்றன. இதுவே அவர்களுடைய எல்லாச் செயல்களிலும் சாதனையைக் குறைப்பதற்குக் காரணமாக அமைகிறது.*

**பல்வேறுபட்ட நடத்தை**

*குழந்தையின் உடற்செயல்பாட்டினால் ஏற்படும் விளைவு நடத்தையாகும். ஒரு குழந்தையின் நடத்தையானது உடலமைப்பு, நரம்பு மண்டலத்தின் அமைப்பு, உடல் இரசாயனச் சேர்க்கை (Bio–Chemical) ஆகியவற்றால் கட்டுப்படுத்தப்பட்டு நடத்திச் செல்லப்படுகிறது. மனிதர்கள் ஒன்று போலவே பிறந்து ஒரே மாதிரி வளர்ந்து பெரியவர்களாகக் காணப்பட்டாலும், அவர்கள் ஒரே மாதிரியான நடத்தையுடையவர்களாகக் காணப்படுவதில்லை.*

*சிறிதும் மாறாத வளர்ப்பு முறை உடைய குழந்தைகளின் நடவடிக்கைகளிலும் பல்வேறு விதமான மாறுபாடுகள் காணப்படுகின்றன. மரபுக் கூறுகளும் சூழலும் இணைந்து குழந்தையின் நடத்தை மாறுபாடுகளுக்குக் காரணமாகின்றன. "தனி மனிதனுக்கும் அவனுடைய சூழ்நிலைக்கும் இடையில் நடைபெறுகின்ற பரிமாற்றச் செயல்முறைதான் மனிதனுடைய நடத்தையில் காணப்படும் பிரச்சனைகளாகின்றன''[66] என்பர் மு. இராசமாணிக்கம். குழந்தைகளின் பல்வேறு நடத்தைகள் எவ்வாறு உள்ளது என்பதை கீழ்வரும் பழமொழி நானூறு பாடல் வரியும் ஒப்புநோக்கத்தக்கது.*

**''உலுப்பி லுலகத் துறதியை நோக்கிக்**
**குலைத்தடக்கி நல்லறம் கொள்ளார்க் கொளுத்தல்**
**மலைத்தழு துண்ணாக் குழவியைத் தாயர்**
**அலைத்துப்பால் பெய்து விடல்''[67]**

*முடிவில்லாத உலகத்தின்கண் உறுதியாக நன்மையை நோக்கி நல்ல அறநெறியை அடையாவரை நல்லார் அந்நிலையினின்றும் பிரித்து அறநெறியில் சேர்த்து அவரை நல்லறத்தை அடையும்படி செய்தலானது மாறுபட்டழுது முலையுண்ணாத குழந்தையைத் தாயார் வருத்தி பாலை ஊட்டுதலோடு குழந்தைகள் குறிப்பிட்ட வயது வந்தவுடன் பல்வேறு இடர்ப்பாடுகளை சந்திக்க நேரிடும் அதனை அறிந்து நல்லது என கெட்டது எது என அறிவுறுத்தி குழந்தைகளின் பல்வேறு மாறுபட்ட செயல்களிருந்து திருத்திக்கொண்டு வருவதாக இப்பாடலின் மூலம் அறியமுடிகின்றது.*

*தாயின் கவனம் குழந்தையின் மீது தொடர்ச்சியாகச் செலுத்தப்படாமல் விட்டுவிட்டுச் செலுத்தப்படுகிறது. இதன் காரணமாகக் குழந்தையின் உள்ளத்தில் கவலை, பயம், நம்பிக்கையின்மை, விரக்தி போன்ற பண்புகள் தோன்றுகின்றன.*

ஒருவனுடைய தவறான நடத்தை அவனது ஆளுமைகளை வெகுவாகப் பாதிக்கிறது. ஒருவனுடைய எரிச்சல் நடத்தை அவனது அச்சத்திற்கும் கோபத்திற்கும் குறை கூறும் பழக்கத்திற்கும் தூண்டப்படுகிறது. தங்களைச் சூழ்ந்து காணப்படும் பெற்றோர், உறவினர், நண்பர், ஆசிரியர் போன்றோரின் குண இயல்புகளின் மூலம் பாதிக்கப் படுவதால் குழந்தைகளிடம் பல்வேறு நடத்தைகள் தோன்றுகின்றன.

குழந்தைகள் பெறும் சுற்றுப்புறச் சூழ்நிலை, கல்வி, படிக்கும் நூல்கள், இலட்சிய மனிதர்களாக ஏற்றுக்கொள்ளும் தலைவர்களின் கருத்துக்கள், வாழ்க்கை வரலாற்றுச் சம்பவங்கள் ஆகியவை இவர்களின் பல்வேறுபட்ட நடத்தைக்கும் காரணங்களாக அமைகின்றன.

குழந்தைகள் வளரும்போது பலவிதமான நோய் பாதிப்புக்கள், மனவேதனைகள், ஏமாற்றங்கள், தோல்விகள், விரக்திகள் போன்றவற்றால் தாக்கப்படுகின்றனர். சில குழந்தைகளுக்கு இத்தகைய அனுபவங்கள் மனவுறுதியை அளித்து, வாழ்க்கையில் தன்னம்பிக்கையும், துணிச்சலும், தனித்திறனும் ஏற்பட வாய்ப்பாக அமைகின்றன. மற்ற குழந்தைகளோ எதிர்மறையான சூழலில் ஏற்படும் மனச்சோர்வின் காரணமாக வாழ்க்கையில் பிடிப்பும், நம்பிக்கையும் இழந்து சிடுசிடுப்பும், ஆவேச உணர்வும் கொண்டவர்களாக மாறிவிடுகின்றனர்.

## தொகுப்புரை

- *குழந்தை உளவியலின் மூலமாகக் குழந்தையின் தோற்றம், வளர்ச்சி, நிலை ஆகியன பற்றி அறிந்து கொள்ள இயலும் குழந்தையின் வயது தீர்மானிக்கப்படுகிறது.*
- *தாய் – குழந்தை உறவின் மூலமாகத் தாய், குழந்தையின் மீது கொண்டுள்ள அதிக ஈடுபாட்டினையும், நெருக்கமான உறவுப் பிணைப்பினையும் அறிந்துகொள்ள இயலும்.*
- *குழந்தைதன்னுடைய உடல் சார்ந்த தேவைகளை நிறைவேற்றுவதற்காகவும், பாதுகாப்பிற்காகவும், பிறரைச் சார்ந்திருக்கும் நிலையினைப்பெறுகிறது.*
- *தாய் குழந்தைக்குப் பாடும் தாலாட்டின் மூலமாக தாயின் குழந்தைப் பருவ உணர்வுகள், எண்ணங்கள், ஏக்கங்கள், இலட்சியங்கள், நம்பிக்கைகள் போன்றவை வெளிப்படுகின்றன.*
- *தாய் பாடும் தாலாட்டானது குழந்தையின் பிற்கால வளர்ச்சிக்குத் தூண்டுதலாக அமைகிறது.*
- *குழந்தையின் ஐம்புலன் உணர்வின் மூலமாகப் படிப்படியான மனவளர்ச்சியினையும் அதன் செயல்பாடுகளையும் அறிந்துகொள்ள இயலும் இதனால் குழந்தைக்கு இப்பருவத்தில் ஏற்படும் புலனுணர் குறைபாடுகளை அறியமுடிகிறது.*
- *குழந்தைப் பருவச் செயற்பாட்டின் மூலமாகக் குழந்தை பிறரின் செயலைப் பார்த்துப் 'போலச் செய்தல்' பண்பினைப் பின்பற்றுகிறது. இத்தகைய பண்பினால் குழந்தை தனது உடல், உள்ளத் தேவைகளை நிறைவு செய்து கொள்கிறது.*
- *குழந்தைப் பருவத்தில் ஏற்படும் மனவளர்ச்சியானது அதனுடைய பிற்கால வாழ்வினைத் தீர்மானிப்பதிலும், ஆளுமை வளர்ச்சியிலும் முக்கிய பங்கு வகிக்கிறது.*
- *பெற்றோர் குழந்தையின் மீது செலுத்தும் அன்பு அதன் பிற்கால வளர்ச்சிக்கு ஏதுவாக அமைகிறது. அதே சமயம் பெற்றோரின் அதிகக் கண்டிப்பும், அதிகாரம் செலுத்தும் நிலையும் குழந்தையின் மனநிலை பாதிப்பிற்குக் காரணங்களாக அமைகின்றன என்பது தெளிவு.*

# சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.571
2. மேலது., நூ.577
3. மேலது., நூ.577
4. மேலது., நூ.113
5. மேலது., நூ.1168
6. வ. சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.505
7. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.212
8. வ. சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.505
9. குறுந்தொகை, பா.366
10. ஐங்குறுநூறு, பா.10
11. மு. இராசமாணிக்கம், உளவியல் துரைசாமி (தொகுதி I & II ) பக்.2
12. B.C. Bhatias Miss Margaretta Graig, Elements of Psychology, P,.69
13. ஸ்ரீனிவாசன் , ராமலிங்கம், பயன்தரும் மனோதத்துவம், ப.16
14. தா. ஏ. சண்முகம் (க.ஆர்), கு.பகவதி (ப.ஆர்), திறனாய்வு அணுகுமுறை, ப.92
15. மு. இராசமாணிக்கம், உளவியல் துறைகள், (தொகுதி I & II ) பக்.92
16. செ. இலக்குவன், உளவியல் நிபுணர் கையேடு, ப.14
17. அ.நா. பெருமாள் (க.ஆர்), கு. பகவதி, (ப.ஆர். ), திறனாய்வு, அணுகுமுறை, ப.101
18. தா.ஏ. சண்முகம், (க.ஆர். கு.பகவதி, (ப.ஆர்.), உளவியல், ப.12
19. அ. நா. பெருமாள், (க.ஆர்), கு. பகவதி, (ப.ஆர்), திறனாய்வு அணுகுமுறைகள், ப.101
20. மேலது., ப.103
21. மேலது.,104
22. மேலது.,105
23. மேலது.,111
24. மேலது.,111
25. மேலது.,111
26. மேற்கோள் க. விஜயன், மேலாண்மை பொன்னுச்சாமி படைப்புக்களில் சமூகப் பார்வை, வெளியிடப்படாத பி.எச்.டி ஆய்வேடு 1999, ப.53
27. புறநானூறு 68, வரிகள் 1-7
28. ஐங்குறுநூறு
29. அகோல்கர், சமூக உளவியல் ப.204
30. அ. வி. பெத்ரோவ்ஸ்கி (பதி.ஆ), பருவ மற்றும் கல்வி உளவியல், ப.57

31. மு. இராசமாணிக்கம், உளவியல் துறைகள், தொகுதி இரண்டு, ப.434
32. அ. அகமதுபஷீர், குழந்தை இலக்கியத் திறனாய்வு, ப.59
33. அகோல்கர் மு.நூ., ப.205
34. புறநானூறு, பா.5, வரிகள் 1-2
35. மேலது., பா.279, வரிகள் 3-5
36. திருக்குறள், 69
37. சூளாமணி, பா.413, வரிகள் 1-4
38. மேற்கோள், மு. சுதாகர், உளவியல் நோக்கில் தாலாட்டு, மதுரை காமராசர் பல்கலைக்கழக வெளியிடப் பெறாத எம்ஃபில் ஆய்வேடு 2003 ப.17
39. மு. அருணாசலம் மு.நூ.ப.6
40. மு. இராசமாணிக்கம் மு. நூ. தொகுதி ஒன்று, ப.22
41. புறநானூறு, பா.44, வரிகள் 6-7
42. மாணிக்க வாசகர் திருமுறைகள், ப.
43. மு. வரதராசன் இலக்கிய ஆராய்ச்சி, ப.7
44. நற்றிணை.பா.324, வரிகள் 1-7
45. வாழ்வியற்களஞ்சியம் மு.நூ, ப.734
46. மேற்கோள், சூரியன், குழந்தை வளர்ப்பு முறைகள், ப.20
47. அகோல்கர் மு.நூ.ப.3
48. மேலது., ப.97
49. டி. ஜெர்சில்ட், குழந்தை உளவியல் தொகுதி ஒன்று, ப.4
50. மேற்கோள் ச. கைலாசபதி சமூகவியலும் இலக்கியமும் ப.21
51. திரு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் பிராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.392
52. மேலது., ப.382
53. அகோல்கர், மு.நூ.ப.186
54. டி. ஜெர்சில்ட் மு.நூ.ப.3
55. மேற்கோள் இரா. காஞ்சனா, இலக்கியமும் உளவியலும், ப.100
56. நற்றிணை, பா.166, வரிகள் 6-10
57. பழமொழி,332, வரி.1-4
58. தி. கு. இரவிச்சந்திரன், (மொ. ப), சிக்மண்ட் ஃபிராய்டு, உளப்பகுப்பாய்வு அறிவியல், பக்.396-397
59. க. அருணாசலம், மு.நூ.ப. 2
60. புறநானூறு, பா.178, வரிகள் 1-6

*61. மேலது., பா.382, வரி.9-13*

*62. பரிசுத்த வேதாகமம், நீதிமொழிகள் 22: 6, ப.782*

*63. (ஆ.இ) 'புதுயுகக் குழந்தைகளை வளர்ப்பது எப்படி), இந்தியா டுடே ஜூன்16, 2004 ப.30*

*64. மேலது., பா.196, வரிகள் 6-11*

*65. சிவசங்கரி, சிவசங்கர் கதைகள், தொகுதி இரண்டு, ப.87*

*66. க. சிவநேசன், தி. ஜானகிராமன் படைப்புகளில் பாலியல் சிக்கல்கள், மதுரை காமராசர் பல்கலைக் கழக வெளியிடப்படாத பி.எச்.டி ஆய்வேடு, 2005, ப.66*

*67. பழமொழி, 364, வரிகள் 1-4*

# முடிவுரை

எட்டுத்தொகை நூல்களில் குழந்தைகள் பற்றிய செய்திகள் அதிகமாக பதிவு செய்யப்பட்டுள்ளன. குழந்தைகளுக்கான இலக்கியங்களைப் படைக்க பொறுமை, பொறுப்பு, புலமை போன்ற பண்புகள் இருக்க வேண்டும். தொல்காப்பியத்தில் குழந்தைப் பாடல்களுக்கு வழிவகுக்கும் கூறுகளாகப் பிள்ளைத்தமிழ், உலா, பிசி மற்றும் வாய்மொழி, கற்பனைக் கதைகள் ஆகியவை இடம்பெற்றுள்ளன.

குழந்தையைப் பேணுதல், திணைநிலை மற்றும் பிற குழந்தைகளின் வளர்ப்பு, வீரயுகத்தில் ஆண் குழந்தைகளின் வளர்ப்பு, நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் ஆகிய தலைப்புகளில் சங்க இலக்கியத்தில் குழந்தைகள் பற்றிய விளக்கங்கள் ஆராயப்பட்டுள்ளன. குழந்தைப்பேறு, குழந்தை இயல்பு, குழந்தை உணவு, அறிவுறுத்தலும் அச்சுறுத்தலும், அணிகலன்கள், அக வாழ்வில் ஊடல் தீர்க்கும் வாயில், பயிற்றுவித்தல் போன்றவை சங்க இலக்கியங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளமையை சுட்டிக்காட்டி விளக்கப்பட்டுள்ளன.

குடும்ப வாழ்விற்கும் சமூக அங்கீகாரத்திற்கும் குழந்தைப்பேறு இன்றியமையாத ஒன்றாய் விளங்கியதையும் மேலும் குழந்தைகளின் முக்கிய உணவாகத் தாய்ப்பால் அமைந்திருந்தது என்பதைச் சங்கப் பாடல்கள் வழி அறிய முடிகிறது. இன்றைய நிலையில் குழந்தைக்குத் தாய்ப்பாலின் அவசியத்தைக் காட்டுகிறது. தங்களின் செல்வ நிலைக்கு ஏற்ப குழந்தைகளுக்கு அணிகலன்களை அணிவித்து மகிழ்ந்தனர் என்பது அறியலாகிறது.

வேடர், கானக்குறவர், ஆயர், பரதவர், உழவர், தச்சர், பாணர் ஆகியோர் தங்களின் குழந்தைகள் பிற்காலத்தில் அவர்களது வாழ்வைச் செம்மையாக அமைத்துக் கொள்ள உதவும் வகையில் சிறு வயது முதலே குழந்தைகட்குத் தங்கள் தொழிலைக் கற்றுக் கொடுத்து, அதில் பழக்கி வளர்த்துள்ளனர்.

வேட்டுவக் குழந்தைகள் தங்கள் தாய்க்கு உதவும் வகையில் வேட்டைத் தொழிலில் பழக்கி வளர்க்கப்பட்டார்கள் என்பதை அறிய முடிகிறது. கானக்குறவர்கள் தங்கள் குழந்தைகளை இளவயது முதலே அச்சமின்றி, தினைப்புனத்தைக் காவல் காக்கும் தொழிலில் ஈடுபடுத்தி வளர்த்தமையை அறிய முடிகிறது. ஆயர்கள் தங்கள் பெண் குழந்தைகளை வீட்டின் அகத்துள்ளேயும்

ஆண் குழந்தைகளை வீட்டின் வெளியேயும் தம் தொழிலுக்கு உதவும் வண்ணம் பழக்கி வளர்த்தனர். பரதவர்களின் ஆண் குழந்தைகள் மீன் பிடி தொழிலைக் கற்று, அத்தொழிலில் சிறந்தவர்களாக விளங்கும் வண்ணம் வளர்க்கப்பட்டார்கள்.

பெண் குழந்தைகள் மீன்களை காய வைத்தல், உணவு சமைத்தல் போன்ற தொழிலில் பழக்கி வளர்க்கப்பட்டார்கள். உழவர்களின் குழந்தைகள் தெருக்களில் பூவிற்றுத் தங்கள் பொருளாதாரத்தைப் பெருக்கிக் கொள்ளும் வகையில் வளர்க்கப்பட்டார்கள். தச்சர்கள் தங்கள் குழந்தைகளைத் தச்சுத் தொழில் பழக்கி வளர்த்ததையும், பாணர்கள் தங்கள் பெண் குழந்தைகளை மீனை விற்று அதற்குப் பதிலாக நெல்லைப் பெற்று வரும் செய்திகளும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

வீரயுகத்தில் மறக்குடி சார்ந்த பெற்றோர் தங்கள் ஆண் குழந்தைகளை குழந்தைப் பருவம் முதலே வீரமூட்டி வளர்த்தார்கள். இளமையிலேயே போரில் ஈடுபடும் வண்ணம் அவர்களது வளர்ப்பு அமைந்திருந்தது. மேலும் வீரயுகத்தில் மறக்குடித் தாயர், தங்கள் குழந்தைகள் போரில் ஈடுபட்டு வீரமரணம் அடைந்தார்கள் என்ற செய்தியைக் கேட்டுப் பெருமகிழ்ச்சி அடைந்தார்கள் என்பதற்கான சான்றும் முன்வைக்கப்பட்டுள்ளது.

பிறந்த குழந்தையைப் பேய் தீண்டாமலிருக்க ஐயவி எனும் வெண்கடுகைத் தூவிய செய்தியும் மணமக்களை வாழ்த்துதற்கு புதல்வர்களைப் பெற்றவர்களே உரியவர்கள் என்பதனையும் தம் முன்னோர் தொடங்கிய நற்செய்கைகளைத் தமக்குப் பின்னும் தொடர்ந்து செய்தற்குரியவர்கள் தம் புதல்வர்களே போன்ற அக்கால மக்களின் சடங்கு சார்ந்த நம்பிக்கை விளக்கப்பட்டுள்ளது. ஆண்கள் தம் குழந்தைகளுக்குத் தம் தந்தையரின் பெயரை இடுதல் குழந்தைகட்கு ஐம்படைத்தாலி அணிவித்தல், குழந்தைகளுக்குக் குடுமி வைத்தல், மகப்பேறு பெற்ற பெண்ணுக்குத் தனி கட்டில் அமைத்தல், போன்றவை அக்கால மக்களின் பழக்க வழக்கங்களாக இருந்தன.

விளையாட்டென்பது குழந்தைகளின் ஆளுமை உருவாக்கத்திற்குரிய அடிப்படையாக அமைந்துள்ளது. சிறாரின் விளையாட்டுக்கள் அவர்கட்குப் பொழுதுபோக்காக அமைவதுடன் அவர்களது மனம், அறிவு மற்றும் உடல் வளர்ச்சியில் சிறந்த பங்கினையும் ஆற்றுகின்றன. குழந்தைகளின் ஒட்டு மொத்த வளர்ச்சிக்கு விளையாட்டு வழி செய்வதை அறிய முடிகின்றது.

*திணைநிலை மற்றும் பிறகுடிக் குழந்தைகளின் விளையாட்டுக்கள் அந்தந்த நிலத்தைச் சார்ந்தும், தொழிலைச் சார்ந்தும் அமைந்துள்ளன. ஆண் குழந்தைகளின் விளையாட்டுக்கள் அவர்களது தொழில் சார்ந்தவையாக அமைந்துள்ளன. ஆண் குழந்தைகளின் இயக்கமும் இடப் பெயர்வும் இவற்றில் உள்ளன. சுருங்கக் கூறின் ஆண்மைக்குரிய இயல்புகளை வளர்க்கும் பட்டறைகளாக இவ்விளையாட்டுக்கள் தென்படுகின்றன. பெண் குழந்தைகளின் விளையாட்டுக்கள் வீடு, அடிசில் ஆடுதல், குழந்தை வளர்ப்பு, நீராட்டு, ஊசலாட்டு (களிப்பு), பொழுது போக்கு, அழகு ஒப்பனை ஆகியவற்றோடு தொடர்புடையனவாக உள்ளன.*

*ஆண் - பெண் குழந்தைகளின் விளையாட்டுக்கள் அவர்களுக்குரிய வெவ்வேறு சமூக பாத்திரங்களை உருவாக்கின என்று கூறலாம். விளையாட்டுக்கள் ஆண் குழந்தைகளைச் சமூக செயல்பாட்டுக்கு உரியவர்களாகவும், பெண் குழந்தைகளை இல்லறச் செயல்பாட்டுக்கு உரியவர்களாகவும் ஆக்கவல்லனவாகத் திகழ்ந்துள்ளது.*

*தாய் குழந்தைக்குப் பாடும் தாலாட்டின் மூலமாக தாயின் குழந்தைப் பருவ உணர்வுகள், எண்ணங்கள், ஏக்கங்கள், இலட்சியங்கள், நம்பிக்கைகள் போன்றவை வெளிப்படுகின்றன. தாய் பாடும் தாலாட்டானது குழந்தையின் பிற்கால வளர்ச்சிக்குத் தூண்டுதலாக அமைகிறது. குழந்தையின் ஐம்புலன் உணர்வின் மூலமாகப் படிப்படியான மனவளர்ச்சியினையும் அதன் செயல்பாடுகளையும் அறிந்துகொள்ள இயலும் இதனால் குழந்தைக்கு இப்பருவத்தில் ஏற்படும் புலனுணர் குறைபாடுகளை அறியமுடிகிறது.*

*குழந்தைப் பருவச் செயற்பாட்டின் மூலமாகக் குழந்தை பிறரின் செயலைப் பார்த்துப் 'போலச் செய்தல்' பண்பினைப் பின்பற்றுகிறது.*

# துணைநூற்பட்டியல்

## அ. மூலநூல்கள்


1. **முனைவர். அ. விசுவநாதன், (உ.ஆ).,** : ***அகநானூறு,*** *(1957), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்., சென்னை. இரண்டாம் பதிப்பு 1981.*

2. ,, : ***ஐங்குறுநூறு,*** *(1957), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்., சென்ளை. இரண்டாம் பதிப்பு 1981.*

3. ,, : ***கலித்தொகை,*** *(1957), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்., சென்னை. இரண்டாம் பதிப்பு 1981.*

4. ,, : ***குறுந்தொகை,*** *(1957), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்., சென்னை. இரண்டாம் பதிப்பு 1981.*

5. ,, : ***நற்றிணை,*** *(1957), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்., சென்னை, இரண்டாம் பதிப்பு 1981.*

6. ,, : ***பத்துப்பாட்டு,*** *(1957), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்., சென்னை. இரண்டாம் பதிப்பு 1981.*

7. ,, : ***பதிற்றுப்பத்து,*** *(1957), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்., சென்னை. இரண்டாம் பதிப்பு 1981.*

8. ,, : ***பரிபாடல்,*** *(1957), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்., சென்னை. இரண்டாம் பதிப்பு 1981.*

9. ,, : ***பாட்டும் தொகையும்,*** *(1957), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்., சென்னை. இரண்டாம் பதிப்பு 1981.*

## ஆ. துணைநூல்கள்


1. **அண்ணாமலை** : **வே., சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம்,** *(தொகுதி ஒன்று), மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம். பதிப்பு - 2000*

2. **அண்ணாமலை** : **வே., சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம்,** *(தொகுதி இரண்டு), மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம். பதிப்பு - 2000.*

3. **அந்தோனிஸ்டோர், மணி, சி.,** : **ஃபிராய்ட்,** *(மிகச்சுருக்கமான அறிமுகம்) அடையாளம் வெளியீடு, கருப்பூர்சாலை, புத்தாநத்தம் - 613 310.*

4. **அமிர்தலிங்கம்** : **சு., சங்க இலக்கியக் களஞ்சியம்,** *(மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம். பதிப்பு - 2000*

5. **ஆபிரகாம், ஜே.எஸ்.,** : **உளவியல் ரீதியாக உருவாகும் நோய்கள் ஒரு விளக்கம்,** *நர்மதா பதிப்பகம், சென்னை, மு.ப. 2003.*

6. **இரவிச்சந்திரன், தி.கு.** : **சிக்மண்ட் ஃபிராய்ட் உளப்பகுப்பு அறிவியல்,** *அலைகள் வெளியீட்டகம், சென்னை-24.*

7. **இராமநாதன் செட்டியார் லெ.ப.கரு.,** : **எட்டுத் தொகைச் செல்வம்,** *முத்தையா நிலையம், சென்னை. 1973*

8. **இராமநாதன் செட்டியார் லெ.ப.கரு.,** : **(1957), சங்க காலத் தமிழர் வாழ்வு,** *வெள்ளையன் பதிப்புக் கழகம், இராமநாதபுர மாவட்டம், இரண்டாம் பதிப்பு. 1958.*

9. **இலக்குவன், செ.** : ***உளவியல் நிபுணர் கையேடு,***
*திருக்குறள் பதிப்பகம்,*
*எம்.ஜி.ஆர். நகர்,*
*சென்னை- 78,*
*மு.ப. 2003.*

10. **இளங்கோ, நா.,** : ***மலடியும் மழலையும்,***
*மீனா புத்தக நிலையம்,*
*விழுப்பும்.*
*1985.*

11. **இளஞ்சேரன், கோவை.,** : ***இலக்கியம் ஒரு பூக்காடு,***
*இராக்ஃபோர்டு பப்ளிகேஷன்,*
*சென்னை.1982*

12. **இளவழகனார் (வி.ஊ.,)** : ***(1945), சங்க இலக்கிய இன்கவித் திரட்டு,***
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ*
*சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*திருநெல்வேலி ,*
*இரண்டாம் பதிப்பு.*
*1953.*

13. **கதிர்முருகு, டாக்டர்.** : ***சங்க இலக்கியம்,***
*பத்துப்பாட்டு மூலமும் உரையும்,*
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை,*
*மு.ப. 2009.*

14. **கந்தையா, ந.சி. (உ.ஆ)** : ***செவ்விலக்கியக் கருவூலம்,***
*(சங்க இலக்கியம்)*
*தமிழ்மண் அறக்கட்டளை,*
*சென்னை-17,*
*மு.ப.2008.*

15. **கலியாணசுந்தரம், தொ.,** : ***சங்க அகப்பாடல்களில்***
***உணர்வுப் பேராட்டம்,***
*நந்தி அச்சகம்,*
*கோயம்புத்தூர்.*
*1992.*

16. **குருசாமி, ம.ரா.போ.,** : ***சங்ககாலம்,***
*மெர்க்குரி புத்தக கம்பெனி,*
*கோயம்புத்தூர்.*
*இரண்டாம் பதிப்பு,*
*1967.*

17. **கோவிந்தராச முதலியார், கா.ரா., (ப.ஆ).,** : ***(ப.ஆ)., (1948), அகப்பொருள் விளக்கம்,***
*திருநெல்வேலித் தென்னிந்திய*
*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை.*
*பதினைந்தாம் பதிப்பு – 2001.*

18. **கோவிந்தன், கா.** : ***தமிழர் இலக்கியம்,***
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை – 2001.*

19. **கோவிந்தன், கா.,** : ***மருத நில மங்கை,***
*சஞ்சீவியார் பதிப்பகம், சென்னை – 1987.*

20. ***சக்திவேல், சு. டாக்டர்*** : ***நாட்டுப்புற இயல் ஆய்வு,***
*மணிவாசகர் பதிப்பகம், பாரிமுனை, சென்னை. மு.ப.1983.*

21. ***சசிவல்லி, வி.சி.,*** : ***பண்டைத் தமிழர் தொழில்கள்,***
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 1998.*

22. ***சண்முகப்பிள்ளை, மு., (ப.ஆ).,*** : ***(ப.ஆ)., (1998), தொல்காப்பியம் பொருளதிகாரம் - இளம்பூரணம்,***
*தொகுதி ஒன்று, முல்லை நிலையம், சென்னை. இரண்டாம் பதிப்பு – 2003.*

23. ***சண்முகப்பிள்ளை, மு., (ப.ஆ).,*** : ***(ப.ஆ)., (1995), தொல்காப்பியம் பொருளதிகாரம் - இளம்பூரணம்,***
*தொகுதி இரண்டு, முல்லை நிலையம், சென்னை. இரண்டாம் பதிப்பு – 2002.*

24. ***சண்முகப்பிள்ளை, மு., (ப.ஆ).,*** : ***(ப.ஆ)., (1998), தொல்காப்பியம் பொருளதிகாரம் - இளம்பூரணம்,***
*தொகுதி மூன்று, முல்லை நிலையம், சென்னை. இரண்டாம் பதிப்பு – 2003.*

25. ***சந்திரசேகரன், கா.பெ.,*** : ***சங்க தமிழ் இன்பம்,***
*சேகர் பதிப்பகம், சென்னை. 2006.*

26. ***சரளா இராசகோபாலன்,*** : ***குறுந்தொகை ஓர் அறிமுகம்,***
*ஒளிப்பதிப்பகம், சென்னை. 1989.*

27. **சாம்பசிவம், ச.,** : **தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை,**
*மீனாட்சி புத்தக நிலையம்,*
*மதுரை.*
*1964.*

28. **சிதம்பரனார், சாமி.,** : **எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்,**
*ஸ்டார் பரிசுரம்,*
*சென்னை.*
*1987.*

29. **சிதம்பரனார், சாமி.,** : **பத்துப்பாட்டும் பண்டைத் தமிழகமும்,**
*ஸ்டார் பிரசுரம்,*
*சென்னை.*
*1956.*

30. **சிந்தா நிலாதேவி,** : **ஓங்கு பரிபாடல்,**
*சங்கீதம் பதிப்பகம்,*
*புதுச்சேரி.*
*2004.*

31. **சிவகாமசுந்தரி, சு.,** : **சங்க இலக்கியம் விளையாட்டுக் களஞ்சியம்,**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்.,*
*சென்னை.*
*1995.*

32. **சிவகாமி. ச.,** : **சங்கத் தமிழியல்,**
*மாதவி பதிப்பகம்,*
*சென்னை - 1999.*

33. **சிவராஜ், து.,** : **சங்க இலக்கியத்தில் உளவியல்,**
*சிவம் பதிப்பகம்,*
*வேலூர்-632 002.*
*மு.ப.2004.*

34. **சுந்தரமூர்த்தி, கு., (ப.ஆ).,** : **(1989), தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம்,**
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,*
*சிதம்பரம்.*
*1996.*

35. **சுப்பிரமணியன், அ.வெ.,** : **சங்கப்பாட்டில் குறியீடு,**
*ராஜராஜன் பதிப்பகம்,*
*சென்னை.*
*2000.*

36. **சுப்புரெட்டியார், நா.,** : **காதல் ஓவியங்கள்,**
*பழனியப்பா பிரதர்ஸ்,*
*சென்னை.*
*1961.*

37. **சௌந்தரபாண்டியன், எஸ்.,** : ***தமிழில் பிள்ளைத் தமிழ் இலக்கியம்,***
*ஸ்டார் பிரசுரம்,*
*சென்னை.*
*1989.*

38. **தட்சிணாமூர்த்தி, அ.,** : ***தமிழர் நாகரிகமும் பண்பாடும்,***
*வெற்றிச் செல்வி வெளியீட்டகம்,*
*தஞ்சாவூர்.*
*1980.*

39. **தாணம்மாள், இல.,** : ***சங்க இலக்கிய மலர்கள்,***
*வானதி பதிப்பகம்,*
*சென்னை.*
*1981.*

40. **தமிழண்ணல்,** : ***சங்க இலக்கிய ஒப்பீடு, (முதற்பாகம்)***
*இலக்கிய வகைகள்,*
*மீனாட்சி புத்தகநிலையம்,*
*மதுரை.*

41. **துரைசாமிப்பிள்ளை, ஔவை., சு.,** : ***தமிழ்த்தாமரை,***
*வள்ளுவர் பண்ணை,*
*சென்னை.*
*1977.*

42. **துரைசாமிப்பிள்ளை, ஔவை., சு.,** : ***புறநானூறு,***
*தொகுதி ஒன்று,*
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*திருநெல்வேலி. 1967.*

43. **தெசிணி,** : ***குறுந்தொகை இன்பம்,***
*கார்த்திக் பதிப்பகம்,*
*சென்னை.*
*2002.*

44. **நஞ்சுண்டன், தொ.இரா.,** : ***காப்பியங்களில் விளையாட்டுக்கள்,***
*அம்மன் புக் கம்பெனி,*
*கோயம்புத்தூர்.*
*1991.*

45. **பகவதி, கு., (ப.ஆ)** : ***திறனாய்வு அணுகுமுறைகள்,***
*உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை-113,*
*மு.ப.1989.*

46. **பாலசுந்தரம் பிள்ளை, தி.சு., (வி.உ).,** : ***சங்க இலக்கிய இன்கவித்திரட்டு,***
*முதற்பாகம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி.*
*1901.*

47. **பாலசுப்பிரமணியன், கு.வெ.,** : ***சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்,***
*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர்.*
*1994.*

48. **பாலசுப்பிரமணியன், சி.,** : ***இலக்கிய அணிகள்,***
*பாரி நிலையம்,*
*சென்னை. 1972.*

49. **மகாதேவன், கதிர்.,** : ***ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம்,***
*மேக்மில்லன் இண்டியா லிமிடெட்,*
*சென்னை. 1985.*

50. **மகாதேவன், கதிர்.,** : ***பழந்தமிழர் வீரப்பண்பாடு,***
*இலட்சுமி வெளியீடு,*
*மதுரை. 1936.*

51. **மாணிக்கம், வ.சுப.,** : ***தமிழ்க்காதல்,***
*மெய்யப்பன் தமிழாய்வகம்,*
*சிதம்பரம் - 608 001,*
*மு.ப.மே.2002.*

52. **முத்தையா, சு.,** : ***சங்க கால மறவர் - ஒரு சமூவியல் பார்வை,***
*காவ்யா, பெங்களூர்.*
*1998.*

53. **ராஜ்கௌதமன்,** : ***பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்,***
*தமிழினி,*
*சென்னை – 2006.*

54. **வரதராசன், மு.,** : ***நெடுந்தொகைச் செல்வம்,***
*பாரிநிலையம்,*
*சென்னை.*
*1954.*

55. **வரதராசன், மு.,** : ***இலக்கியத்திறன்,***
*பாரி நிலையம்,*
*சென்னை-108,*
*ம.ப.2000.*

56. **வளவன், சா.,** : ***பிள்ளைத் தமிழின் தோற்றமும் வளர்ச்சியும்,*** *அண்ணா நகர், சென்னை. 1997.*

57. **வாசுகி, இராஜாராம்,** : ***கழங்காடல் ஒரு சமூகவியல் பார்வை,*** *மீனா புத்தகப் பண்ணை, விழுப்புரம். 2003.*

58. **வித்தியானந்தன், சு.,** : ***தமிழர் சால்பு – சங்க காலம்,*** *தமிழ் மன்றம், கண்டி. 1954.*

59. **வெள்ளைவாரணன். க.,** : ***சங்க காலத் தமிழ் மக்கள்,*** *நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, சென்னை – 1950.*

**கட்டுரைகள்**

1. ***அருணாசலம்பிள்ளை, மு.,*** : ***நெய்தல், ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்,*** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1955.*

2. ***ஆறுமுக முதலியார்., எஸ்.,*** : ***முல்லை அகநானூற்றுச் சொற்பொழிவுகள்,*** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1956.*

3. ***இரத்தினம், கா.பொ.,*** : ***நெய்தல் அகநானூற்றுச் சொற்பொழிவுகள்,*** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1956.*

4. ***இராமநாதன், சுப.,*** : ***குறிஞ்சி, ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்,*** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1955.*

5. ***இலக்குவனார், முருக.,*** : ***பாலை, அகநானூற்றுச் சொற்பொழிவுகள்,*** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1956.*

6. **கந்தசாமி கவிராயர், மு.ரா.,** : **பெரும்பாணாற்றுப்படை, பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள்,**
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1957.*

7. **குமாரசாதி ஐயர், வீ.,** : **முல்லை, ஐங்குறு நூற்றுச் சொற்பொழிவுகள்,**
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1955.*

8. **சிவகுருநாதன், இ.,** : **குறிஞ்சி, அகநானூற்றுச் சொற்பொழிவுகள்,**
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1956.*

9. **ஞானசம்பந்தம், அ.ச.,** : **இலக்கியப்பண்பு, புறநானூறும் தமிழரும்,**
*சக்தி காரியாலயம், சென்னை – 1957.*

10. **தாயம்மாள் அறவாணன்,** : **சங்க இலக்கியத்தில் குழந்தை,**
*ச. அகத்தியலிங்கம், ஏ. ஞானமூர்த்தி, வே. சுப்பிரமணியன், மெ. சுந்தரம் (ப.கு), ஐந்தாவது ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக்கழக தமிழாசிரியர் மன்றம் வெளியீடு, மதுரை – 1973.*

11. **மாயாண்டி பாரதி, கா.,** : **சிறுபாணாற்றுப்படை, பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள்,**
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1957.*

12. **வேங்கடாசலபிள்ளை, ஆர்.,** : **தலைமையுரை, அகநானூற்றுச் சொற்பொழிவுகள்,**
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1956.*

**களஞ்சியங்கள்**

*1.* **வாழ்வியற் களஞ்சியம்** : ***தொகுதி, இரண்டு,***
*தமிழ்ப் பல்கலைக் கழகம்,*
*தஞ்சாவூர். 1991.*

*2.* **வாழ்வியற் களஞ்சியம்** : ***தொகுதி ஏழு,***
*தமிழ்ப் பல்கலைக் கழகம்,*
*தஞ்சாவூர். 1991.*

*3.* **வாழ்வியற் களஞ்சியம்** : ***தொகுதி எட்டு,***
*தமிழ்ப் பல்கலைக் கழகம்,*
*தஞ்சாவூர். 1991.*

**இதழ்**

**1.** **செந்தமிழ்ச் செல்வி.,** : ***திங்கள் இதழ்,***
*சுப்பையா பிள்ளை, வா.,*
*நிறுவனர்,*
*மே.1980.*

**ஆய்வேடுகள்**

*1.* ***கல்பனா, ஊ.,*** : ***சங்க இலக்கியத்தில் மீனவர்கள்,***
*இளமுனைவர் பட்ட ஆய்வேடு,*
*புதுவை அரசு,*
*காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையம்,*
*2002.*

*2.* ***வாசுகி, வா.,*** : ***மருதத் திணைநில மாந்தர்,***
*இளமுனைவர் பட்ட ஆய்வேடு,*
*புதுவை அரசு,*
*காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையம்,*
*2006.*

*3.* ***ஜனார்த்தனன், ர.,*** : ***சங்க இலக்கியத்தில் உணவு,***
*இளமுனைவர் பட்ட ஆய்வேடு,*
*புதுவை அரசு,*
*காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையம்,*
*2006.*

**அகராதிகள்**

1. ***கதிரை வேற்பிள்ளை. நா.,*** : ***தமிழ்மொழி அகராதி,***
*கௌமாரீஸ்வரி, எஸ்., (ப.ஆ).,*
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை. 2003.*

2. ***தமிழ் லெக்சிகன்*** : ***தொகுதி நான்கு,***
*சென்னைப் பல்கலைக் கழகம். 1982.*

3. ***வாழ்வியற் களஞ்சியம்*** : ***தொகுதி -7, தமிழ்ப் பல்கலைக் கழகம்,***
*தஞ்சாவூர்.*

**ஆங்கில நூல்**

**Bhatia, B.D., & Margaretle Miss.,** - Elements of Psychology and Mental Higiene for Nurses In India,
Oriental Longlene Limited,
1/24, Asafali Road,
New Delhi – 110002 ,
Re Printed - 1995.